# பொருளடக்கம்

# முகவுரை

இந்திய மொழிகளில் பக்தி இலக்கியங்கள் மிகுந்த செல்வாக்கைப் பெற்றுள்ளன. அதுபோன்றே தெலுங்கு, தமிழ் இலக்கியங்களில் சைவ, வைணவ மற்றும் பிற நூற்களும் இலங்குகின்றன. அடிப்படைச் சமய தத்துவ உண்மைகள் யாவும் ஒன்றன் அடிப்படையில் அமைந்திருப்பினும்; இடத்திற்கும், காலச் சூழ்நிலைக்கும், சமூக வாழ்விற்கும் ஏற்பச் சில மாறுதல்களையும் தமக்கேற்பச் செய்து கொண்டன. அதுபோன்றே அவற்றை இலக்கியங்களாக வடிக்கும் பான்மையும் மொழிக்குமொழி மாறுப்பட்டுள்ளன. சமய தத்துவ வழி நின்று ஒழுகிய, புகட்டிய சான்றோர் பற்றிய வரலாறுகளை எடுத்தியம் புவதிலும் வேறுபாடுகளும் ஒற்றுமைகளும் காணப்படுகின்றன. அவற்றை அறிவது பின்வரும் உண்மைகளைத் தெளிவுற மனங்கொளற்குத் துணையாயிருக்கும்.

1. சமய, தத்துவ ஒருமைப்பாடு, ஒற்றுமையும்
2. அடிப்படையான சமய தத்துவ உண்மைகள்
3. இலக்கிய நயங்கள்
4. காலச் சூழல்
5. சமூக வாழ்வியல் நிலைகள்
6. பண்பாடு, நாகரீக நிலைகள்
7. இலக்கியத்தையும் சமயத்தையும் அணுகி, நுகர்ந்து அடைந்த பேறுகள்.

8. இலக்கிய ஆசிரியர்தம் மனநிலையும், சமய சத்துவ உண்மைகளை எடுத்தியம்பிய முறைகளும்.

9 மக்களின் சமய தத்துவ வாழ்வு.

மேற்சுட்டிய உண்மைகளை அறியும் ஆர்வமே சமய இலக்கியங்களை ஆய்வதின் நோக்கமாகும் இதன் அடிப் படையில் தமிழ் தெலுங்கு இலக்கியங்களை ஒப்பிட்டு ஆய்வதே இங்கு நோக்கமாக உள்ளது.

தமிழில் சைவ இலக்கியங்கள் சிறப்புடன் திகழ்கின்றன. அவற்றுள்ளும் பன்னிரு திருமுறைகள் சைவத்திற்கும் அதன் சித்தாந்தத்திற்கும் சான்றாக அமைந்துள்ளன. பன்னிரண்டாம் திருமுறையாக இலங்கும் பெரியபுராணம் நாயன்மார்களின் வரலாற்றைப் புகலுவனவாயுள்ளது அதில் கண்ணப்பநாயனார் புராணம் என்பதும் ஒன்று இவ்வரலாறு இலைமலிந்த சருக்கத்தில் இடம் பெற்றுள்ளது நூற்று எண்பத்தொரு பாடல்களில் அவர் வரலாற்றை சேக்கிழார் புகன்றுள்ளார்.

தெலுங்கில் தூர்சடி (தூர்ஜடி) என்ற புலவர் 'காளத்தி மகாத்மியம்' என்ற நூலை எழுதியுள்ளார் அதில் நான்கு பகுதிகள் உள்ளன. அவற்றை 'ஆஸ்வாசமுலு' என்பர். அதில் மூன்றாவதாயுள்ள த்துருதி ஆஸ்வாசமு என்ற பகுதியில் கண்ணப்பர் வரலாறு நூற்று முப்பது பாடல்களில் கூறப்பட்டுள்ளது.

தமிழில் சேக்கிழார் இயற்றிய கண்ணப்ப நாயனார் புராணத்துடன் இன்னும் சிலர் அவர் வரலாற்றை எழுதியுள்ளனர்.1 தெலுங்கில் தூர்சடி எழுதிய கண்ணப்பர் வரலாற்றுடன். மேலும் ஓரிருவர் அவர் வரலாறு பாடியுள்ளனர். தெலுங்கில் உள்ள கண்ணப்பர் வரலாறு பற்றிய செய்திகள் தமிழில் காணலாகும் குறிப்புகளினும்

குறைவாகவே உள்ளன. நன்னெசோடு என்ற புலவர் குமார சம்பவமு என்ற நூலில் கண்ணப்பர் பற்றிய குறிப்பு வருகிறது. தேவார மூலங்களை அடிப்படையாகக் கொண்டு கஜாநணுடுவிரு என்ற நூல் எழுதப் பெற்றதாகவும் அதில் கண்ணப்பர் பற்றிய குறிப்பு வருவதாகவும் கூறப்படுகிறது. மேலும் வித்துவான் ஜி. திருவேங்கட சூரி என்பவர் இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் கண்ணப்பர் வரலாற்றை உரைநடையில் எழுதியுள்ளார். இக்குறிப்பு களை தெலுங்கில் கண்ணப்பர் பற்றிக் கிடைக்கின்றன.

தமிழில் கண்ணப்பர் வரலாற்றை மிக விரிவாக எடுத்தியம்புவது பெரிய புராணமே. அதற்கும் தூர்சடி எழுதிய கண்ணப்பர் வரலாற்றிற்கும் பல நிலைகளில் வேற்றுமைகளும் ஓரிரு ஒற்றுமைகளும் காணப்படுகின்றன. அவற்றை எடுத்துக்காட்டி ஆய்ந்து இயம்புவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

கண்ணப்பர் வரலாறுகளை ஒப்பிட்டு ஆயுமுன் அவ் வரலாறுகளை எழுதிய சேக்கிழார், தூர்சடி இவர்தம் வரலாறுகளையும் அவர்கள் நூற்களை எழுதக் காரணமா யிருந்த சூழ்நிலைகளையும் அறிவது இவ்வாய்விற்குப் பயனுடையதாயிருக்கும். எனவே அவர்தம் வரலாறுகள் சுருக்கமாக இங்குச் சுட்டப் பெறுகின்றன.

## சேக்கிழார் வரலாறு :

தொண்டை நாட்டில் புலியூர்க் கோட்டத்தைச் சேர்ந்த குன்றத்தூரில் சேக்கிழார் குடியில் பிறந்தவர். அருண்மொழித்தேவர் என்ற பெயருடன் வளர்ந்தார். பாலறாவாயர் இவர் சகோதரர். கல்வி கேள்விகளில் சிறந்திருந்தமையால் அனபாய சோழன் இவருக்கு 'உத்தம சோழப் பல்லவராயன்' என்ற பட்டத்தை அளித்து அமைச்சராக்கிக் கொண்டான். சீவக சிந்தாமணி யைக் கேட்டு வந்த மன்னனை சைவ அடியார் வரலாறுகள்

புகன்று நன்னெறிப்படுத்தினுர். மன்னனும் நாயன்மார் வரலாறுகளைப் புராணமாகப் பாடித்தருமாறு வேண்ட அருண்மொழித் தேவரும் பல இடங்கட்கும் சென்று பின் நூல் யாத்தார். அதனுல் அவருக்கு 'தொண்டர்சீர் பரவுவார்' என்ற பட்டமளித்துச் சிறப்பித்தான் மன்னன். இவர் சேக்கிழார் என்ற குடியில் தோன்றியதால் சேக்கிழார் என அழைக்கப்பட்டார். இவர் வாழ்ந்த காலம் பன்னிரண்டாம் நூற்ருண்டாகும்.

## தூர்சடி வரலாறு

தூர்சடி எழுதிய ஒரு பாடலால் அவர் தாயார் பெயர் சிம்கம என்றும் தந்தை பெயர் ஐக்கய மகன் நாராயணுடு என்றும் அறிய இயலுகிறது. இதைத் தவிர தூர்சடி தன்னைப் பற்றி ஏதும் எழுதவில்லை.

> 'இதி ஸ்ரீமத் காள ஹஸ்தீஸ்வர சரண கமல சேவாபராயணு
> சிம்கம ராமாநாராயணுடு ஐக்கய நாராயண தநுபூவ
> பவபராஞ்லீமுக தூர்ஜடி கவி பிராணீதம் பைந... ..'

என்ற இவ்வடிகள் தூர்சடியே எழுதியதாகக் கருதப் படுகிறது.

தூர்சடி என்ற பெயரால் பலர் இருந்ததாகக் கூறப் படுகிறது. அதில் எந்த தூர்சடி காளத்திமகாத்மியத்தை எழுதியது என்பதை ஆய்தல் வேண்டும். குமார தூர்சடி என்ற பெயர் கொண்ட ஒருவர் நிரேகிப்ராம்ணுடு என்றும், ஆபஸ்தம்ப சூத்ருடு என்றும், பரத்வாஜ கோத்ருடு, காளஸ்தி நிலயுடு என்றும், கிருஷ்ண தேவராய ரின் அவையை அலங்கரித்தவர் என்றும் தெரிகிறது. தூர்சடி கிருஷ்ணதேவராயரின் அவையில் புலவராயிருந்து சன்மானங்கள் பெற்று வாழ்ந்தவர் என்பதை விஸ்கராஜி கவி வேங்கடராய கவி என்ற அவரின் சமகாலத்துப் புலவர்கள் கூற்ருல் அறிய இயலுகிறது.

எனினும் தூர்சடியின் இல்லப் பெயர் அறியக் கூட வில்லை. மேற்சுட்டிய புலவர்களின் பாடல்களால் அவரின் வீட்டுப் பெயர் தூர்சடியே என்று உய்த்துணர இயலு கிறது. [2] வேங்கடகிரி சமஸ்தானத்தில் காளுரு என்னும் பகுதியில் தூர்சடி அம்மாபாலெமு எனும் கிராமம் உள்ளது. காளுரில் தூர்சடி வரதி என்ற வீட்டுப்பெயர் கொண்டவர்கள் இன்றும் உள்ளனர். அவர்களிடம் ஒரிரு சாசனங்கள் இன்றும் உள்ளன. [3]

தூர்சடியின் மூதாதையர்கள் தூர்சடி அம்மாபாலெமு என்னும் கிராமத்தில் வாழ்ந்தவர்கள் என்றும் இக்கிராமத் தின் பெயரே அவர்களின் இல்லப் பெயராய் வழங்கி யிருத்தல் கூடுமென்றும், தூர்சடி தம் குடும்பப் பெயராலேயே கிருஷ்ணதேவராயரின் அவையில் சிறந்து விளங்கியிருத்தல் கூடுமென்றும், அதனுல் அவரின் உண்மைப் பெயர் மறைந்து விட்டிருக்கலாமென்றும் வேங்கடார்யுடு குமார தூர்சடியாகப் புகழ்பெற்ற நிலையில் தூர்சடி பெரிய தூர்சடியாக ஆகியிருக்கலாம் என்றும். [4] நினைக்கலாம்.

பெத்தண்ணு, திம்மண்ணு, மல்லண்ணு என்ற புலவர்கள் கிருஷ்ண தேவராயரின் அவையில் இருந்தனர் என்பதற்கு சமகாலப் புலவர்களின் பாடல்கள் ஆதாரமா யுள்ளன. அதுபோன்று இவர் அக்காலத்தைச் சேர்ந்தவர் என்பதற்கான சான்றுகள் இல்லையெனினும் குமார தூர்சடி யின் செய்திகளைக் கொண்டும், வழிவழி வரும் இவர்களின் 'ஜரஸ்ருதியைப் பொருத்தும்', ஸ்ரீகாளஸ்தி மகாத்மியமு' எழுதிய பெத்த தூர்சடி கி. பி. 16-ஆம் நூற்றுண்டில், கிருஷ்ண தேவராயரின் அவையில்— 'புவனவிஜய' அவை யில் அட்டதிக்கவிகளில் ஒருவராகப் புகழ் பெற்றிருந்தார் என உய்த்துணரலாம்.

மேலும் தூர்சடி 'காளஸ்தி சதகம்' என்ற நூலையும் எழுதியுள்ளார் என்ற கருத்தும் நிலவுகிறது. எனினும்

அதற்குத் தக்க சான்றுகள் இல்லை. தெலுங்கு ஆய்வாளர்களிடம் இதைப் பற்றிக் கருத்து வேற்றுமைகள் உள்ளன.

இவர் வீரசைவத்தைச் சார்ந்தவர். அத்வைதக் கொள்கையுடையவர். பெத்த காளத்தி மகாத்மியத்தினை (வடமொழி)த் தூர்சடி தெலுங்கில் எழுதினார் என்ற ஒரு கருத்து நிலவுகிறது. ஆயின் வடமொழியிலுள்ள நூல் ஆறு ஆஸ்வாசமுலு கொண்டதாக உள்ளது. தூர்சடியின் தெலுங்கு காளத்தி மகாத்மியம் நான்கு ஆஸ்வாசமுலு கொண்டதாக உள்ளது. எனினும் தூர்சடி எழுதிய நூலில் பாடல்கள் அழிந்துவிட்டிருக்கலாம் என்று சிலரும் இவர் நான்கு ஆஸ்வாசமுலு எழுதினார் என்று சிலரும் எண்ணுகின்றனர். இதனையே விப்லராஜுகவி பன்னிரண்டு ஆஸ்வாசங்களாக எழுதியுள்ளார்.

தூர்சடி இக்கதையை யாதவ ராஜு என்ற அரசன் சிவபெருமானிடம் 'தததி புராஜகதாந்த சங்கமுல் விநவலதும் 'சீருபாம்புதி! சவில்தரவைகரி ஜெப்பவே' (புராணக் கதையைக் கூறவும்) என்று கேட்டதற்குச் சிவபெருமான் தானே இக்கதையைக் கூறியதாக தூர்சடி கற்பனை செய்துள்ளார்.

மேலும் தூர்சடி தன் வாழ்த்துப் பாடலிலேயே (மங்களாசாசனப் பாடலிலேயே) காவியத்தின் கதை அமைப்பையும் காட்டியுள்ளார். அப்பாடல் வருமாறு:—

''ஸ்ரீவித்யா நிதியை மஹாமஹிமசே ஜெனநந வசிஷ்டஜன
தா வாதாஷந சாம ஜாடெவின கோத்ரதேவ நதக்கீரரா
ஜிவாகீஷியுக யாதவாதிபுலருன் ஷ்ரேயஸ்கரம்பைந யா
ரீயா மாமக்மு திவ்யலின்கமு மநியாபிஷ்டமுவீச லீபெடுன்''[6]

தமிழ், தெலுங்கு மொழிகளில் காணப்பெறும் கண்ணப்பர் வரலாற்றை ஒப்பு நோக்குவதன் வழி பல்வேறு மொழிபேசும் மக்கள் ஒரே வரலாற்றை அணுகி

நுகரும் பெற்றியையும், அவர்தம் பக்தி போன்ற சமய நெறிகளையும் முன்பகர்ந்த ஒன்பது பயன்களையும் பெறுதலுடன் இலக்கியங்கள் பற்றிய தெளிவையும் பெறத் துணையாயிருக்கும். இக்கருத்தை உளங்கொண்டே இவ்வாய்வு செய்யப் பெறுகிறது.

## அடிக்குறிப்புகள்

1. பார்க்க : இயல் 5.
2. காளத்தி மகாத்மியம், ப. 8.
3. மே. ப., ப. 8-9.
4. மே. ப., ப. 10.
5. மே. ப., ப. 61.
6. மே. ப., த்துருதி ஆஸ்வாசமு, மங்களாசாசனப் படல்

இயல் : 2.

# புராணங்கள் சமயச் சான்றோர் வாழ்க்கை வரலாறுகள் - நோக்கமும் பயனும்

புராணங்களும் சமயச் சான்றோர் வரலாறுகளும் இந்திய சமயங்களில் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளன என்பதை அச்சமய வரலாறுகள் புகட்டுகின்றன. இவ்விரண்டும் அவற்றின் கொள்கை விளக்கங்கள் எனலாம். இவையின்றி அச்சமயங்கள் உறுதியுடன் நில்லா. அவை, சமய தத்துவ உலகியல் ஆன்மீக வாழ்வுகளைப் புகட்டி மக்களை இறை நிழலில் ஆட்படுத்துவதையே தம் குறியாகக் கொண்டும், அவற்றை அளிப்பதைத் தாம் வழங்கும் பயனாகவும் கொண்டுள்ளன

## புராணங்கள் :

புராணங்கள் இந்திய சமயங்களில் இன்றியமையாது விளங்குதலுடன் அவை பற்றிய கொள்கைகளையும் தன்னகத்தே கொண்டுள்ளன. ஆறுகள் பலவற்றானும் சமய அறிவையும் இறைநிலையையும் அளித்தலையே அவைதம் இறுதி நோக்கமாகக் கொண்டிலங்குகின்றன. அவற்றின் தோற்ற வளர்ச்சி நிலைகளும் இலக்கணங்களும் அவற்றின் நோக்கத்தைச் சுட்டுவனவாய் உள்ளன.

## நோக்கம் :

புராணம் எனில் 'பழமை' என்று பொருள். பண்டைய செய்திகளைத் தருவது புராணம். முன் நடந்த நிகழ்ச்சிகளைச் சுவைபெறவும் பக்திச் சுவை மிளிரும் வண்ணமும் பாடுவது புராணம். இறைவனின் மாட்சியையும் அவனின் அருட்குணங்களையும், அருளாட்சியையும் பறை சாற்றுதலையே புராணம் தன் உயர்ந்த குறியாகக் கொண்டுள்ளது[1]. புராணம் என்பதற்குப் பகரப்பெறும் விளக்கங்களும் இலக்கணங்களுமே மேற்சுட்டிய கூற்றை உறுதிப் படுத்துகிறதெனலாம்.

'புராணம்' எனும் சொல் பழமை (பழமை மரபு) என்று பொருள் தருகிறது. அதன் முழுப்பெயர் 'புராண சம்ஹிதை' என்பதாகும்[2] அதன் பொருள் 'பழையன வற்றைத் தொகுத்தல்'. மேலும், புராணங்கள் பக்தியைப் பரப்பும் நோக்குடன் அது குறித்த வியத்தகு செயல்களையும் கதைகளையும், கடவுள் முனிவர் வரலாறுகளையும் கொண்டுள்ளன.[3] அவை பக்தியை மாந்தரிடத்தில் பரப்புதலையே தம் இறுதியான குறிக்கோளாகக் கொண்டுள்ளன. புராணங்கள் பக்தி இயக்கத்தின் காரணமாக எழுந்தன என்றும் சிவன், பிரமன், விட்டுணு என்ற ஒரு முழு முதலின் மூன்று தன்மைகட்கிடையில் வேறுபாடற்ற தன்மையை விளக்குவனவாயுள்ளன என்றும் பகர்வர்.[4] இவற்றுள் பக்தியையும் இறைகளின் மேன்மையையும் இயம்புவதே புராணங்களின் சீரிய நோக்கம் என்பது உறுதியாகிறது. அமரசிம்மர் (AMARA SIMHA) புராணத்திற்குரிய ஐந்து மரபுகளைக் (பஞ்சலட்சணங்கள்- PANCHA-LAKSHANAS) கூறுவர்.

அவையாவன :

1. உலகத் தோற்றம்
2. உலக ஒடுக்கம்
3. கடவுள், முனி மரபுகள்
4. மனுவந்தரம்
5. அரச மரபு.[5]

இவ்விலக்கணங்களே அவற்றின் கொள்கையாகவும் விளங்குகின்றன எனலாம். இவையாவும் புகன்று மக்களிடம் சமய எழுச்சியையும், பக்தியையும் புகட்டுவதையே தம் குறியாகக் கொண்டன. மேலும் தலம், தீர்த்தம், விரதம், மந்திரம், யோகம், ஞானம், பக்தி, கன்மம், துதி, அர்ச்சனைக்குரிய அட்டதோத்திர சகஸ்ர நாமம், தருமம், சிவன், விட்டுணு அவதாரங்கள், லீலைகள் (திருவிளையாடல்கள்) முதலியவற்றை விளக்குவதையும் புராணங்கள் தம் நோக்கமாகக் கொண்டன. சமூகத்தின் அனைத்துவகைப் பிரிவினரும் சமயத்தை எளிதாக அறியக் கதைகளின் வழி அன்பையும், பக்தியையும் வளர்ப்பதை நோக்கமாகக் கொண்டுள்ளன புராணங்கள்.

மேற்சுட்டிய நோக்கங்கள் யாவும் வடமொழிப் புராணங்களைச் சார்ந்தவையேயாகும். ஆயின் தமிழ்ப் புராணங்கள் சான்றோர் வரலாறுகளைப் புகலுவதையும், இறைவன் அமர்ந்துள்ள இடங்களைக் கூறுவதையும், தெய்வங்களைப் பற்றி இயம்புவதையும் தம் குறிக்கோளாகக் கொண்டுள்ளன. சான்றோர் வரலாற்றைப் புராணம் என்று வழங்கும் வழக்கு 'சமண வழக்கை ஒட்டி எழுந்ததென்ற கூற்றும் இவண் உன்னத்தக்கது.[6] இதனால் பஞ்சலட்சணங்களுடன் தலங்களைப் பற்றி இயம்புவதும் சமயச் சான்றோர் வரலாற்றை இயம்புவதும் அவற்றின் இலக்கணமாவதுடன் குறிக்கோளாகவும் விளங்குகின்றன. இதனால் புராணங்கள் ஏழு தன்மைகளைத் தன்னகத்தே கொண்டிலங்க வேண்டுமென்பது பெறப் பெறுதலுடன், அவ்வேழும் நோக்கங்களாக அமைய வேண்டுமென்பதும் விளக்கமுறுகிறது.

பயன் :

புராணங்களின் ஏழு இலக்கணங்கள் யாவும் பயன்களாக அமைகின்றன. உலகத் தோற்ற ஒடுக்கங்களையும் முன்னோர்களில் சிறந்தோராகிய முனிவர் மரபுகளையும் அக்கால அரச நிலைகளையும் அறிய இயலுகிறது. இவற்றான்

மாந்தர்தம் வாழ்வை நெறிப்படுத்திக் கொள்கின்றனர். கதைகள் மூலமாக மனித சமூகத்தில் மக்கள் உள்ளங்களில் இறைப்பக்தியை வளர்க்க உதவுகின்றன. மேலும் ஆன்மீகத்தில் மக்களை உந்திச் செலுத்துதற்கும் சிறந்த இலக்கியச்சுவை பெறுதற்கும் புராணங்கள் பயனுடையதா யுள்ளன.

## சமயச் சான்றோர் வாழ்க்கை வரலாறுகள்-நோக்கம், பயன் :

மனம் எதன்கண் சார்கிறதோ அதன் வண்ணமாகும். அம்மனதையொட்டியே மனித வாழ்வும் நல்லதை அணு கின் நன்மையும் தீயதையணுகின் தீமையும்பெறும். அதனால் நல்வாழ்வு பெறவும். நல்வாழ்வை அமைத்துக் கொள்ளவும் ஆன்றோர் வரலாறுகள் வழிகாட்டுகின்றன. இதைத் தாயுமானவர் நன்கு விளக்குவர். சமயச் சான்றோர் வாழ்ந்து காட்டிய நெறிகளில் வாழ இயலவில்லையாயினும் கடவுளை நினைந்த அச்சான்றோர்க்குப் பணி செய்யின் உள்ளம் விழையும் பேறும் உயர்ந்த சிவஞானமும் பெற லாம் [7] என்று இயம்புகிறார்.

இதனால் நன்னெறி பெறவும் ஞானம் பெறவும் சான்றோர் வாழ்க்கை வரலாறுகளைக் கேட்பதும், படிப்பதும், அவற்றில் சிந்தையைச் செலுத்துவம் இன்றி யமையாது வேண்டப்படுகிறதென்பது கண்கூடு. அதனால் தான் 'நல்லாரிணக்கமும் நின்பூசை நேசமும்' என்பர். மேலும் 'சத்சங்கம்' என்று பகர்வதும் இக்கருத்தை உன்னியேதான் ''அடியார்க்கு மடியேன்'' [8] என்று சுந்தரர் குறிப்பிடுதலானும், சமயச் சான்றோர் வரலாறுகளைக் கற்றல் ஞானநெறி செல்வதற்கேற்ற ஒருநெறி எனக் சைவசித்தாந்தம் கொண்டுள்ளதனாலும் மேற்கூறிய கருத்து உறுதியாகிறது. சான்றோர் வரலாறுகள் மக்களை நல்வழியில் வாழவழி வகுக்கின்றன. சான்றாகச் சத்திரபதி சிவாஜிக்கு இளமையிலேயே அவர்தம் தாயார் புகட்டிய

இராமாயண மகாபாரதக் கதைகளே பிற்றை நாளில் அவர் மாபெரும் வீரராக விளங்க வழி வகுத்தது. கண்ணன் பார்த்திபனுக்குப் புகட்டிய பகவத்கீதையே காந்தியை 'மகாத்மா'. நிலைக்கு உயர்த்தியது. தனி மனித வாழ்விலும் சமய தத்துவ வாழ்விலும் அதன் வழி வாழ்ந்த சான்றோர் வரலாறுகள் மக்களை அவற்றின் வழிச் சீர்மிகு தன்மை களுடன் வாழ வழிகோலுகின்றன.

**நோக்கம்:**

சமயச் சான்றோரின் வாழ்க்கை வரலாறுகள் அவர் தம் வாழ்வையும் கொள்கைகளையும் உலகம் அறிந்து அதன்வழி ஒழுக வேண்டுமென்பதைத் தலையாய நோக்கமாகக் கொண்டுள்ளன.

ஒரு சான்றோரின் வாழ்க்கை வரலாற்றைப் படிக்கின் அவ்வாறே தானும் வாழ வேண்டும் எனும் உந்துதலை அளிக்க வேண்டும். அதுபோதுதான் அவற்றைக் கற்ற ன் கிட்டும். திருவள்ளுவரின்,

**''கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக''** [9]

என்ற குறள், சான்றோர் நூல் கற்று அதன் வழி ஒழுக வேண்டுமென்று பகர்வதற்குக் காட்டாக அமைகிறது. சான்றாகக் கண்ணப்ப நாயனார் வரலாற்றைக் கற்குங்கால் அவரின் ஈடு இணையற்ற பக்தி வாழ்வையும், தான் அன்பு வைத்த சிவபெருமானுக்காகத் தன் கண்களையே அளிக்கும் அளவிட இயலாத தியாக வாழ்வையும் காண இயலுகிறது. அவர் வரலாற்றைக் கற்குங்கால் அவ்வன்பு நிகழ்ச்சி வன்தொண்டின் பாற்படினும் அதில் ஓர் மனநெகிழ்ச்சியும் அவரின் மீது அளவற்ற அன்பும் பெருகுவதை உணரலாம். இவை யாவற்றிற்கும் காரணமான முழுமுதல்வனும் சிவத்திடம் இயற்கையாகவே அன்பு தோன்றி உடல் சிலிர்ப்பு அடைகிறது. இத்தகு அன்பை மாந்தரிடத்தில்

முகிழ்க்க வேண்டுமென்பதையே சமயச் சான்றோர் வாழ்க்கை வரலாறுகள் தம் நோக்கமாகக் கொண்டுள்ளன. ஒவ்வொரு நாயன்மார் வரலாறும் ஆழ்வார் வரலாறும், பிற சமயச் சான்றோர் வரலாறும் இதையே அளிக்கின்றன என்பதை அவர்கள் வரலாறுகளை அறிந்தோர் அறிவ ரென்பது திண்ணம்.

இவற்றுடன் அவர் சார்ந்து ஒழுகிய கொள்கையை யாவரும் பற்றி உயர்கதி பெறவேண்டும் என்பதையும் நோக்கமாகக் கொண்டுள்ளன. சமயக் குறவர் நால்வர் வரலாறுகள் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நாற் படிகளையும்; நாயன்மார் வரலாறுகள் பக்தியின் பல்வேறு நிலைகளையும்; ஆழ்வார்கள் வரலாறு பிரபத்தி அல்லது சரணுகதித் தத்துவத்தையும்; இராமன் வாழ்வு, 'இந்த இப்பிறவிக்கு இருமாதரைச் சிந்தையாலும் தொடேன்' என்ற ஏகபத்தினி விரதத்தைச் சுட்டுவதாயும், கண்ணன் வரலாறு அன்பு வாழ்வையும், உலகியல் தர்மங்களைச் சுட்டு வதாயும் உள்ளன. இக்கொள்கைகளை உலக மாந்தர் பற்றியொழுக வேண்டுமென்பதைத் தம் குறியாகக் கொண்டுள்ளன. அவ்வரலாறுகள். சமயங்கள் அவற்றைப் பற்றி ஒழுகிய சான்றோர்களால் பெருமை பெறுகிறது. அவர்தம் வரலாறுகள் அச்சமயங்களை அனைவரும் பற்றி யொழுகிப் போற்ற வேண்டுமென்பதையும் தம் நோக்க மாகக் கொண்டுள்ளன.

அவர்தம் வரலாறுகளுடன் அவர் ஒழுகிய பத்தி, பிரபத்தி, யோகம் ஞானம் போன்ற தத்துவங்கள் பின்னிப் பிணைந்துள்ளன. அச்சான்றோர் ஒழுகிய தத்துவ உண்மை களை யாவரும் பற்றியொழுக வேண்டுமென்பதையும், அவை சீருடன் விளங்க வேண்டுமென்பதையும் தம் நோக்கமாகக் கொண்டுள்ளன.

சமூக ஏற்றத் தாழ்வுகளைக் களைவதும், அனைவரும் இறைவனின் புதல்வர்களே என்ற கொள்கையை நிலை

நாட்டுவதும், சாதிகளற்ற சமூகம் நிறுவிச் சன்மார்க்கத்தை நிலைநாட்டி இறைவன் வழி ஒழுகும் வாழ்வை வழங்குவதும், "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" [10] என்ற உயரிய வாழ்வியல் நெறியை உலகிற்கு அளிப்பதும், வீட்டின்பத்தை யாவருக்கும் அளிப்பதும் அவ்வரலாறுகளின் முதன்மையும் இறுதியானதுமான நோக்கங்களாகும்.

பொருளியல் உள்ளிட்ட எல்லா நிலைகளிலும் வேறுபாட்டைக் களைந்து யாவரும் எல்லாச் செல்வமும் பெற்று உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வேறுபாடின்றிச் சாதிகளற்று மனித சமூகம் விளங்க வேண்டுமென்பதையும் அவ்வரலாறுகள் தம் நோக்கமாகக் கொண்டுள்ளன. இதற்குப் பல சாதியினரும் நாயன்மார்களாகவும் ஆழ்வார்களாகவும் போற்றப்பட்டுள்ளமை காட்டாகச் சுட்டலாம்.

**பயன் :**

சமயச் சான்றோர் வரலாறுகளால் அவரின் வாழ்வியல் முறைகளையும் கொள்கைகளையும் அறிய இயலுகிறது. பல்வகைச் சமய ஒழுகலாறுகளை அறிந்து அவ்வண்ணம் வாழ்வைச் செம்மைப்படுத்திக் கொள்வ உதவுகிறது. பல தத்துவ நெறிகளை அறிந்து மெய்ஞ்ஞான நிலையில் நிற்க வழிகோலுகிறது. சமூக ஏற்றத் தாழ்வுகளை உள்ளத்துக் கொண்டு அவற்றைச் சமூகத்தினின்று அழிக்கும் வழிவகைகளை அறிய இயலுகிறது.

புராணங்களும் சமயச் சான்றோர் வரலாறுகளும் அவற்றின் வழி வாழ நினைக்கும் மக்கட்கும் கலங்கரை விளக்கம் போன்று விளங்குகின்றன. திக்குத்தெரியாத கடலில் வரும் கப்பல் கலங்கரை விளக்கம் கண்ணில் பட்டவுடன் துறைமுகத்தை அடைதல்போல் பல நெறிகளைக் கண்டு மன உளைச்சலுள்ளோர் உறுதியுடன்

பின்பற்றும் நெறிகளை அளிக்கின்றன. மாந்தரிடத்தில் சமய வாழ்வையும் இறைப்பத்தியையும் ஊக்குவிப்பதையே இவைதம் நோக்கமாகக் கொண்டுள்ளன. அதற்கேற்பச் சிறந்த வாழ்வியல், ஆன்மீக ஒழுகலாறுகளைத் தந்து வருகின்றன. அவற்றின் வழிச் செல்வோரே இறுதியில் நற்கதியடைவர். இதுவே அவற்றின் குறியாகும். அதை மக்கள் பெற்று உய்வதே அவற்றால் பெறும் நன்மையாகும்.

## அடிக்குறிப்புகள்


1. JAMES HASTINGS, ENCYCLOPEDIA OF RELIGION AND ETHICS, Vol. X. P. 448.
2. Ibid.
3. BENJAMIN WALKER, HINDU WORLD, Vol II P. 254.
4. Brandon, S. G F. A Dicionray of Comparative Religion, P. 518.
5. John Doryson, A Classical Dictionary of Hindu Mythology, Vol. Eleventh, P. 425.
6. கலைக்களஞ்சியம், தொகுதி-7, ப. 440.
7. தாயுமானவர் பாடல்கள், எங்கும் நிறைகின்ற பொருள், பா. 8.
8. சுந்தரர் தேவாரம், ஏழாந்திருமுறை, திருத்தொண்டத் தொகை, பா. 1
9. திருக்குறள், குறள். 391.
10. திருமந்திரம், பா-85.

இயல்: 3.

# நாயன்மார் வரலாறுகள் - தமிழிலும் - தெலுங்கிலும்

சமய இலக்கியங்கள் அவ்வக் காலத்திற்குரிய சமய வாழ்வியலைப் புகட்டுதலுடன் அதன் வழி ஒழுகிய அன்றி உருவாக்கிய சமயச் சான்றோரின் விளக்கமாகவும் திகழ் கின்றன. அவை, அவர் தம் வரலாறுகளைப் பிற்காலச் சமுதாயத்தார்க்கு அளித்தலுடன் அவற்றைப் பற்றும் வழிகளையும் அச்சான்றோர் வழி நின்று புகட்டுகின்றன. இவ்வடிப்படையில் உருவானதே சைவ அடியார்களின் வரலாறுகளைக் கொண்ட திருத்தொண்டர் புராணம் அல்லது திருத்தொண்டர் மாக்கதை அல்லது பெரிய புராணம். உயர்ந்தோர்களைப் 'பெரியவர்' என்பது மரபு. சமய வாழ்வில் பெரியவர்களாகிய சைவ அடியார்களின் வரலாறு களை இயம்புவதால் பெரிய புராணம் எனக் குறிக்கப் பெறுகிறதெனலாம். அவர்களை 'நாயன்மார்' எனக் குறிப்பர். இங்கு அவர் தம் வரலாறுகளும் பிற விளக்கங் களும் தமிழிலும் தெலுங்கிலும் பயின்று வந்தவாறு ஆயப் பெறுகின்றன.

## நாயன்மார்-சொல் விளக்கம்:

சைவ அடியார்கள் அல்லது திருத்தொண்டர்கள் பெரிய புராணத்துள் 'நாயன்மார்' என அழைக்கப் பெறுகின்றனர். 'நாயன்மார்' எனும் சொல் தலைவர், கடவுளர், பெருமையில் சிறந்தோர் என்று பொதுவாகப் பொருள் தரினும் சிறப்பு நோக்கில் பெரிய புராணத்தில் பகரப்பெறும் தனி அடியார்களாகிய அறுபத்து மூவரையும், தொகையடியார் ஒன்பதின்மரையும் குறிக்கும். 'நாயன்' எனும் வடசொற்குப் பொருள், 'வழிகாட்டி', 'நடத்து வோன்' என்பது.

நாயன் என்பது தலைவன் என்ற பொருளில் வழங்கும் சொல். 'நாயனை அடியான் ஏவும் காரியம் நன்று' என இச்சொல்லை இப்பொருளில் சேக்கிழார் வழங்கியுள்ளார். 'நாயன்' எனும் சொல் உயர்ந்ததற்கண் விகுதியாகிய 'ஆர்' விகுதியைப் பெற்று நாயனார் என வழங்குகிறது. 'நாயனார்' என்பது சிவபெருமானைக் குறித்து வழங்குவதாகும்.

> "தேயநாதன் சிராப்பள்ளி மேவிய
> நாயனாரை நம் வினைநாசமே"

எனத் திருநாவுக்கரசர் சிராப்பள்ளியிறைவரை 'நாயனார்' என்ற பெயரால் போற்றியுள்ளார். தலைமை பற்றிச் சிவபெருமானுக்கு வழங்கிய இப்பெயர் இறைவன்பால் பேரன்புடையாராய் சித்தஞ் சிவமாகப் பெற்ற சிவனடியார் கள் அறுபத்து மூவருக்கும் வழங்கப் பெறுகிறது.

## நாயன்மார்க்குப் புராணம் :

புராணம் எனில் இறைவன் தொடர்புடைய பழைய கதைகளைக் கூறுவது ஒன்றாகும். ஆயின் பெரிய புராணம் என்பது முழுமையாக சிவஅடியார்களின் வரலாறுகளையும் சிவனின் அருட்டிறத்தையும் இயம்புவதாகவே விளங்கு கிறது. அவ்வடியார்களின் சிறப்பையும் பெருமையையும் மக்கட்கு உணர்த்தவே சேக்கிழார் நாயன்மார் வரலாறுகள் அனைத்தையும் ஒரு புராணமாகப்பாடி அதற்குத் 'திருத்தொண்டர் புராணம்' என்றும் பெயரிட்டருளினார். இறைவனைத் தலைவனாகவும் தன்னைத் தொண்டனாகவும் கருதி வாழ்ந்த அடியார்களைத் 'திருத்தொண்டர்' என அழைப்பர். அவர்தம் வரலாறு இத்திருத்தொண்டர் புராணத்தில் சித்தரிக்கப் பெறுகிறது. வடமொழியில் இத்தகு புராணம் ஏதும் இல்லை என்பர்.

தமிழிலும் தொண்டர்கட்கென்று பாடப்பெற்ற நூல் இதை விடுத்த பிற இல்லை. அதனால் தொண்டர் வரலாறு இயம்பும் இப்புராணம் மாந்தரிடத்தில் மிக்குச் சிறப்புப் பெற்று விளங்குகிறது.

## நாயன்மார் வரலாறுகள் :

நாயன்மார் வரலாறுகளைச் சிறப்பாக இயம்பும் நூல் சேக்கிழார் இயற்றிய பெரியபுராணமாகும். இது சார்பு நூலாகும். சுந்தரர் இயற்றிய திருத்தொண்டத் தொகை முதல் நூலாகவும், நம்பியாண்டார் நம்பிகள் இயற்றிய திருத்தொண்டர் திருவந்தாதி வழி நூலாகவும் விளங்கு கிறது. முதல் முதலில் நாயன்மார்களைச் சுட்டிச் செல்வது சுந்தரர் இயற்றிய திருத்தொண்டத் தொகையாகும். இதில் அவர் ஒவ்வொரு நாயன்மார் பெயரையும் கூறி அவர்க்கு 'அடியேன்' என்று இயம்புகிறார். பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்த நம்பியாண்டார் நம்பிகள் ஒவ்வொரு நாயன்மார் வரலாற்றையும் ஒரு இனிய பாடல்வழித் தம் திருத்தொண்டர் திருவந்தாதியில் இயம்பியுள்ளார். ஆயின் சேக்கிழார் பெருமானே தம் முன்னோரியற்றிய இருநூல் களையும் சான்றுகளாகக் கொண்டு பலகால் முயன்று தொகுத்த செய்திகளுடன் செவி வழிச் செய்திகளையும் தொகுத்து அறுபத்து மூன்று நாயன்மார் வரலாறுகளையும் ஒன்பது தொகையடியார் வரலாறுகளையும் சிறப்புற நூலாகச் செய்தார். இதன்கண் நாயன்மார் வரலாறுகள் பக்திச் சுவை மிளிரும் வண்ணம் விளக்கியுள்ளார். இவ்வாய்வில் கண்ணப்பர் வரலாறு மட்டிலும் ஆயப்பெறு கிறது.

## நாயன்மார் - சிறப்பு :

நாயன்மார்களில் சமயக் குரவர் நால்வராகிய சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் ஆகியோர் இடம் பெறுகின்றனர். நாயன்மார்கள் அனைவரும் தென்னிந்தி யாவில் வாழ்ந்தவர்களே என்பதை அவர் தம் வரலாறுகள் புகட்டுகின்றன. இவர்கள் துங்கபத்திரைக் கரையிலுள்ள காம்பிலி நகரம் முதல் தென்பாண்டி நாட்டிலுள்ள குமரி முனை வரையிலான நிலப்பரப்பில் தோன்றியவர்களே யாவர்.

நாயன்மார்கள் அனைவரும் சிவ அடியார்களைப் போற்றிப் பேணுதல், சிவனை வழுத்துதலில் எத்தகு இடுக்கண் வந்துற்ற நிலையிலும் அதிலேயே பற்று வைத்தல், சிவபூசை செய்தல் என்ற மூன்றிலும் சிறந்து விளங்கியவர். இவர்கள் சிவனால் நச்சி ஆட்கொள்ளப் பெற்றவர்கள். அன்பே உள்ளமாகக் கொண்டவர்கள். அன்பே - பக்தியே - சிவ பக்தியே இவர் தம் வாழ்வு; சிவ அன்பிற்கு அடிமையானவர்கள், "அன்பிற்குமுண்டோ அடைக்குந் தாள்"[2] என்ற பொய்யில் புதல்வன் கூற்றுக் கிணங்கக் கட்டற்ற காட்டாறு போன்ற அன்பு பூண்டு "அகண்டாகார சிவபோகமெனும் பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பி ஏகவுருவாய்க் கிடக்குதையோ"[3] என்ற தாயுமானவர் கூற்றுக்கேற்ப அன்பு வெள்ளம் மாந்தி அதில் அழுந்திய வர்கள். அஃதே அவர்தம் வாழ்வு - அதுவற்ற பிறயாவும் அவர்க்குப் பாலையாம்.

இவர்கள் தூய்மையே வடிவானவர்கள். அகமும் புறமும் தூய்மையுடன் வாழ்ந்து தம் ஆன்மாவிற்குரிய வழியைக் கண்டதுடன் சமூகத்திற்கும் இறைப் பக்தியின் மாட்சியைத் தம் வாழ்வின் வழி உணர்த்தினர்.

நான் மறக்கினும் சொல்லுநா நமச்சிவாயமே என்ற அப்பர் வாக்கிற்கிணங்கச் சிவனை மறவாத நிலையினர், அன்பின் வலைக்குட்பட்டவர்கள். பக்தி வலையில் படுப்போனாகிய சிவனைப் படுப்ப வேண்டித் தம் உள்ளமும் உடலும் பக்தியாய்ச் செய்தவர்கள் நாயன்மார்கள்.

"ஓடும் செம்பொன்னும் ஒக்க நோக்குவர் வீடும் வேண்டா விறலியர்" என்றாற்போல் புலன் இச்சையும் நிலையற்ற உலகப் பொருட்களின் விருப்பையும் விடுத்துப் பற்றற்ற சிவனைப் பிரியாது பற்றியவர்கள், அன்பின் முதிர்ந்த நிலையினை அடைந்தவர்களாதலால் முத்தியையும் வேண்டாது சிவனை வழுத்தியதுடன் சிவப்பணியையும் விடாது செய்தவர்கள் நாயன்மார்கள்.

**நாயன்மார் சமயநெறி:**

சைவசமயம் அன்பு நெறியையே முக்திக்குரியதாகக் கொண்டுள்ளது. அதைப் பற்றியொழுகியவர்கள் நாயன் மார்கள். அவ்வன்புநெறி சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்ற நான்கு படிகள் கொண்டதென இயம்புகிறது. சரியையும் கிரியையும் சிவதருமம் எனப்படுகிறது. சிவதருமம் மெல்வினை அல்லது விதிமார்க்கம், வல்வினை அல்லது பக்தி மார்க்கம் என்ற இரண்டின்பாற்படும். சான்றோர் விதித்தன செய்தலும் விலக்கின ஒழித்தலும் விதி மார்க்கம் எனப்படும். இதில் நிலை பெற்றோர் சிவன்பால் அன்பு பெருகி வளரச் செய்வர். அன்பின் மேலீட்டால் சில நேரங்களில் உலக நெறியினைக் கடந்து ஒழுகவும் செய்வர். இவர்கள் பற்றும் அதீதமார்க்கம் வல்வினையின் பாற்படும். அடியார்கள் அவரவர் முற்பிறப்பின் பயனுக்கேற்ற நெறி பற்றியொழுகுவர்.

நாயன்மார் வாழ்வில் மேற்சுட்டிய இருநெறிகளும் புலப்படுகின்றன. எனினும் மிக்குப் பற்றியநெறி அன்பாகும். அன்பே நான்கு பாதங்களின் முடிந்த முடிவு என்பதே சைவக் கொள்கை. நான்கிற்கும் அடிப்படை யாயிருப்பது பக்தியேயாகும். சரியை கிரியை யோகம் ஞானம் எனும் எப்பாதத்தைப் பற்றி யொழுகினும் இறையிடம் பக்தி செலுத்துதல் என்ற ஒரு அடிப்படைக் கொள்கையைச் சைவ உலகம் பழங்காலந்தொட்டு இன்று வரை விடாது பற்றி வருகிறது. அதன் அடிப்படையிலேயே பிற பாதங்கள் ஒழுக வேண்டுமெனவும் அது பகர்கிறது. இதனால் எப்பாதவழி நிற்கினும் அனைவரும் வெவ்வேறு வழிகளில் விலகிச் சென்று விடாமல் காத்து வருகிறது.

இதே நிலையில்தான் நாயன்மார்கள் நான்கு பாதங் களையும் பற்றி ஒழுகினரெனப் பகரப்படினும் அடிப்படை கோட்பாடான சிவனிடம்பக்தி செலுத்துதல் என்ற நெறியை

உறுதியாகப் பற்றினரென்பது அவர்தம் வரலாறுகள் வழி உணரலாம். இதனால்தான் இவர்கள் மக்களின் உலக உணர்வுகளினின்று மாறுபட்டு, வேறுபட்டுத் தெய்வீக உணர்வைப் பெற்று அதீதச் செயல்கள் செய்தனர். இதனால் இவர்களை அதீதானுபவ உணர்வாளருடன் ஒப்பிடலாம். இவர்கள் இம்மையில் இவ்வுலகில் இருந்த வண்ணமே தம்முடம்புள்ள காலத்தே காலங்கடந்து என்றுமுள சிவனிடம் கலந்து அவன் வண்ணமாய் வாழ்வர். அதனால் செயல்களையும் பிறவற்றையும் அதன்கண் ஆட்படுத்துவர். சிவனாந்தத்தில் தம் முக்கரணங்களும் இயங்குகின்றன என நினைத்து அதன் வண்ணமிருப்பர். இவர்களைப் பசுகரணம் விடுத்துச் சிவகரணம் பெற்றவர் என்று சித்தாந்தம் புகலும்.

அதீதச் செயல்கள் எனும் வல்வினைகளை அடியவர் செய்தனர். சாதாரண மக்கள் அவற்றைச் செய்தால் தூற்றுவர். ஆனால் அடியவர்களின் அச்செயல்களைப் போற்றினர் சான்றோர். கண்ணப்பர், சண்பீசர், திருத் தொண்டர் இவர் தம் வல்வினைகளைச் சமயக்குரவர்களே போற்றியுள்ளனர். திருத்தொண்டத் தொகையும் திருத்தொண்டர் திருவந்தாதியும் தோன்றிய பின்னர் சிவாலயங்களில் இந்நாயன்மார்க்குத் திருவுருவம் சமைத்து வழிபடுதல் துவங்கியது. இவர்கள் பல சாதியினராயும் பல காலங்களைச் சார்ந்தவராயும் பல இடங்களைச் சார்ந்தவராயும் இருந்தும் இவற்றையெல்லாம் விடுத்துச் சிவமே பெரிதென்று கொண்ட சான்றோராவர். இது அவர்தம் சிறப்பாகும்.

**நாயன்மார் - சமூகநிலை:**

நாயன்மார் பல்வேறு காலங்களில் பல்வேறிடங்களில் பல்வேறு சமூக நிலைகளில் வாழ்ந்து பல நெறிகளைப் பற்றியவர்கள். இவர்கள் ஆதிசைவர், பிராமணர், அரசர், வணிகர், வேளாளர், இடையர், வேட்கோவர், வேடர், புலையர், கோலியர், மமாத்திரர், பரதவர், செக்கார்,

பாணர், ஆதிதிராவிடர் என்று பல சாதிகளைச் சேர்ந்தவர்கள். இவர்களில் பெண்கள் மூவர். குரு அருளால் முத்தி பெற்றோர் பன்னிருநாயன்மார்கள்; சிவலிங்க வழிபாட்டால் முத்தி பெற்றவர் முப்பதின்மர்; சிவனடியார் வழிபாட்டால் முத்தி பெற்றவர் பத்தொன்பதின்மர்; எஞ்சிய இருவர் சுந்தரரின் பெற்றோர். தேவார ஆசிரியர்கள் மூவரும் இதன்கண் அடங்குவர். இவர்கள் சாதியினும் சமயத்தைப் பெரிதாகப் போற்றினர். சமயத்திலும் சிவனையே முதன்மையாகக் கொண்டனர். வேளாளராகிய அப்பரும் பிராமணராம் சம்பந்தரும் தந்தை தனயன் உறவு கொண்டதை வரலாறு புகட்டுகிறது. அந்தணராகிய அப்பூதியடிகளும் வேளாளராகிய நாவுக்கரசரும் அருகிருந்து உணவுண்டனர்; தீண்டாத வகுப்பைச் சேர்ந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர் கவுணிய கோத்திரப் பிராமணராகிய சம்பந்தர் உடனிருந்து தேவாரத்தை யாழில் மீட்டினார்; அந்தணராகிய திருநீலநக்கநாயனார் தம் இல்லில் அப்பாணரும் அவர் மனைவியும் இருக்க இடமளித்தார். அந்தணராம் சுந்தரர் அரசராம் சேரமான் பெருமாள் நாயனார் பக்கல் இருந்து உணவுண்டார் என்ற இந்நிகழ்ச்சிகள் யாவும் அவர்கள் சாதி, குல, கோத்திர வேறுபாடுகளைக் காட்டவில்லை என்பது தெற்றென விளங்குகிறது. இதனால் குலத்தினும் சிவ அடியார் என்ற உணர்வே அவர்களிடம் நிறைந்திருந்தது என்பதும், சாதிகளினும் சிவமே, அடியார் அன்பே சிறந்ததெனக் கொண்டமையும் விளக்கமுறுகிறது. இராமலிங்கர் அகவினத்தார் புறவினத்தார் என இயம்பியது போன்று தம் குலம் சாதி சேர்ந்தவராயினும் சிவ அடியாரல்லாதாரை அகற்றி எச்சாதி குலத்தவராயினும் சிவ அடியாரேல் அவர்களைக் காத்து அன்பு பாராட்டும் தன்மையைப் பெற்றிருந்தனரென்பது அறிய இயலுகிறது. 'அடியார்க்கும் அடியேன்' என்று சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் கூறியிருப்பதும் இக்கருத்துக்கு அரண் செய்வதாக அமைந்துள்ளது.

**நாயன்மார் காலம்:**

நாயன்மாரனைவரும் ஒரே காலத்தவரல்லர், பல காலங்களில் வாழ்ந்து சிவத்தொண்டு செய்தவர்கள். எனினும் இவர்கள் அனைவரும் தென்னாட்டைச் சேர்ந்தவர்களே. துங்கபத்திரைக் கரையிலுள்ள காம்பிலி நகர முதல் குமரிமுனை வரையிலுள்ள பகுதியில் தோன்றியவர்கள். இவர்களில் பலர் சுந்தரர் காலத்திற்கு முற்பட்டவர்கள். சிலர் அவர் காலத்தவர். பதினாறு அடியவர்கள் அப்பர், சம்பந்தர் வாழ்ந்த கி. பி. 7-ஆம் நூற்றாண்டிற்கு முன் வாழ்ந்தவர்கள். பதினொருவர் அவர் காலத்தில் வாழ்ந்தவர்கள், பதின்மூவர் சுந்தரர் காலத்தவர்கள். தொகையடியார்கள் காலவரம்பைக் கடந்தவர்கள். இவர்கள் காலம் சுமார் கி. பி. 350 முதல் கி. பி. 720 வரை எனலாம். எனினும் ஆய்வாளர் சிலர் கீழெல்லையைக் கி. பி. 849 என்பர். திருத்தொண்டத் தொகையிற் போற்றப் பெறும் நாயன்மார்களாகிய அறுபத்துமூவர் வாழ்ந்த காலம், கடைச் சங்க காலத்தின் இறுதி முதல் இரண்டாம் நரசிங்கவர்மனாகிய இராசசிங்க பல்லவன் வாழ்ந்த எட்டாம் நூற்றாண்டு முடியவுள்ள காலப் பகுதியாகும். [5]

**சேக்கிழாரும் நாயன்மார்களும்:**

சேக்கிழார் பெருமான் பண்பட்ட சிவநெறியாளர். தன் மன்னன் அனபாய சோழன் இன்ப நூலாகிய சீவக சிந்தாமணியைக் கேட்டு வருதலைக் கண்ட தொண்டர்சீர் பரவுவாராகிய சேக்கிழார் அடியார்களின் வல்வினை (வைராக்கியம்) மெல்வினை (பக்தி) பக்தி இயல்புகளை இயம்பி அவர் தம் சிவ அன்பின் மாண்பினை அறிவுறுத்தினார். இருட்டிலிருந்தவன் வெளிச்சத்தைக் கண்டதும் இன்பம் பெறுதல் போல் மன்னன் அளவற்ற ஆர்வப் பெருக்கால் இவ்வடியார்கள் அனைவரின் வரலாறுகளையும் தனக்குக் கூறுமாறும்அவற்றை ஒரு காவியமாக ஆக்கித் தருமாறும் வேண்டினன். அரசன் வேண்டுகோட்கிணங்கச் சேக்கிழாரும் தம் முன்னோர் நூற்களின் துணையுடனும்

செவிவழிச் செய்திகள் கொண்டும் பெரிய புராணத்தை இயற்றிச் சிவ அடியார்தம் பக்தியின் மேன்மையையும் சிவனின் அளவற்ற கருணையுள்ளத்தையும் அருட்டிறத்தையும் வாழ்வின் குறியையும் தெற்றெனக் காட்டினர். சேக்கிழார் தோன்றிராவிடின் சிவஉலகம் ஒரு சிறந்த அடியார் சீர்பரவும் காப்பியத்தைப் பெற்றிருக்காதென்பது திண்ணம். சிவ அடியார்களின் வரலாறுகளை அவர் பாடியதால் அவரும் ஒரு நாயன்மார் ஆனார். அவர் வரலாறும் சிவத்தொண்டும் இதை நன்கு புலப்படுத்துகின்றன. அதனால்தான் சேக்கிழார் புராணம், சேக்கிழார் பிள்ளைத்தமிழ் எனும் இருநூற்கள் அவர் புகழ் பாடுவனவாய் அமைந்துள்ளன. நாயன்மார் வரலாறுகளைப் பாடினமையாலே அவர் நாயன்மார் என அழைக்கப் பெற்றார் எனவும் கூறலாம்.

## தெலுங்கில் நாயன்மார் வரலாறுகள் இடம் பெற்ற நிலை:

தெலுங்கில் நாயன்மார் வரலாறுகள் மிகவும் அருகியே காணப்படுகின்றன. ஓரிரு புலவர்களே ஓரிரு நாயன்மார்களைப்பற்றிப் பாடியுள்ளனர்.

கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த நன்னெசோடு என்ற புலவர் 'குமாரசம்பவமு' என்ற நூலில் கண்ணப்பர் வரலாறு வருவதாகவும் ஆயின் அந்நூல் கிடைக்காமல் போயிற்று என்றும் தெலுங்கு இலக்கிய வரலாறு கூறுகிறது.

கஜாநனுடுவிரு என்ற புலவர் தேவார மூலங்களை அடிப்படையாகக் கொண்டு 'கஜாநனுனுகத' (விநாயகர் கதை) என்ற நூலை எழுதியதாகவும், அதில் கண்ணப்பர் பற்றிய குறிப்புகள் இருந்ததாகவும் கூறுவர். ஆயின் இந்நூலும் கிடைக்கவில்லை.

ஆனல் தெலுங்கில் கண்ணப்பநாயனர் புராணத்தைச் சீராக எழுதியவர் கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த தூர்சடி ஆகும். காளத்தி மகாத்மியம் என்ற அந்நூல் கிடைத்துள்ளது. அதில் மூன்றும் பகுதியாக விளங்குகிறது கண்ணப்பநாயனர் புராணம்.

## அடிக்குறிப்புகள்

1. வெள்ளைவாரணன், க., பன்னிரு திருமுறை வரலாறு, இரண்டாம் பகுதி, ப. 986.
2. திருக்குறள் — குறள். 71.
3. தாயுமானவர் பாடல்கள், பா.
4. வெள்ளைவாரணன். க., பன்னிரு திருமுறை வரலாறு. இரண்டாம் பகுதி, ப. 991—992.
5. மே. ப., ப. 986.

## இயல் 4

# பக்தியும் அதன் பல்வேறு நிலைகளும்

மாரு இறை நிலையும் மாறும் உலகியல் நிலையும் இணைந்து செயல்படும் இவ்வுலகில் வதியும் மனித உயிர்களின் உய்விற்காகச் சமய, தத்துவச் சான்ருேரால் வகுக்கப்பெற்ற பல நெறிகளில் ஒன்ருக அமைந்துள்ளது, பக்திநெறி. அதனின் பல்வேறு நிலைகளும், சமயச் சான்ருேர் பக்திநெறி களும் இவண் ஆயப் பெறுகின்றன. கண்ணப்பரின் பக்தி நெறியை அறுதியிடுதற்கு இவ்விளக்கங்கள் அனைத்தும் அடிப் படையாக அமைந்துள்ளன.

### பக்தி விளக்கம் :

கடவுள்பால் செலுத்தும் அன்பே பக்தி என்று இயம்பப் பெறுகிறது தமிழில் 'பக்தி' என்ற சொல் எடுத்தாளப் படினும் அது வடசொல்லேயாகும். பஜ் + க்தின்—பக்தி என்ற இரு சொற்கள் இணைந்து உருவானதே இச்சொல். வடமொழியில் 'பணிசெய்தல்', 'தொண்டு செய்தல் என்று பொருள் தருகிறது இச்சொல். இக்கருத்து 'பஜசேவாயாம்' என்ற தொடரால் விளக்கமுறுகிறது. இச்சொல்லை 'பத்தி' எனத் தமிழில் சுட்டுவர். பக்திக்கு இணையான தமிழ்ச் சொற்கள் காதல், அன்பு, இறையன்பு எனலாம். அரசபக்தி, குருபக்தி, பதிபக்தி எனும் மூன்றும் இதைக் குறிக்கின்றன. ஆயின் பக்தி இலக்கியங்கள் தோன்றிய காலம் தொட்டுச் சமய தத்துவ உலகிலேயே இச்சொல் கையாளப்படுகிறது. அன்பின் முதிர்ச்சியாகிய 'ஆர்வம்' பக்தி எனும் பொருளில் வழங்கப் பெற்றுள்ளது. ''அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக'' என்ற ஆழ்வார் பாடல் அடியில் உள்ள

'ஆர்வம்' எனும் சொல் பக்தி எனும் பொருளில் வழங்குகிறது [1] எனலாம்.

''முன்னம் மவனுடைய நாமங் கேட்டாள்
    மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய வாரூர் கேட்டாள்
    பெயர்த்து மவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையு மத்தனையு மன்றே நீத்தா
    ளகன்று ளகலிடத்தா ராசா ரத்தைத்
தன்னை மறந்தாடன் னாமங் கெட்டா
    டலைப் பட்டா ணங்கை தலைவன் றாளே''[2]

பக்தி மூன்று நிலைகளில் உருவாகும். அவையாவன:

1. உணர்வு அடிப்படையான. பக்தி
2. உணர்வும் அறிவும் ஒருங்கே அமைந்த பக்தி
3. அறிவு அடிப்படையான பக்தி

முதல் நிலையில் பக்தன் இறைவனே யாவும் என எண்ணி வாழ்கிறான். இரண்டாம் நிலை என்பது அறிவின் அடிப்படையில் உணர்வைப் பாய்ச்சுதலாகும். மூன்றும்நிலை அறிவு மயமான பக்தி அறிவுடன் யாவற்றையும் அணுகுதலாகும். இதைத் தத்துவம் எனவும் மொழியலாம்.

### பக்தி வகைகள் :

ஆருயிர்கள் இறையிடம் தத்தம் நிலைக்கும் அறிவு முதிர்ச்சிக்கும் சூழ்நிலைக்கும் ஏற்பப் பக்தியைச் செலுத்துகின்றன. சமயச் சான்றோர் வெவ்வேறு தன்மைகள் கொண்ட உயிர்கள் பலவாறான பக்தி நெறிகளைக் கைக்கொண்டொழுக வழிவகை செய்தனர். பக்திக்கு இலக்கணம் கண்ட நாரதர் தம் பக்தியோக சூத்திரத்தில் பலவகையான பக்தி வகைகளைக் குறிக்கிறார். இவை மானிட உயிர்களின் மன நிலைக்கேற்ப எழுந்தனவேயாம்.

மனித மனங்கள் பலநோக்குகளில் தத்தம் அறிவு, செயல் நிலைகட்கேற்ப மாறுகின்றன: இறைவனை அறிந்து உணரும் நிலையில் உள்ள வழிகளைத் தெரிந்தெடுக்கும் பான்மையிலும் மாறுபடுகின்றன. சமய தத்துவச் சான்றோர்களும் இவ்வுலக உலகியல் கோட்பாட்டை உளத்துக் கொண்டு அவற்றை ஆன்மீகத்திற்கும் ஏற்ற தாக்கிக் கொண்டனர். உளவியல் அடிப்படையில் நோக்கியதன் விளைவே பக்தியில் பல்வகைக் கூறுகள் தோன்றியதற்கான காரணங்கள் என அறுதியிடலாம். இத்தகு கோட்பாட்டின் அடிப்படையில் எழுந்த பக்திக் கூறுகள் பெத்தான்மாக்கட்கு முக்திபெற வழிகோலுகின்றன.

பக்தியின் துவக்க நிலை இறையின் உருவத்தைப் பற்றியதாக விளங்குகிறது. உருவநிலையில் துவங்கும் பக்தி படிப்படியாக உயர்ந்து உருவமற்ற இறையில் அருவநிலையில் சென்று சேர்கிறது. அத்துடன் அதன் பயணமும் முடிவுறுகிறது.

முதலில் தன் உளத்துக் கொண்ட உருவத்தின்பால் உளங்கனிந்த அன்பு எழுகிறது. இறைவன் எழுந்தருளியிருக்கும் இடங்கள் தோறும் வணங்குதல் பக்தியின் முதல் நிலையாகும். இவ்வன்பு விரிவடையுங்கால் (பிரீதி' எனும் இரண்டாம் நிலை உருவாகிறது. அதுபோது அடையும் இன்பத்திற்கு 'வேட்கை' (பிரீதி) என்று பெயர். மூன்றும் நிலை 'விரகம்' (விரஹம்) என்பது. இச்சித்த பொருள் கிட்டா நிலையில் வரும் துயரத்திற்கு 'விரஹம்' என்று பெயர். இறைவனை இன்றும் பெறவில்லையே என்று கருதி வருந்தும் பக்தன் மனநிலைக்கு 'விரஹம்' என்று பெயர். இந்நிலையின் இறுதியில் எப்பொழுதும் பரம்பொருளையே நினைக்கும் பக்தி உருவாகிறது. அதுபோது உலக நுகர்ச்சிகள் யாவும் அற்றுப் போகின்றன. இந்நிலை 'பராபக்தி' என்பதாகும். இறை நினைவு தவிர பிறயாவும் அற்றநிலை கைகூடுங்கால் அப்பக்தன் முழுவதுமாக இறைமயம் ஆகிறான். இதை

'ததீயதா' என்று கூறுவர். இதைப் பெற்றதும் இறப்புப் பிறப்புகள் எனும் வட்டத்தை உயிர் விடுத்து இறையுடன் கலக்கிறது.

பக்தியை இரு பிரிவுகளாகப் பகுப்பர். பக்தி, பராபக்தி என்பன அவை. துவக்க நிலைக்கு 'பக்தி' என்றும் இறுதி நிலைக்குப் 'பராபக்தி' என்றும் சுட்டப் பெறுகிறது. ஒரு பாத்திரத்தினின்று எண்ணெய் இடையீடின்றி வடிதல்போல் மனம் இறைவனைச் சிந்திக்க அது பராபக்தி என்று அழைக்கப் படுகிறது.

## பிரேமைபத்தி, பிரபக்தி :

இவ்விரண்டும் பக்தியின் இருவகைகள். பிரேமை-அன்பு இறைவனிடம் அன்பு பூண்டு இருத்தல் பிரேமை பக்தி, இதன் உயர்நிலை பிரபத்தி. நதி தன்னைக் கடலிடம் தருதல் போல் பக்தன் தன்னை இறையிடம் அளிக்கிறான். அடைக்கலம், தஞ்சம், சரணாகதி எனும் நிலைகளின் உச்ச நிலையே பிரபத்தி என்று பெயர் பெறுகிறது. பிரேமை பத்தியில் மூன்றுவித நிலைகள் உள்ளன. இவை ஒருங்கு அமையும் பொழுதே பிரேமை பக்தி நிறைவடைகிறது.

1. நயவாமை அல்லது கைம்மாறு கருதாமை. இதனால் இறைவனிடம் வைக்கும் பேரன்பின் இன்பத்தில் வாழ்ந் திருப்பது கைகூடுகிறது.

2. அச்சமற்ற இறையிடம் அன்பு பாராட்டுதல்

3. பரந்த மனப்பான்மை

பிரேமை பக்தி பல விரிவுகளையுடையது. பக்தர் மன நிலைக்கும் கருத்திற்கும் ஏற்ப இறைவனை நினைந்து துதித்தலினால் பிரேமை பக்தி பல பிரிவுகளையுடையதாக இலங்குகிறது. இதை நாரதர் பதினொரு வகைகளாகப் பகுப்பர். அவையாவன :—

1. இறைவன் குணங்களை யறிந்து அவற்றில் பக்தி செலுத்துதல்.

2. இறைவன் எழில் உருவத்தில் பக்தி செலுத்துதல்.

3. இறைவனுக்கு ஆற்றும் பூசைகளில் ஈடுபாடு கொண்டு அவற்றைச் செய்து அதனால் பக்தி செலுத்துதல்.

4. இறைவனை நினைதலில் ஆழ்ந்திருத்தல்.

5. இறைவனுக்குத் தொண்டாற்றுவதில் பக்தி செலுத்துதல்.

6. இறைவனைத் தோழனாகக் கருதி பக்தி செலுத்துதல்.

7. இறைவனை மகனாகக் கருதி பக்தி செலுத்துதல்

8. இறைவனைத் தலைவனாகக் கருதி பக்தி செலுத்துதல்

9. உயிரை இறை அனுபவத்தில் சேர்த்து அந்த இன்பத்தில் பக்தி செலுத்துதல்.

10. சோரம்பாவனை செய்தல்

11. இறைவனை விட்டுப் பிரிதலில் வருகின்ற துயரம்.

**பக்தி இயக்கம் :**

மனிதன் நாகரீகத்தின் துவக்க நிலையில் அச்சம் காரணமாக இயற்கைப் பொருட்களை வணங்க முற்பட்டான். அவன் அறிவு வளர்ச்சி பெற்ற நிலையில் அன்பு காரணமாகப் பரம்பொருளை வணங்கினான். நாளடைவில் சமூகம் பக்தியைப் பலவாறு வளர்க்க முற்பட்டது. அதன் ஒரு அங்கமான மனிதன் பக்தியை இயக்கமாக வளர்க்கத் தலைப்பட்டான். இதற்கு உருவ வழிபாடே அடிப்படையாய் இருந்தது.

பக்தி இயக்கம் ஒரு இயற்கையான வளர்ச்சி எனலாம். அது நிலக்கடவுள், நிலக்கடந்த கடவுள் எனும் நிலைகளில்

வளர்ந்தது எனலாம். இந்நிலையில் தத்துவ வளர்ச்சி ஏற்பட்டதனல் ஒரு கடவுட் கொள்கை உருவானது. பின் கோயில் வழிபாட்டு நிலைகளை வலியுறுத்திய ஆகமங்களின் செல்வாக்கினுல் கூட்டு வழிபாடு வளரத் துவங்கியது. இவ்வாறு பக்தி இயக்கம்; ஒருநிலையில் வளரினும் எதிர் நிலையில் சமணமும் பௌத்தமும் வளர்ந்தன. எனினும் பக்தி இயக்கம் நிலைபெற்றது.

சங்க காலத்தும் அதற்கு முன்பும் பின்பும் இருந்த இறைவுணர்வுகளும் வழிபாட்டு முறைகளும் பக்தி இயக்கத் தோற்றத்திற்கு வித்தாக விளங்கின என்றாலும் காலச் சூழ்நிலையே இவ்வியக்க ஆக்கத்திற்குப் பெரிதும் துணை புரிந்தது. இவ்வியக்கத்திற்குரிய சான்றுகள் ஆங்காங்குச் தென்படினும் கி. பி. ஆரும் நூற்றாண்டின் துவக்கநிலையே இதற்குப் பெரிதும் துணையாயிருந்தது. பின் நாட்டின் பிற இடங்களிலும் வேரூன்றத் துவங்கியது. எனினும் பக்தி ஓர் இயக்கமாக வளர்ந்தது தமிழகத்தில்தான்; பிற்காலத்தில் இராமானுசருக்குப் பின்பே வட இந்தியாவில் பக்தி இயக்க மாக மலரத் துவங்கியது. தமிழகத்தில் பக்தி இயக்கம் முதன்முதலில் தோன்றியதற்கான காரணங்களாகப் பின் வருவனவற்றைச் சுட்டலாம்,

1. தமிழர்கள் உணர்ச்சி மிக்கவர்கள்
2. சமண பௌத்தர்களின் எதிர்ப்பு இயக்கம்
3. களப்பிரர் ஆட்சி.
4. சங்ககால மனிதனின் காதல் வாழ்வு
5. இந்து சமயத்தைக் காக்க வேண்டிய நிலை.

இப்பக்தி இயக்கக் காலத்தில் இந்து சமயங்களாகிய சைவ, வைணவ மதங்கள் மக்களிடையேமிகுந்த அளவில் பரவத் தொடங்கின. முதலில் இதில் பங்கேற்றது சைவ சமயமே. கி. பி. ஆரும் நூற்ருண்டு முதல் ஒன்பதாம் நூற்ருண்டு வரை வாழ்ந்த சைவ இயக்கத்தின் காரணர்

களாகிய திருஞான சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்க வாசகர் என்ற சமயக்குரவர் நால்வரும் பிறவியின் பயன் இறைவனைத் துதிப்பதே என்று காட்டி அதையே உயர்ந்த நெறியாகவும் கொண்டு மக்களை நெறிப்படுத்தினர். நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தப் பெருமான் சமணர்களை வீழ்த்திச் சைவத்தின் மாண்பையும் சிவ அருளின் திறத்தையும் உலகறியச் செய்து தமிழகத்தில் சைவ சமய நெறிகளைக் கால் கொள்ளச் செய்தார். இவ்வண்ணமே நாவுக்கரசரும் இறைவனைக் காணப் பிறவி வேண்டுமென்று சமண பௌத்தர்க்கு மாறுகக் கூறிச் சிவ பக்தியைப் பரப்பினார்.

**''குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்**
**பனித்த சடையும் பவளம்போல் மேனியிற்பால் வெண்ணீறும்**
**இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்ருல்**
**மனித்த பிறவியும் வேண்டுவதேயிந்த மாநிலத்தே''[3]**

இது அவர் சமணத்தினின்று தருமசேனர் பட்டத்தை நீத்துச் சைவம் தழுவியதால் ஏற்பட்ட மாற்றமாகும். சுந்தரரும் மாணிக்க வாசகரும் மாந்தரிடத்தில் தோழமை நெறியையும் சன்மார்க்க நெறியையும் வளர்த்தனர். சமண பௌத்த எதிர்ப்புகளை எல்லாம் வெற்றி கண்டு வீறுடன் வளர்ச்சி பெற்றது சைவசமயம். இத்தொடர்ச்சி பன்னிரண்டு பதின்மூன்றும் நூற்ருண்டுக்குப்பின் தோன்றிய சைவ சித்தாந்தத்தை உருவாக்கிய சந்தான ஆசிரியர்களின் சாத்திர இயக்கமாக வளர்ந்தது.

22—இது போன்றே கி. பி. ஏழாம் நூற்ருண்டு துவங்கி கி. பி. பத்தாம் நூற்ருண்டு முடிய வாழ்ந்த பன்னிரு ஆழ்வார்களும் சமண பௌத்த மதங்களை எதிர்த்துத் திருமாலே முழுமுதற் கடவுள் என்னும் வைணவ நெறியை வைணவ இயக்கமாக மலர்ந்திடச் செய்தனர். இவ்வியக்கம் பதினொன்றும் நூற்ருண்டுக்குப்பின் எழுந்த ஆச்சாரியர் களின் காலத்தில் வளர்ச்சி பெற்றதுடன் இராமானுசரின்

விசிட்டாத்துவைதமெனும் சரணாகதித் தத்துவம் மக்களி டையே வைணவ பக்தியை வேரூன்றச் செய்தது. இவற்றால் மங்கிக் கிடந்த சைவ வைணவ நெறிகள் வீறுகொண் டெழுந்தன. சமண பௌத்த நெறிகள் ஆதரவற்றுப் போயின. பல்லவர்களின் ஆட்சித் துவக்கத்தில் துவங்கிய பக்தி இயக்கம் அவர்கள் ஆட்சியின் இறுதிக் காலத்தில் மிக்கு வளர்ந்து பிற்காலச் சோழர்களின் காலத்தில் தத்துவங்களாக உருவெடுத்தன. மேலும் இப் பக்தி இயக்கம் சிறந்த வைணவ சைவ பக்திப் பாடல்களைத் தந்து தமிழ் பக்தி மொழி எனும் நிலைக்கு உயர்த்தி யுள்ளது.

## பக்தி வகையின் காட்டாகச் சமயச் சான்றோர் வாழ்வு இலங்கும் பெற்றி :

பக்தியின் பல்வேறு வகைகளும் இறையையடைய வழி கோலுகின்றன. அவரவர் மனநிலைக்கேற்பவும் வாழ்நிலைக் கேற்பவும் பக்தியின் ஏதேனும் ஒரு வகையினையோ அன்றிப் பலவற்றையோ பற்றிக் கடவுளையடைய முயலுகின்றனர். ஒவ்வொரு பக்தி வகைக்கும் சான்றாகச் சமயச் சான்றோர் ஒருவரின் வாழ்வோ அன்றிப் பலரின் வாழ்வோ அமைந்துள்ளதைக் காணலாம்.

பக்தியின் சிறந்த நான்கு வகைகளாக இலங்குவன அடிமைநெறி, மகன்மைநெறி, தோழமைநெறி, அன்புநெறி என்பன. இவற்றைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனவும் சுட்டுவர். இவற்றைத் திருமூலர், திருமந்திரத்தில் ஐந்தாம் தந்திரத்தில் விளக்குவர்[4]. தாசமார்க்கம், சத்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்றும் சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்றும் கூறுவர். இவற்றைப் பற்றுவோர் உறும் நன்மைகளையும் சுட்டுவர். சரியைநெறி செல்வோர் சிவ உலகில் இருப்பதாகிய சுலோகத்தையும், கிரியை வழிச் செல்வோர் சிவனருகில் இருப்பதாகிய

சாமீபத்தையும், யோகவழிச் செல்வோர் சிவன் உருவம் பெறுவதாகிய சாரூபத்தையும், ஞானநெறிச் செல்வோர் சிவன் தன்மையைப் பெறுவதாகிய சாயுச்சியத்தையும் பெறுவர். முதல் மூன்றும் தாழ்ந்தது என்றும், பதமுத்தி என்றும், இறுதியானதே உயர்ந்ததென்றும் வரமுத்தி என்றும் இயம்புகிறார். இவற்றைப் பெறுதலே பக்தி வகைகளின் நோக்கமாகும்.

சைவச் சான்றோர் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கையும் இறையையடையும் நெறிகளாகக் கொண்டனர். இவற்றின் விளக்கமாக வாழ்ந்தவர்களாகக் கருதப்பெறும் சான்றோர் சமயக்குரவர் நால்வராவர். சம்பந்தர் வாழ்வு மகன்மை நெறிக்கு ஒப்பிடப்பெறுகிறது. ஏனெனில் மூன்று வயதில் அம்மையின் ஞானப்பாலுண்டு இறையருள் பெற்று அவரின் அன்புக் குழந்தையாக விளங்கியமையே காரணமாகும். மேலும், தந்தை தனயனுக்கு இடையூறு நேருங்காலெல்லாம் காத்தல் போல் அவரின் பல துயர்களைத் தந்தை என்ற முறையில் சிவன் நீக்கியமையின் இவ்வாறு குறிக்கப்பெறுகிறது.

திருநாவுக்கரசர் வாழ்வு அடிமை நெறிக்கு ஒப்பிடப் பெறுகிறது. அவர் சமண சமயம் புகுந்து மீண்டும் சைவம் புக்குச் சிவனுக்குத் தொண்டாற்றுவதையே தன் கடனாகக் கொண்டு என்கடன் பணிசெய்து கிடப்பதே என்ற கூற்றும், உழவாரப்படை கொண்டு தலங்கள் தோறும் சென்று அங்குள்ள கோயில்களைத் தூய்மைபடுத்திச் சிவனுக்குத் தொண்டாற்றுதலையே வாழ்வின் நோக்கமாகக் கொண்டதாலும் அவர் அடிமை நெறியின் தன்மைகள் கொண்ட பக்தி வகையைச் சார்ந்தவர் என்பது புலப்படுகிறது.

சுந்தரர் பக்தியின் மூன்றும் வகையான தோழமை நெறியினராகத் திகழ்ந்தார். ஏனெனில் இவரின் திருமணத்தைத் தடுத்து ஆட்கொள்ளும் போதே இறைவனுடன் நேருக்கு நேராகப் போராடும் வாய்ப்பு ஏற்பட்டது. அதனால்

சுந்தரர் இறைவனுக்குப் 'பித்தன்' என்ற பெயரைச் சூட்டி அதையே அவனருளால் தம்முதற் பாடலின் முதல் சொல்லாக அமைத்துப் பாடினூர். அது முதல் தம் வாழ் நாளின் இறுதிவரையும் இறைவனைத் தட்டிக் கேட்டுத் தனக்கு வேண்டியதைப் பெற்றுக் கொண்டார். தன்னைக் காப் பாற்றக் கடமைபட்டவன் இறைவன் என்பதை உணர்த் தினூர். தன் திருமணத்திற்காக இறைவனைத் தூது விடுத்தார். ஒரு அடிமைக்கோ மகனுக்கோ இத்தகு உரிமை இல்லை. இவற்றான் சுந்தரர் வாழ்வும் பாடல்களும் அவர் தோழமை நெறியினர் என்பதைப் புகட்டுகின்றன எனலாம்.

அன்பு நெறிக் கோட்பாட்டை விளக்குவதாக மணி வாசகர் பாடல்களும் வாழ்வும் அமைந்துள்ளன. அன்பே— இறையன்பே அவர் வாழ்வு நோக்கம். அந்த அன்பிற்காக அவர் இறையிடம் எதையும் கேட்கவில்லை. தனக்குத் துன்பங்கள் நேர்ந்தக்காலும் இன்பங்கள் வந்துற்ற நிலையிலும் யாவும் சிவன் செயலே என அவனிடம் மாறா அன்பு பூண்டார். இவ்வன்பே அன்பு நெறியின் தன்மையைக் குறிப்பதாக உள்ளது.

சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்ற சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கிற்கும் சமயக்குரவர் நால்வர் வரலாறுகள் காட்டாக அமைந்து உள்ளன.

அடுத்து பக்தி வகைகளுள் ஒன்றாக விளங்குவது மதுரபாவம் அல்லது நாயக நாயகிபாவம். இறைவனைக் காதலனாகவும் உயிரைக் காதலியாகவும் நினைத்துப் பாடுதலும் அத்தன்மையைக் கொள்ளுதலுமாகும். இத்தன்மை சமயக்குரவர் வாழ்விலும் பாடல்களிலும் இடம் பெற்றுள்ளன.

இனி நாயன்மார் வரலாறுகளை நோக்குவம். இவர்தம் வாழ்வுகள் யாவும் பக்தி என்ற ஒன்றன் அடித்தளத்திலேயே அமைந்துள்ளன. எனினும் அவற்றில் சிற்சில வேறுபாடு

களும் நிகழ்கின்றன. அவர்களுள் சிலர் யோக, ஞான நெறி களிலும் வாழ்ந்திருக்கின்றனர். யோக, நெறியைப் பற்றிய தாகத் திருக்குறிப்புத் தொண்ட நாயனார், பெருமிழலைக் குறும்ப நாயனார் என்ற நாயன்மார்கள் குறிக்கப்பெறு கின்றனர். இவர்கள் பக்தியின் நான்கு பிரிவுகளாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கையும் பற்றி யொழுகினர். நாயன்மார்கள் பக்தி, உணர்ச்சி வயப்பட்ட; தன்னை, அளிக்கின்ற; தன் பாவங்கட்கு வருந்துகின்ற; இறையிடம் அடைக்கலம் பெறுகின்ற பக்தியின் வகையைச் சார்ந்தது. இவர்கள் பக்தியைத் 'தொண்டு' எனவும் குறிக்கலாம். அது 'வன்தொண்டு' 'மென்தொண்டு' என இரு திறப்படும். அதை 'அமைதியான பக்திநெறி', 'தீவிரமான பக்திநெறி' எனவும் குறிக்கலாம். இவ்வாறு இருவகை யாக நாயன் மார்களின் பக்தி நெறியைப் கொள்ளக் காரணம் சிலர் தீவிரமான பக்தி நிலையிலும், சிலர் அமைதியான ஆனல், உறுதியான பக்தி நிலையிலும் இருந்தமையே காரணமாகும். இதை 'வன்மை பக்தி', 'மென்மை பக்தி' எனவும் குறிக்கலாம்.

வன்தொண்டு அல்லது வன்மை பக்திக்கு எறிவாட்ட நாயனார், கண்ணப்பநாயனார் போன்றோர் வாழ்வுகள் காட்டாக அமைகின்றன. சிவபூசைக்குரிய நெல்லை உற்றார் உண்டதால் சிவபூசைக்கு இடையூறு நேர்ந்ததே என்ற உணர்ச்சியால் - சிவனிடம் பூண்ட அன்பால் அவர்களைக் கொல்கிறார். கண்ணப்பர் தாம் விரும்பித் தொழும் சிவலிங்கத்தின் ஒரு கண்ணிலிருந்து குருதிவர, யாது செய்வ தென நினைந்து பின் வன்மையாகத் தம் கண்ணைப் பிடுங்கி அப்ப, பிறிதொரு கண்ணினின்றும் குருதிவர அடுத்த கண்ணையும் பிடுங்க முயலுங்கால் சிவன் தோன்றி அவர் தொண்டைப்போற்றி அருள் புரிந்தார். இவ்விரு நாயன் மார் வாழ்வும் வன்தொண்டின் விளக்கமாக அமைகிறது.

காரைக்காலம்மையார், சேரமான் பெருமாள் நாயனார் போன்றோர் வாழ்வுகள் மென்தொண்டின் விளக்க

மாக அமைந்துள்ளன. தெளிந்த ஆறுபோல் அமைதியாகச் செல்வதால் இவர்தம் வாழ்வுகள் மென்தொண்டின் விளக்க மாக அமைகின்றன.

வைணவ சமயம் பக்தி, பிரபக்தி என்று பக்தியின் இருவகைகளைக் குறிக்கிறது. இறையிடம் பக்தி செலுத்த அறிவும் தூய அன்பும் வேண்டும் என்கிறது பக்தி. இத்தகு பக்தியைத் திருமாலிடம் செலுத்துதல் ஒரு சிலர்க்கே இயலும். பலரும் இதைப் பற்றியொழுகவியலாது. ஞானிகட்கே இஃதியலும். அதனால் இராமாநுசர் 'பிரபக்தி' என்ற ஒரு பக்தி வகையைப் புகன்றார். இதைச் 'சரணாகதித் தத்துவம்'. எனப் பகர்வர். இறையிடம் தஞ்சமடைந்து அவனே யாவும் எனக் கருதி அன்பு செலுத்துவது, அனைத்தை யும் அவனுக்கே அளித்துத் தொண்டு செய்து அவன் மகிழும் முகமலர்ச்சியால் தான் மகிழ்ந்து அன்பு காட்டுவதாகும். இது வைணவ சமயத்தில் மிக்குச் சிறப்புற்று விளங்குகிறது. இந்நோக்கில் இராமாநுசர் வாழ்வும் கொள்கைகளும் இப்பக்தி வகைக்குச் சான்றாக அமைகின்றன. மேலும் திருமாலின் திவ்விய குணங்களில் ஆழங்கால்பட்ட ஆழ்வார் களின் வாழ்வும் ஆச்சாரியர்களின் வாழ்வும் இப்பிரபத்தி நெறிக் கோட்பாட்டிற்குக் காட்டாக அமைகின்றன.

### கண்ணப்பர் காட்டும் பக்தி நெறி :

உண்மையன்பிற்கு எல்லையில்லை, வரம்பில்லை, தளை யில்லை, பிறயாவும் உண்மை அன்பில் திளைத்தவர்க்குத் துச்ச மாகத் தோன்றும். அவ்வுண்மை அன்பிற்கு இடையூறு வந்தக்கால் அதற்காக எதையும் அவர்கள் செய்வர். அத்தகு பெற்றியானே திண்ணப்பராம் கண்ணப்ப நாயனார்.

கல்வி அறிவற்றுக் காளத்தியின் மலைகளில் பன்றி வேட்டைக்குப் பிறருடன் திரிந்த திண்ணன் ஆங்கொரு சிவலிங்கம் கண்டார். அதன் தன்மைகளையும் நிலைமை களையும் கேட்டுணர்ந்து அக்கணமே நெஞ்சில் மாறா அன்பு

ஊற்றெடுக்க வழிபடும் முறையறியாது இறைச்சியையும், வாயில் கொணர்ந்த நீரையும், தலையில் உள்ள பூவையும் வைத்து வழிபட்டு இரவும் பகலும் அருகிருந்து அதைக் காப்பதிலும் அதன்பால் அன்பு செலுத்துவதிலும் திண்ணனார் கருத்தாயிருந்தார்.

திண்ணப்பனின் அன்பைச் சிவகோசரியாருக்குக் காட்ட வேண்டித் தன் கண்ணினின்றும் குருதி வருமாறு செய்து திண்ணப்பனின் எல்லையற்ற பக்தியை உலகுக்கு உணர்த்தினார் சிவபெருமான். தனக்காகக் கண்ணை அப்பிய தால் அவரைக் 'கண்ணப்பர்' என இறைவன் அழைத்தார். அப்பெயருடனே அவர் உலகத்தோரால் போற்றப்படுகிறார்.

கண்ணப்பர் பக்தி வாழ்க்கை வன்தொண்டின் பாற் பட்டது. இறைவன் கண்ணினின்று குருதி வெளிப்பட்டதும் யாது செய்தும் நிற்காதலால் தன் கண்ணையும் பிடுங்கி அப்பும் பேரன்பு அவருள்ளத்தில் முகிழ்க்கிறது. இத்தீவிர அன்புவன்மை பக்தியாம் வன்தொண்டாகிறது.

கண்ணப்பர் வாழ்வு மூன்றுவித பக்தி நெறிகளைக் காட்டு கிறதெனக் கூறலாம். இம்மூன்றின் விளக்கமாக அவர் வாழ்வு அமைந்துள்ளது.

'இறைவனைத் தொழ உதவுவது உண்மையான அன்பேயன்றி வெளிச் சடங்குகளோ, வெற்றுப் பூசை முறைகளோ அல்ல' இது கண்ணப்பர் வாழ்வால் உறுதியா கிறது. சிவகோசரியார் இடும் மணமுடைய மலர்களினும் திண்ணனும் கண்ணப்பன் வைக்கும் மாமிசத் துண்டுகளும் அவன் உமிழும் நீருமே சிவனுக்கு இனித்தன. இறையிடம் அன்பு செலுத்த வேண்டியது உண்மை அன்பே என்பதும் அதைச் செலுத்த எத்தகு பூசை முறைகளும் தேவையில்லை யென்பதும், எதுவும் பூசைக்குரியதாகலாம் என்பதும் பெறப் படுகிறது. கண்ணப்பர் வாழ்வு பக்தி நெறியின் ஒருவகை யான தாஸ்யபக்தி-அடிமை நெறியின் பாற்பட்ட தெனலாம்.

கண்ணப்பர் சிவனைப் பற்றிக் கேட்டவுடன் அவனைத் தலைவனாகவும் தன்னை அத்தலைவனைப் பூசிக்கும் தொண்டனாக வும் அடிமையாகவும் கொண்டார். தலைவனும் சிவனுக்குக் கண்ணில் குருதி வந்ததும் தம் கண்ணை அப்புகிறார். இது, ஒரு அடிமை தன் தலைவனுக்காகச் செய்யும் தியாகத்தை ஒத்துள்ளது. அடிமை நெறியின் வழி விரைவில் சிவனருள் பெறலாமென்பதும் அதுவே சிறந்ததென்பதும் விளங்கு கிறது.

இறைவனிடம் அன்பை அன்புக்காகவே செய்ய வேண்டுமேயல்லாது பயன் கருதிச் செய்தல் கூடாது என்பது கண்ணப்பர் வாழ்வு காட்டும் பக்தி நெறியின் மூன்றாம் நிலை யாகும். கண்ணப்பர் சிவனிடம் எதையும் எதிர்நோக்கி அன்பு காட்டவில்லை. அன்பை அன்புக்காகவே பொழிந்தார். அதற்காகத் தன் கண்களையும் இழக்கத் துணிந்தார். இத்தகு தன்னையிழக்கும் அன்பையே பக்தியாக்கி இறையிடம் செலுத்த வேண்டுமென்பதே கண்ணப்பர் காட்டும் நெறியாகும்.

கண்ணப்பர் வாழ்வு இம்மூன்று பக்தி நெறிகளைப் பக்தி உலகிற்கும்—அடியார் உலகிற்கும் அளித்ததெனலாம்.

## அடிக்குறிப்புகள்

1. அருணாசலம், மு., பக்தி இலக்கியம், ப. 10.
2. திருநாவுக்கரசர். தேவாரம், திருவாரூர் திருத்தாண்டகம், பா. 7.
3. மே. ப., கோயிற்பதிகம், பதிகம்—81, பா. 4.
4. திருமந்திரம், பா. 1443—1513

இயல் : 5

# கண்ணப்பர் வரலாறு - தமிழிலும் தெலுங்கிலும்

கண்ணப்பர் வரலாறு பற்றிய குறிப்புகள் விரிவாகவும், சுருக்கமாகவும் தமிழ் தெலுங்கு இலக்கியங்களில் முறையே காணப்படுகின்றன. ஆயின் தமிழில் உள்ள குறிப்புகள் சில அவரின் ஓரிரு செயல்களையோ அன்றி அவரையோ பற்றிச் சுட்டுவனவாயும் சில அவர் வரலாற்றை விளக்கிக் காட்டு வனவாயும் அமைந்துள்ளன. பல ஆசிரியர்களால் பல காலங்களில், பல்வேறிடங்களில், பல சூழ்நிலைகளில் கூறப்பட்ட குறிப்புகளே அவை. செவிவழிச் செய்திகள் துணையுடனும் தம் முன்னோர் கூற்றுக்கள் துணையுடனும் கண்ணப்பர் வரலாற்றைக் குறித்துள்ளனர். அதனால் அவர் வரலாறு பற்றிய செய்திகளை ஒவ்வொரு ஆசிரியரும் ஒவ்வொரு வகையாகக் குறித்துள்ளனர். தமிழில் ஆங்காங்கு கண்ணப்பர் பற்றிய செய்திகள் காணப்படினும் வரலாற்றை முழுமையாக எடுத்தியம்பும் நூற்கள் நக்கீர தேவநாயனார் இயற்றிய திருக்கண்ணப்பதேவர் திருமறம், கல்லாட தேவநாயனார் இயற்றிய திருக்கண்ணப்பதேவர் திருமறம் சேக்கிழார் இயற்றிய கண்ணப்பநாயனார் புராணம் என்பன ஆகும். எனினும் இவற்றுள்ளும் அவர் வரலாறு வெவ்வேறாகக் கூறப்பட்டுள்ளது.

இதுபோன்றே தெலுங்கிலும் கண்ணப்பர் வரலாற்றைப் பலர் எழுதியிருப்பினும் கிடைக்கக் கூடியது தூர்சடி எழுதிய கண்ணப்பர் வரலாறேயாகும்.

இங்கு அவர் பற்றிய குறிப்புகளைச் சுட்டுதலுடன் தமிழிலும், தெலுங்கிலும் காணலாகும் ஒற்றுமைகளும் வேற்றுமைகளும் அதற்கான காரணங்களும் அவற்ருல் பெறப்படும் உண்மைகளும் ஆயப்பெறுகின்றன.

**கண்ணப்பர் பற்றிய செய்திகள் :**

**தமிழ் :**

தேவாரப் பதிகங்களில் இவர் பற்றிய செய்திகள் உள்ளன.

**''கண்ணப்பர்க் கருள்செய்த கயிலை''[1] என்றும்,**

**''கானலைக் கும்மவன் கண்ணிடந் தப்பநீள்**

**வானலைக் குந்தவத் தேவுவைத் தானிடங்''[2]**

என்றும் கண்ணப்பர் பற்றிக் குறிக்கிருர் சம்பந்தர்.

மேலும்,

**''வாய்கலச மாகவழி பாடு செயும் வேடன்மல ராகுநயனங்**

**காய்கணையி ஞலிடந் தீசனடி கூடுகா ளத்திமலையே'' [3]**

என்று காளத்தி மலையின் பெருமையைக் கூறுங்கால் கண்ணப்பர் செய்த பூசை முறையைக் கூறுகிருர்.

திருநாவுக்கரசர் ஆறு இடங்களில் கண்ணப்பர் பற்றிச் சுட்டுகிருர். திண்ணன் பூசை செய்த முறை பற்றி நான்காம் திருமுறையில்,

**''குலப்பெருந் தடக்கை வேடன் கொடுஞ்சிலை யிறைச்சிப் பாரந்**

**துவர் ப்பெருஞ் செருப்பா னீக்கித் தூயவாய்க் கலச மாட்ட**

**வுவப்பெருங் குருதி சோர வொருகணை யிடந்தங் கப்பத்**

**தவப்பெருற் தேவு செய்தார் சாய்க்காடு மேவி ஞரே'' [4]**

என்று பகர்கிருர். மேலும்,

**"காப்பதோர் வில்லு மம்புங் கையதோ ரிறைச்சிப் பாரந்
தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத் தூயவாய்க் கவச மாட்டித்
தீப்பெருங் கண்கள் செய்ய குருதிநீ ரொழுகத் தன்கண்
கோப்பதும் பற்றிக் கொண்டார் குறுக்கைவீ ரட்டனாரே"** 5

*என்று சிவன் அருளிய தன்மையைச் சுட்டுகிறார்.*

*திருமழபாடிப் பதிகத்திலும்,*

**"கண்ணப்பர்க் கருள்செய்த காளை கண்டாய்"** 6

*என்றும் சிவன் கண்ணப்பருக்கு அருளிய திறத்தைக் கூறுகிறார்.*

*திருச்சிவபுரம் பதிகத்தில்,*

**"கானவனுக் கருள்செய்தான் காண்"** 7

*என்றும் கூறுகிறார்.*

*தனித்திருத்தாண்டகப் பகுதியில் கண்ணப்பனை ஆட்கொண்ட திறத்தை,*

**"கண்ணப்பர் பணியுங்கொள் கபாலி யாரே"** 8

*என்று சுட்டுகிறார்.*

*திருக்கழிப் பாலைப் பதிகத்தில் கண்ணப்பன் கண்ணப்பிய திறத்தைக்,*

**கண்ணப்பன் கண்ணப்பக் கண்டு வந்தார்"** 9

*என்று பாடுகிறார்.*

*சுந்தரமூர்த்தி நாயனாரும் நான்கு இடங்களில் கண்ணப்பரைப் பற்றி இயம்புகிறார். திருத்தொண்டத் தொகையில்,*

**"கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்"** 10

*என்றும்,*

**"கற்ற சூதனற் சாக்கியன் சிலந்தி
கண்ணப் பன்கணப் புல்லனென் றிவர்கள்
குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங்
கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்"** 11

*என்றும், திருநின்றியூர் பதிகத்தில்,*

"கலைகொள் கண்ணப்ப னென்றிவர் பெற்ற........" [12]
என்றும், திருவீழிமிழலைப் பதிகத்தில்,

"எறிந்த சண்டி யிடந்த கண்ணப்பனேத்து பத்தர்கட் கேற்ற நல்கினீர்" [13]
என்றும் குறிக்கிறார்.

மாணிக்கவாசகர் கண்ணப்பரின் அன்பின் திறத்தை மிகவும் உயர்வாகப் பாடியுள்ளார். கண்ணப்பன் அன்பினுக்கு இணையான அன்பு இல்லை என்பதை,

"கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்
என்னப்ப னென்னொப்பி லென்னையுமாட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ" [14]
என்றும் பாடுகிறார். மேலும்,

"பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல் விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலச மூனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
கருட்பெற்று நின்றவா தோணோக்க மாடாமோ" [15]
என்று கண்ணப்பன் பூசை செய்த முறையைக் குறிக்கிறார்.

ஒன்பதாம் திருமுறையில் ஓரிடத்தில் கண்ணப்பர் பற்றிய குறிப்பு வருகிறது.

"கடியார் கணம் புல்லர் கண்ணப்ப ரென்று .." [16]
என்பது அவ்வடியாகும்.

பதினோராம் திருமுறையிலும் சில இடங்களில் கண்ணப்பர் பற்றிய செய்திகள் காணக்கிடக்கின்றன. நக்கீர தேவர் கைலைபாதி காளத்திபாதி அந்தாதியில் கண்ணப்பர் வரலாற்றை யறியாது வீணே காலம் கழிக்கின்றனர் என்ற உண்மையை,

"வாளா பொழுது கழிக்கின்றார் மானுடவர்
கேளார்கொ லந்தோ கிறிப்பட்டார்!—கீளா டை
யண்ணற் கணுக்கராய்க் காளத்தி யுண்ணின்ற
கண்ணப்ப ராவார் கரை."[17]

என்று சுட்டுகிறார்.

நக்கீரதேவ நாயனார், சேக்கிழார் எழுதிய கண்ணப்ப நாயனார் புராணம் போன்றே கண்ணப்பர் வரலாற்றை எழுதியுள்ளார். அதற்குத் 'திருக்கண்ணப்பதேவர் திருமறம்' என்று பெயர். அது 157 அடிகளைக் கொண்டதாக உள்ளது. அதை,

"திருக்கண்ணப்பன் செய்தவத் திறத்து
விருப்புடைத் தம்ம விரிகட லுலகே..."

என்று துவங்கி,

"நில்லுகண் ணப்ப! நில்லுகண் ணப்ப! வென்
னன்புடைத் தோன்ற னில்லுகண் ணப்ப!

என்று அருள்காட்டி,

சிவகதி பெற்றனன் றிருக்கண் ணப்பனே"[18]

என்று முடிக்கிறார். இதனுடன் இறுதியில் கீழ்வரும் பாடலில் கண்ணப்பரின் பெற்றோர் போன்ற பிற செய்திகளையும் குறித்துள்ளார்.

"தத்தையாற் தாய் தந்தை நாகனாற் தன்பிறப்புப்
பொத்தப்பி நாட்டுடுப்பூர் வேடுவனாற்—தித்திக்குந்
திண்ணப்ப னஞ்சிறுபேர் செய்தவத்தாற் காளத்திக்
கண்ணப்ப னய்நின்றான் காண்"[19]

என்பது அப்பாடல்,

கல்லாட தேவரும் தம் 'திருக்கண்ணப்ப தேவர் திருமறம்' என்பதில் 38 அடிகளில் அவர் வரலாற்றைக் கூறுகிறார்.[20] பரணதேவர் தம் 'சிவபெருமான் திருவந்தாதியில்' ஒரு பாடலில் கண்ணப்பர் செய்த பூஜையின் முறையைக் குறித்துள்ளார். அப்பூசை முறையினை,

**"சென்று செருப் புக்காலாற் செல்வ மலர்நீக்கிச்**
**சென்று திருமுடிவாய் நீர்வார்த்துச்—சென்றுதன்**
**கண்ணிடந் தப்புங் குருத்தற்குக் காட்டினன்**
**கண்ணிடந் தப்பாமைப் பார்த்து"**[21]

என்று பகர்கிறார்.

நம்பியாண்டார் நம்பிகள் அருளிய 'கோயிற்றிருப் பண்ணியர் விருத்தம்' என்பதில்,

**"தேவு செய் வான்வாய்ப் புனலாட் டியதிறல் வேடுவனே"**[22]
என்றும்,

**"பழித்தக் கவுமிக ழான்றில்லை**
**யான் பண்டு வேட்டுவதும்"**[23]

என்றும் கூறுகிறார். மேலும் தம் திருத்தொண்டர் திருவந்தாதியில்,

**"நிலத்திற் றிகழ்திருக் காளத்தி யார்திரு நெற்றியின்மே**
**லைத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுண்ணடுங்கி**
**வலத்திற் கடுங்கணை யாற்றன் மலர்க்கண் ணிடந்தப்பினன்**
**குலத்திற் கிராதனங் கண்ணப்ப னென்று கூறுவரே"**[24]

என்று கண்ணப்பர் வரலாற்றைக் கூறுகிறார்.

சேக்கிழார் நாயன்மார் வரலாறுகளைத் தம் திருத்தொண்டர் வரலாற்றில் பாடியுள்ளார். அதில் கண்ணப்ப நாயனார் புராணம் என ஒன்று ஒரு பகுதியாக அமைந்துள்ளது. இத்துடன் திருத்தொண்டர் புராணத்தில் ஆங்காங்கு வேறு நாயன்மார் வரலாறுகளைக் கூறும்

நிலையிலும் கண்ணப்பர் வரலாற்றைக் குறித்துள்ளார். சமயக்குரவர்கள் பெரும்பான்மையும் காளத்தியைத் தொழ வரும்போது அவர்தம் செயலைக் கூறுமுகத்தான் கண்ணப்பர் வரலாற்றைக் குறித்துள்ளார்.

திருஞானசம்பந்தர் காளத்திநாதனை வணங்க வந்த தன்மையை,

"முன்னிறைந்த திருவாய்மஞ் சனநீ ராட்டு
முதல்வேடர் கண்ணப்ப நாயனாரை
யுன்னியொளிர் காளத்தி மலைவ ணங்க
வுற்றபெரு வேட்கையுட னுவந்து சென்றார்" 25

என்றவாறு பகர்வர். மேலும்.

"கானவர்தங் குலமுலகு போற்ற வந்த
கண்ணப்பர் திருப்பாதச் செருபபுத் தோய" 26

என்றும்,

"திருந்தியவின் னிசை வகுப்புத் திருக்கண் ணப்பர்
திருத்தொண்டு சிறப்பித்துத் திகழப் பாடிப்..."27

என்றும் பாடுகிறார்.

திருநாவுக்கரசர் திருக்காளத்தி அடைந்து சிவனை வழிபட்ட நிலையில் கண்ணப்பர் பற்றிப் பின் வருமாறு இயம்புகிறார் சேக்கிழார்.

"மலைச்சிகரச் சிகாமணியின் மருங்குறமுன் னேநிற்குஞ்
சிலைத்தடக்கைக் கண்ணப்பர் திருப்பாதஞ்
சேர்த்திறைஞ்சி..." 28

சுந்தரர் திருக்காளத்தியில் கண்ணப்பர் அடிபோற்றி வணங்கினார் என்பர் சேக்கிழார்.

**''யன்பாற் கண்ணப்பர் மணங்கொள் மலர்ச்சே**
**வடிபணிந்து''** 29

என்பன அவ்வடிகள். பட்டினத்தடிகளும்,

**''கண்ணப்பர் போல் கண்ணிடந்து**
**அப்பவல்லே னல்லேன்''** 30

என்று பாடுகிறார். ஆதிசங்கரர் தம் சிவானந்த லகரியில்,

**''மார்க்கா வர்த்தித பாதுகா பசுபதே ரங்கஸ்ய**
**கூர்ச்சாயுதே கண்டூ ஷாம்பு நிஷேசனம் புராரிபோர்**
**திவ்யாபிஷேகாயதே கிஞ்சித் பட்சித மாம்ஸ**
**சேஷ பேலம் நவ்யோவ ஹாராயதே பக்தி.**
**கிம் நகரோதி அஹோ வனசரோ பக்தா லதம் சாயதே''**

என்ற சுலோகத்தில் கண்ணப்பன் பக்தியைப் பாராட்டு கிறார். இது சம்பந்தரின்,

**''வேயனைய தோளுமையோர்... .. தீசனடி**
**கூடுகா ளத்திமலையே''** 31

என்ற பாடலுடன் ஒத்து வருகிறது.

எனினும் கண்ணப்பர் வரலாற்றை முறையாக எடுத்தியம்பும் நூல் திருத்தொண்டர் புராணமாகும்.

## தெலுங்கு :

தெலுங்கில் பலர் கண்ணப்பர் வரலாற்றை எழுதியுள்ளனர் என்று அவ்விலக்கிய வரலாறு சுட்டுகிறது. ஆயினும் அவை கிடைக்காது போயின. தற்போது தெலுங்கில் முழுமையாகக் கண்ணப்பர் வரலாற்றைக் கூறும் நூலாகவும் கிடைக்கும் நூலாகவும் இருப்பது தூர்சடி எனும் புலவர் எழுதிய 'காளத்திமகாத் மியமு' என்ற நூலேயாகும். இதில் மூன்றும் பகுதியாகக் கண்ணப்பர் வரலாறு அமைந்துள்ளது.

தமிழ், தெலுங்கு இலக்கியங்களில் உள்ள கண்ணப்பர் வரலாற்றில் காணலாகும் ஒற்றுமைகளும் வேற்றுமைகளும், அதற்கான காரணங்களும்.

**நாடு :**

திண்ணனின் நாடு பொத்தப்பியாகும். இப்பெயரைத் தமிழ்த் தெலுங்கு இலக்கியங்கள் ஒன்றுகவே குறிப்பிடு கின்றன.

**"...... பூலர் வாவி சோலை சூழ்ந்த பொத்தப்பி நாடு"** [32]
என்று தமிழில் சேக்கிழாரும்,

**"பொத்தப்பி நாடிலோ விபிரபூமி கிராதுல**
**காடப்பட்டுலோ"** [33]
என்று தெலுங்கில் தூர்சடியும் கூறியுள்ளனர்.

**ஊர் :**

இவர் பிறந்த ஊர் உடுப்பூர் என்பதாகும். இதில் இரு ஆசிரியர்களும் மாறுபட்டுக் குறிப்பது காண இயலுகிறது.

**"பேரரணஞ் சூழ்ந்த முதுபதி யுடுப்பூராகும்."** [34]
எனச் சேக்கிழாரும்,

**"உடுமூரது பக்கன மொப்பு"** [35]

என்று தூர்சடியும் பகர்ந்துள்ளனர். பொத்தப்பி நாட்டு ஊர்களின் பெயர்களில் உடுப்பூர் எனும் பெயர் தற்போது இல்லை; உடுக்கூர் என்ற பெயர்தான் உள்ளது. இது இராசம்பேட்டைக்கு அருகில் உள்ளது. உடுப்பூர் என்ற பெயரே உடுக்கூர் என்று திரிந்திருக்கலாம் [36] தூர்சடி உடுமூர் என்கிருர். உடுக்கூர் என்ற பெயர்தான் உடுப்பூர் எனின் தூர்சடி அதை உடுமூர் என்ருன் எனின் காலமாறு பாட்டான் எனக் கருதலாம். பல்வேறு அரசியல் பொரு ளாதார சமய தத்துவக் காரணங்களால் ஒரு காலத்தில்

இருந்த ஒரு ஊரின் பெயர் மாறுதல் அடைதல் இயல்பு. அதற்கேற்ப உடுப்பூர் என்பதன் பெயரும் மாறி அமைந் திருக்கலாம். ஒரு காலத்தில் வடவேங்கடப் பகுதிகளில் தமிழர் பரவியிருந்தனர். அதுபோது உடுப்பூர் என வழங்கியிருக்கலாம். பின் தெலுங்கர் பரவியபின் தூர்சடி யின் காலமான பதினைந்தாம் நூற்றாண்டு அளவில் உடுமூர் என வழங்கியிருக்கலாம். காலமாறுபாட்டால் தற்போது உடுக்கூர் என வழங்குகிறதெனலாம். இதனால் அவ்வூர் சேக்கிழார் காலத்தில் உடுப்பூர் என வழங்கி, தூர்சடி காலத்தில் உடுமூராய் தற்போது உடுக்கூர் என வழங்கப் படுகிறதெனலாம். சேக்கிழார் தாம் நூலை எழுதத் துவங்குமுன் பல ஊர்களுக்கும் சென்று செய்திகளைத் திரட்டினார் என்று கூறுதலால் அவர் காலத்தில் அவ்வூர் உடுப்பூர் என வழங்கியிருக்க வேண்டும் எனக்கருதலாம்.

திண்ணன் வேட்டையாடிக் கொண்டே காட்டில் வெகு தூரம் சென்றான் என்று இரு ஆசிரியர்களும் இயம்புகின்றனர். திண்ணன் வேட்டையாடிக் காதங்கள் பல கடந்து பொன் முகலியாற்றை (சுவர்ணமுகி) அடைந்ததினால் இவ்விரண்டு இடங்களுக்கும் இடையில் சுமார் நாற்பது கல் தொலைவு இருந்திருக்க வேண்டும் என்று சி. எம். இராமச்சந்திர செட்டியார் கூறுகிறார். இன்றும், பொத்தப்பி உடுக்கூருக்கும் சீகாளத்திக்கும் நாற்பதுகல் தூரம்தான் என்பர். எனவே தூர்சடி தம் காலத்தில் வழங்கிய உடுமூர் என்ற பெயரினைக் குறித்தார் என்றும் சேக்கிழார் அதன் முதற்பெயராகிய உடுப்பூர் என்பதனையே குறித்தார் என்றும் துணியலாம்.

## பெற்றோர்

திண்ணனின் பெற்றோர் பெயரைக் குறிக்கும் பான்மையில் இருவரும் மாறுபடுகின்றனர். சேக்கிழார் திண்ணனின் தந்தை,

''வேடர்க்கதிபதி நாகனென்பான்''[37]
என்றும்,

''மற்றவன் குறிஞ்சி வாழ்க்கை
மனைவியுந் தத்தை யென்பாள்''[38]

என்று தாயின் பெயரையும் குறிக்கிறார். தூர்சடியோ,

''நாதநாத புலிம்த விபுநி மம்தகாமிதி
செலுவொம்தெத் தங்தெ யநக''[39]

என்று கூறுகிறார். தந்தை பெயர் நாதநாதன், தாயார் பெயர் தந்தெ. சேக்கிழாரும் தூர்சடியும் செவிவழி வந்த கதையைத் தம் முன்னோர் பகர்ந்த சில சான்றுகள் கொண்டு கண்ணப்பர் வரலாற்றை எழுதினர். கண்ணப்பர் வரலாறு தமிழிலிருந்து தெலுங்கிற்குச் சென்றதாகக் கொண்டாலும் அம்மொழிக் குரிய இலக்கணங்கட்கேற்ப அவ்வாறு பெயர் மாறு பட்டிருக்கலாம்; அன்றிச் செவிவழியாக அவ்வாறு கேட்டதை எழுதியிருக்கலாம். அந்த அந்த மொழிகட்குரிய தன்மையே இப்பெயர் வேறுபாட்டிற்குக் காரணம் எனலாம். தமிழில் 'நாகன்' என்றும் தெலுங்கில் 'நாதநாதன்' என்றும் வருகிறது. நாதன் எனில் தலைவன்; நாகன் வேடர் குலத் தலைவன் என்பதால் அவ்வாறு வழங்குதற்கு வாய்ப்புள்ளது. பின் அது நாதநாதனாக மாறியிருக்கலாம்.

தாயார் பெயர் தமிழில் 'தத்தை' என்று உள்ளது. தமிழில் தத்தை எனில் கிளி. 'தந்தெ' என்பதற்குப் பொருள் அதுவன்று. தத்தைதான் 'தந்தெ' என்று மாறி யிருக்கலாம்.

## தொழில் :-

இவர்தம் தொழில் வேட்டையாடுதல். வீடுகளின் முன்றில்களில் உள்ள விளா மரங்களில் வார்வலை தொங்கும், பன்றி புலி கரடி முதலிய விலங்குகள் அங்கே கட்டப்பட்டு

இருக்கும்; கொலைப் படைகளை ஏந்துவர், கொடுஞ்சொல் வழங்குவர் என்று சேக்கிழார் கூறுகிறார். தூர்சடி,

**''எம்த சம்பத கல்கியு நெட்டிவாரு**
**தம் குலா கததர்மகர் மழுலு விடுல**
**ஜால......''** 40

என்கிறார்.

செல்வம் மிக்குப் பெறினும் அவர்தம் குலதர்மங்களையும் செயல்களையும் விடார் என்று சுருக்கமாகக் கூறிச் செல்கிறார். ஆனால் சேக்கிழார் விளக்கமாகக் கூறுகிறார்.

பிறப்பு

**தமிழ் :** வேடர்தம் குலம் விளங்க நாகன் தத்தை இருவருக்கும் குழந்தைப்பேறு உண்டாகவில்லை.

**''பெருவருஞ் சிறப்பின் மிக்கா ரிவர்க்கினிப்**
**புதல்வர்ப் பேறே அரியது''** 41

என்ற கூற்று பலராலும் இயம்பப் பெறுதலைக் கேட்டு மனம் வருந்தி ஒரு குழந்தையைப் பெற வேண்டுமென்ற எண்ணம் கொண்டனர். அதனால் செவ்வேளாகிய வேலவனின் முன் சென்று பூசை பலவுஞ் செய்து சேவலும் மயிலும் விட்டனர். தோரண மணிகள் தூக்கினர், மலர் மாலைகள் தொங்க விட்டனர். குறவைக் கூத்துடன் அணங்காடல் நிகழ்த்திப் பெருவிழாச் செய்தனர். 42 வெற்றிவேற் பெருமானின் திருவருளால் தத்தை கருத்தரித்தாள். திங்கள்தோறும் பலிகள் போக்கி வெறியாட்டயர்ந்தனர். பத்தாம் திங்களில் கருங்கடலானது சந்திரனைப் பெற்றது போன்று தத்தை மகவை ஈன்றாள். வேடர்கள் மகிழ்ச்சியால் மங்கள இயங்கள் முழங்கியும் மலர் மழை பொழிந்தும் தேவதுந்துபிகள் முழங்கியும் பெருவிழா கொண்டாடினர். 43

## தெலுங்கு

குழந்தையின்றி வருந்துதல் பற்றியோ அன்றி முருகவேளுக்கு பூசை செய்வது பற்றியோ தூர்சடி ஒன்றும் இயம்பவில்லை. சிவனருளால் தந்தெ கருவுற்ருள் என்று மட்டிலும் இயம்புகிருர். [44] 'அதனுடன் தந்தெ கருவுற்ற காலத்தில் அவள் மனத்துதித்த எண்ணங்களையும் தெளிவுற விளக்குகிருர். [45] சேக்கிழார் போல் தூர்சடி தந்தெ கருவுற்ற காலத்தில் பராவுக்கடன் செய்தமை கூற வில்லை. அவள் கருவுற்ற நாளிலிருந்து உடல் முழுச் சந்திரன் போல் ஒளி வீசியதாகவும், வயிற்றில் வளரும் குழந்தை சிவன்போல் சிறப்புப்பெறும் எனக் காண்போர் எண்ணுவ தாகவும் இருந்தது என்பதைத் தூர்சடி பின்வருமாறு புகல்வர்,

> "... கர்பமுநுந்த தநயு பீஷி
> டை பிரகாஷிம் பக் கலட் டநியபுடு தெலுபு
> காணி......" [46]

மேலும் தூர்சடி, புலி, சிங்கம், பன்றி, மான் முதலிய மிருகங்களை வேட்டையாட வேண்டும், மலையில் சென்று சிவனைக் காணவேண்டும், ஊன் கொண்டு சிவனைப் பூசை செய்ய வேண்டும் போன்ற எண்ணங்கள் தந்தெ மனத்தில் தோன்றியதாகக் கூறுவர். மேலும் அல்லி மலரை யொத்தத் தம் கண்களைப் பிடுங்கி வைத்துப் பூசை செய்ய வேண்டு மென்ற எண்ணம் அவள் மனத்துதித்ததாகவும் கூறி ஐயிரு மாதங்கள் நிறைவுற்றதும் ஒரு நல்ல நாளில் குழந்தை பிறந்தது [47] என்கிருர் தூர்சடி.

பக்தர்கள் வரலாறு பாடவேண்டும் என்பது சேக்கிழார் பேரவா. அதனுல்தான் அறிந்த கதையைக் கொண்டு இப்புவியில் நல்லதும் தியதும் இறைவன் அருளாலன்றி நடவாது என உலகோர்க்கு உணர்த்த எண்ணியே முருக வேளுக்குப் பராவுக்கடன் நிகழ்த்தப் பெற்றதாகக் கூறியுள்

ளார். குறிஞ்சிக் கடவுள் முருகன். எனவே அவனைத் தமிழ் மரபுப்படி வேடர் குலத்தொடு தொடர்புபடுத்த சேக்கிழார் விழைந்திருக்கலாம்.

தூர்சடிக்குப் பக்தர் வரலாறு குறிக்கோளன்று. காவியம் எழுத வேண்டும் என்பதே அவர் அவா. 'காளத்தி மகாத்மியம்' நான்கு பகுதிகள் கொண்டது. இதில் மூன்றாவது பகுதியாகிய த்ருதீயாஷ்வாசமுலு என்னும் பகுதியில் கண்ணப்பர் புராணம் வருகிறது. இந்நான்கு பகுதிகளிலும் இருக்கும் கதைகளைச் சிவனே யாதவன் எனும் அரசனுக்குக் கூறியதாகத் தூர்சடி நூல் யாத்துள்ளார். தெலுங்கில் சிவனே கதையினைக் கூறுவதால் பிற கடவுள் வழிபாடு வரவில்லை. தந்தை கருவுற்ற காலத்தில் மனத்தில் உதித்த எண்ணங்களைக் குறிப்பிடுவது, பின் நிகழப்போவதை முன்பே குறிப்பாகக் காட்டுவதாகும். இது காப்பிய உத்திகளுள் ஒன்று. சிலம்பில் 'கனாத்திறம் உரைத்த கதை' என்ற பகுதியே முன்னால் கண்ணகியின் கனவு காரணமாகத் தோன்றியது ஆகும். இக்கருத்தை இங்கு உன்னுதல் தெளிவுற தெளிவுபெற வழிகோலும். மேலும் தூர்சடி குழந்தை பிறந்ததும் செய்யக்கூடிய செயல்களை மிகவும் அழகாகச் சமய உணர்வுகளுடன் உண்மைகளுடன் ஒப்பிட்டுக் கூறியுள்ளார். இது காலச் சிறப்புடையதாயுள்ளது. குழந்தை தளர்நடையிட்டு நடக்கும் வரையிலான நிகழ்ச்சிகளை இவ்வாறு குறிக்கிறார். குழந்தை பிறநததும் தொப்புள் அறுப்பது வழக்கும். அதைக் குடும்ப ஆசையை (சம்சார ஆசையை) அறுப்பதுபோல் அறுத்தனர் என்று கூறுகிறார். மேலும், பாவங்கள் அழிய வேண்டும் என்பதுபோல் நீராட்டினர் என்றும், இறைவன்பால் மனத்தை நிறுத்திய பக்தன் யோக நித்திரையில் இருப்பது போல் அக்குழந்தை ஒரு சில மணித்துளிகள் கண்களைத் திறவாமல் இருந்தது என்றும் இவ்வுலகைக் காணும் ஆவலால் கண்களைத் திறந்தது என்றும், பாசத் தொடர்புகளை உதறித் தள்ளுவதுபோல் அடி எடுத்து நடந்தது

என்றும், காமன் சிவன்பால் மலர்களைத் தொடுக்க அஞ்சியது போல் திண்ணன் தப்படி எடுத்து வைத்ததாகவும் கூறுகிறார். இவ்வாறு குழந்தையின் ஒவ்வொரு செயலையும் சேக்கிழார் குறிக்கவில்லை.

அடுத்து நாகன் குழந்தையை எடுத்ததும் அது திண்மை யாக இருந்தமையின் திண்ணன் என்று பெயர் சூட்டிய தாகச் சேக்கிழார் கூறுகிறார். ஆனால் தூர்சடி இதற்கு மாறாகக் கூறுகிறார். நாகனே பெயர் வைத்ததாகக் கூறுகிறார். சேக்கிழா ர். ஆனால் தூர்சடியோ மேற்சுட்டிய குழந்தையின் செயல்கள் யாவற்றிலும் சிவனின் தன்மை பொருந்தி இருத்தலால் 'திண்ணடு' (திண்ணன்) என்று பெயர் வைத்தனர் என்று கூறுகிறார். பெயர் சூட்டியமுறை தூர்சடி கூறுவதினும் சேக்கிழார் கூறுவது பொருத்தமுடையதாக உள்ளது.

## இளமை :

தமிழ் : திருவுடைய அக்குழந்தைக்கு வேடர்தம் வழக்கிற்கு ஏற்பப் பல அணிகளை அணிந்தனர். தெய்வங் களுக்குப் பருவந்தோறும் பெருமடையிட்டு வழிபட்டனர். திண்ணனூர் ஓராண்டு நிறைவெய்தித் தளர்நடையிட்டு நடந்தார். பின் குதலைமொழி பேசிப் பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் இன்பமூட்டினர். பின் குறுநடை கொண்டு சிறுதுடிக் குறடு உருட்டி விளையாடினர். ஐந்தாண்டு நிறை வெய்தப் புறத்தே சென்று கொடிய விலங்குகளுடன் விளையாடினர். இவ்வாறு வளர்ந்து விற்பயிற்சி பயிலும் பருவம் அடைந்தார் [48] என்று சேக்கிழார் கூறுகிறார்.

## தெலுங்கு :

வேடர் குலத்துதித்த திண்ணன் ஐந்தாண்டு நிரம்பப் பெற்றதும் பல விளையாட்டுகள் ஆடினர். சிறு மூங்கிலை வில் போல் வளைத்துக் குச்சிகளை அம்பாகக் கொண்டு

விளையாடினர். சிட்லா பொட்ளகாய, சிறிசிங்கனுவர்த்தி (வட்டமாகச் சிறுவர்கள் அமர்ந்து ஒருவன் கையில் சிறு துணியினை வைத்துக் கொண்டு அவர்களைச் சுற்றி வருவான். பின் தெரியாமல் ஒருவன்பின் வைத்துவிட்டு ஓடுவது—நாம் இதனைக் குலைகுலையா முந்திரிகா, நிறைய நிறைய சுற்றிவா என்கிறோம்), குடுகுடு குஞ்சாலு (கபாடி), குந்தெனகுடி (நொண்டியடித்து விளையாடுதல்), தாகிடி முரச்சலாடலு (கண்ணாமூச்சி), கிரச்சகாயலு, வெண்ணில குப்பலு (நிலாக்குப்பல்), தன்னுபில்ல, (ஒரு பட்டை விளையாட்டு—சிறு ஓட்டைக்| காலால் உதைத்து விளையாடுவது), தூரண துங்காலு, கீரண கிஞ்சலு, பில்லதீபாலங்கி, பில்லகோடு (கோடிபில்லு—நீளமான ஒரு கட்டையால் சிறு கட்டையை அடித்து விளையாடுவது), சிடுகுடுவ்வலபோடி, செண்டு கட்டிநகோதி, யல்லி இப்பனபட்டெ (கிறதட்டு), லப்பளாலு, சிக்கனுபில்ல, லோடில்லு முதலான விளையாட்டுக்களைத் [49] திண்ணன் ஆடியதாகத் தூர்சடி கூறுகிறார். இவற்றில் பலவற்றிற்கு நேரான தமிழ்ப் பெயர்கள் அறிய இயலவில்லை. இத்தகு விளையாட்டுக்களைச் சேக்கிழார் இயம்பவில்லை. அவர் வேடர்குல விளையாட்டிகளையே புகல்கிறார். தூர்சடி தம் காலத்தில் வழக்காற்றிலுள்ளவற்றைக் கூறுகிறார் எனக் கருதலாம்.

## விற்பயிற்சி

தமிழ் : திண்ணன் விற்பயிற்சி பெறக்கூடிய பருவம் வந்தெய்தியதும் நாகன் நல்லநாள் பார்த்துச் சிறப்பாக விற்பயிற்சியைத் துவக்கினன். அந்நாள் குறித்துத் தன் குடிகட்கு அறிவித்ததோடன்றிப் பக்க மலைகளின் வேடர் தலைவர்கட்கும் அறிவித்தான். வேடர் தலைவர்களும் மக்களும் மலைபடு பொருட்களுடன் தலைநகர் அடைந்தனர். வில்லுக்கும் திண்ணனுக்கும் புலி நரம்பினுல் காப்பு அணிந்து மகிழ்ந்தனர்; வாழ்த்தினர். இவ்வாறு ஏழு நாட்கள் வில் விழாக்கொண்டாடினர். ஏழாம் நாள் உச்சிப்

போதில் நல்லாசிரியனால் திண்ணனை வில்லைப் பிடிப்பித்தார்கள். அன்று தொடங்கி நன்கு பயின்று முற்றுக் கற்றுப் பதினாறு வயது நிரம்பிய இளஞ்சிங்கம் போன்ற காளைப் பருவம் எய்தினார். 50

## தெலுங்கு :

திண்ணன் தன் குலத்தொழிலாகிய விற்பயிற்சி பெற்றதனைச் சேக்கிழார்,

**"வண்ணவெஞ் சிலையு மற்றப் படைகளும் மலரக் கற்றுக்**
**கண்ணகன் சாயல் பொங்கக் கலைவளர் திங்களே போல்**
**எண்ணிரண் டாண்டின் செவ்வி யெய்தினார்..."** 51

என்றும், தூர்சடி

**"வில்லு பட்டி நெலபதி நாள்ளலோ**
**வீககூலிசிந தடவில்லு வெதுருவில்லு**
**செலகுவில்லுநு மொதல சேகவிண்டலு**
**சுலககாதீசி ஷபரேம்தர டேயு"** 52

என்றும் கூறுகின்றனர். விற்பயிற்சியினைத் துவங்கிய மாதம் பத்து நாட்களுக்கெல்லாம் வேகம் பொருந்திய தடவில்லு வெதுருவில்லு, செலசுவில்லு முதலானவற்றில் சிறந்து திண்ணன் விளங்கினார் என்று தூர்சடி கூறுகிறார். சேக்கிழார் விற்களின் வகைகளைப் பற்றிக் கூறவில்லை. விற்பயிற்சியை மட்டிலும் கூறியுள்ளார். தூர்சடி பலவகை விற்களின் பெயர்களைக் கூறுகிறார். அவர் மலைவாழ் மக்களின் பரிசுப் பொருட்கள் பற்றியோ ஏழுநாள் விழாவெடுத்தமை குறித்தோ ஏதும் மொழியவில்லை.

சேக்கிழார் அனபாய சோழனிடம் அமைச்சராகப் பணியிலிருந்தமையின் அரச மரபுகளை நன்குணர்ந்தவர். அதனால் வேடர் குலத் தலைவன் மகனாகிய திண்ணனும் விற்பயிற்சி தொடங்கியமை ஒரு விழாவாகப் பாடியுள்ளார்.

தூர்சடி கிருட்டிணதேவராயரின் அவைக்களப் புலவரா யிருந்தமையின் விற்பயிற்சி தொடங்கியதை ஒரு விழாவாகப் பாடவில்லை.

## கன்னிவேட்டை :

**தமிழ் :** திண்ணனுர் காளைப்பருவம் எய்தியநிலையில் நாகன் மிகவும் மூப்படைந்து வில் முயற்சியில் தளர்ச்சி யடைந்தான். பன்றி, கரடி, புலி முதலிய மிருகங்கள் நெருங்கிப் பயிர்களுக்கும் உயிர்களுக்கும் ஊறுவிளைவித்தன. வேடர் இதனைத் தம் தலைவனுகிய நாகனிடம் முறை யிட்டனர். நாகன், 'மூப்பினுல் முன்போல் வேட்டை முயற்சியில்லேன், என் மகனை உங்கள் தலைவராகக் கொள்ளுங்கள்' என இயம்ப அதற்கு அவர்களும் இசைந்தனர். பின் திண்ணனை அழைத்துத் தழுவிப் புலித் தோல் இருகையில் ஒரு சேரத் தன்னுடன் முன்னிருக்க வைத்து, 54 'எனக்கு மூப்பு மேலிட்டதால் இனி என் முயற்சி யால் வேட்டையாட எனக்குக் கருத்தில்லை; அதனுல் சிலைமலையர் குலக்காவல் பூண்டு உன்னுடைய உரிமையாகிய மலையாட்சியைத் தாங்குவாயாக' என இயம்பித் தன் அரச அடையாளமாகிய உடைத்தோலையும் சுரிகையையும் கையிற் கொடுத்துப் பட்டம் சூட்டினுன்.

திண்ணனுர் மங்கல நீர்ச்சுனை படிந்து அன்றிரவு மனையில் வைகிக் காலைப் போதில் விற்சாலையிற்புக்கு வேட்டைக் கோலம் கொண்டார். 55 தலையில் குறிஞ்சியை நிமிரக் கட்டித் தளிர்களால் கட்டப்பட்ட கொண்ட மாலையும் அதில் மயிலிறகும் அதன்மேல் முத்து மாலையும் குறிஞ்சி வெட்சிப் பூக்களும் சூடினுர். முன்னெற்றியில் குன்றி மணிகளை இடையிடை வைத்துப்புரிந்தமயிர்க்கயிறு சாத்தினர். 56 காது களில் வெண்சங்குத்தோடுகளும் கழுத்தில் பலகறை மாலையும் சன்ன வீரமும் அணிந்தார். தோள்களில் வாகுவலயங்களும், முன்கைகளில் கங்கணங்களும்

விரலுக்குக் கோதையும் அணிந்தார். இடுப்பில் புலித் தோலாடை சாத்தி உடைதோல் வீக்கி அதில் காரிகையும் பூண்டார். காலில் வீரக்கழலும் திருப் பாதங்களில் நீடு செருப்பும் அணிந்து பாரப் பெருவில்லைப் பணிந்து தாள் மடுத்து ஏற்றி சிறு நாணொலி செய்து தக்க அம்புகளையும் தேர்ந்து கொண்டார். அந்நிலையில் தேவராட்டி திருநெற்றியில் சேடை சாத்தி வாழ்த்தினுள். திண்ணனும் அவளுக்கு எதிர்சிறப்புச் செய்து போக்கி வேட்டைக்குப் புறப்பட்டார். [57]

## தெலுங்கு :

கன்னி வேட்டைக்குச் செல்லும் திண்ணன் தன் பெற்றோருடன் இசைக் கருவிகள் இயங்கப் பல்வகை மலைபடு பொருட்களுடன் 'காட்ரேணி' எனும் (காட்டு இராணி) தேவதைக்குப் பூசை செய்யச் செல்லுமுன் நாதநாதன் தந்தெ இருவரும் குளித்துத் திருநீறு இட்டு விரதமிருந்தனர். தாய் தந்தை இருவரும் இருக்க, குளித்துத் திருநீறு இட்டு 'இரட்சாபந்தனம்' எனும் கொடியைக் கட்டித் தலையில் கருப்புக் கொடியைக் கட்டி அம்பேற்றிய வில்லேந்தி வேடர்களுடன் காட்ரேணி கோயிலுக்குப் பூசை செய்யச் சென்றுர். ஆயுதங்களை ஆலயத்தில் வைத்துப் பூசை செய்து வேடர்களுடன் அமர்ந்து உணவுண்டார். அவர்கள் உணவில் கள் முதலிய போதைப் பொருட்களும் இடம் பெற்றன. ஆண், பெண் இருவருவே வரம்பின்றிக் கள் குடித்து நிலைதடுமாறினர். இந்நிலையைத் தூர்சடி அழகுற வர்ணனை செய்துள்ளார். பேச நினைந்து மறந்தவரும், நடக்க நினைந்து குப்புற விழுந்தவரும், எழ எண்ணியும் எழ முடியாதவரும், பாடற் பயிற்சி பெருமலே பாடுகின்றவரும், எதிரில் வருவோர்க்கு நிலத்தில் விழுந்து வணக்கம் செய்பவரும் [58] என்ற பல நிலைகளில் அவர்கள் இருந்ததை வர்ணிக்கிறுர்.

பெண்களும் கள் குடித்துத் தடுமாறினர். கணவன் பெயரால் காதலரையும் அழைத்துக் கூடி மகிழ்ந்தனர். பெண்களும், ஆண்களும் கள் குடித்துத் தடுமாறிய நிலையில் தமக்குரியர் அல்லாத ஆண்களையும், பெண்களையும் அழைத்துக் கூடி இன்புற்றனர்.

''மங்கெ பூவுலோ விடிசி மத்திலி யுண்டெடு தேடிநிதிமீ
நாஸ்க சரோஜ ராக கவிதா பரணந்தர நிலவிலஹ
வாங்குரி 'தாருவச்சவி சமன்சி தலோசந தாசகத் துயுதல்
பிங்கமு ஜாபபாநமுல பெக்குவ ஜெக்கிரி பில்லதும்பதுஸ்''

என்றவாறு புதியதாக மணம் புரிந்த இளம்காதலர்கள் மணம பொருந்திய மலரில் மகரந்தம் உண்ட வண்டு களிகொண்டு இன்பமுற்றிருப்பதுபோல் களித்திருந்தனர். இன்ப விளையாட்டுக்கள் முடிவுற்றதும் வேட்டைக்குப் புறப்பட்டுச் சென்றனர்.

சேக்கிழார் பட்டம் சூட்டுதல் பற்றிக் கூற, தூர்சடி அதைக் குறிக்கவில்லை. இதற்குச் சேக்கிழாரின் அரசியல் தொடர்பே காரணமெனலாம். அரசனின் மகன் குடிகளைக் காக்கும் முழுப்பொறுப்பையும் ஏற்க வேண்டுமாயின் அவன் அவர்களின் தலைவன் ஆதல் வேண்டும். அதனால் சேக்கிழார் காட்டு மிருகங்களின் தொல்லையை வேட்டுவ மக்களின் வழி அறிவித்து நாக நாதனின் மூப்பையும் காட்டித் திண்ணனுக்குப் பட்டம் சூட்டுகிறார். தூர்சடி இவ்வாறு இயம்பவில்லை. கன்னி வேட்டைக்கு முன் செய்யும் பூசையையும் சேக்கிழார் தேவராட்டி மூலம் செய்விக்கிறார். ஆயின் தூர்சடி நாதநாதனும் வேடர்களும் செய்வதாகக் கூறுகிறார். தெய்வத்தின் பெயருடன் அதற்குப் படைக்குளீ பொருட்களையும் கூறுகிறார்.

சேக்கிழார், வேடர் கள் குடித்து மயங்கி முறை தவறிய புணர்ச்சியில் ஈடுபட்டதை எங்கும் குறிக்கவில்லை. ஆயின்

தூர்சடி இரண்டிடங்களில் குறித்துள்ளார். கன்னி வேட்டைக்குச் செல்லுமுன் தேவதைக்குப் பூசை இட்ட போதும், கதையின் துவக்கத்தில் வேடர்களின் பழக்க வழக்கங்களைக் கூறுங்காலும் இயம்புகிறார்.

## கன்னி வேட்டையின் காணிக்கை :

திண்ணன் தந்தைக்கும் காட்டு தேவதைக்கும் காணிக்கை ஏதும் அனுப்பியதாகச் சேக்கிழார் குறிப்பிட வில்லை. தூர்சடி கன்னி வேட்டையின்போது புலுலு (புலி கள்), குரங்கமுலு (குரங்குகள்), கரடி, போதமுலு ( ), மண்ணுபில்லுலு (காட்டுப்பூனை), துப்புலு (காளையைப் போல் பெரியதாக இருக்கும். எருமைக் கொம்புகள் போல் இவற்றின் கொம்புகள் இருக்கும். ஆயின் இவற்றிற்குக் கிளைகள் இருக்கும்), கனதுலு ( ), கிடுலு (பன்றி), செவ்வுல போதுலு (நரிகள்), கொர்ணவ கண்டலு ( ), செமறி மிருகம்புலு ( ), பல்லுகம்புலு, என போதுலு (ஆண் எருமை), கஸ்தூரி பில்லுலு (புனுகுப்பூனை)[60] போன்ற மிருகங்களைத் திண்ணன் தந்தைக்குக் காணிக்கையாக அனுப்புவதாகச் சுட்டுகிறார்.

பின் காட்ரேணி தேவதைக்கும் திண்ணன் காணிக்கை செலுத்துகிறார். பூசை வாயிலாக காணிக்கை செய்த முறையை,

> **''முதுபுவடிந மேகமு கொநிவச்சி மிடிகுருட்லு**
> **பொடிசி நீடசிரம தடிபி தோக**
> **கோசி தூபமிச்சி மீசலு பெகலிஞ்சி**
> **காநுகிச்சி காடிரேணி கொலசி''** [61]

என்ற பாடல் குறிக்கிறது.

முதலில் பிறந்த தலைச்சன் ஆட்டைக் கொணர்ந்து கண் முட்டைகளைக் குத்தி நீரில் நனைத்து வால் அறுத்துத் தூபம் காட்டி மீசைகளைத் தீய்த்து காட்ரேணி தேவதைக்குக்

காணிக்கையாக்கினர். பின் நன்கு கொழுத்த மிருகங்கள் சிலவற்றைக் கொன்று தோலுரித்துச் சுட்டுச் சுவையான பகுதிகளைத் தேர்ந்து, பறவையின் இறகுகளைப் பொசுக்கி ஒரு கல்லின்மேல் வைத்துத் தேனுடன கலந்து திண்ணனுக்கு ஊட்டினர். பின் வேட்டையாடக் காட்டிற்குள் சென்றனர்.

சேக்கிழார் இப்பூசை முறையைக் கூறவில்லை. நல்லதைக் கூறவேண்டும் எனும் எண்ணமே இதற்குக் காரணம் எனக் கருதலாம். ஆயின் தூர்சடி உள்ளதை உள்ளவாறே வேடர்களின் வாழ்வைப் பற்றித் தான் அறிந்ததைக் கூறியுள்ளார். தன் காலத்து வேடர்களின் வாழ்வை அவ்வாறே இயம்பியிருக்கலாம் எனக் கருதலாம். எனினும் இரு ஆசிரியர்களும் திண்ணன் வாழ்ந்த காலாவேடர் வாழ்வை அறிந்தவர்களல்லர். செவி வழிச் செய்திகள் கொண்டே நூல் யாத்தனர். அதனல் தமற்கேற்பக் கண்ணப்பர் வரலாற்றை எழுதினர்.

## சிவலிங்கம் காணல் :

தமிழ் : திண்ணன் காட்டில் வேட்டை நிகழ்த்துங்கால் கருமேகம் போன்றதொரு காட்டுப்பன்றி மேகம் போல் ஒலி செய்து வலைகளை யறுத்து வேடாகளையும் தப்பி விரைவாக ஓடியது. திண்ணன் அதைப் பின் தொடர்ந்தார். 62 அவரைப் பிரியா மெய்க்காவலராகிய நாணன்; காடன் இருவரும் அவரைத் தொடர்ந்தனர். அப்பன்றி வேட்டை நாய்களையும் தப்பிக் காட்டில் நெடுந்தூரம் ஓடி மேற்செல்லவன்மையின்றி இளைத்து ஒரு மரச் சூழலில் நின்றது. அதன் மீது அம்பெய்து கொல்ல நினையாது அணுகச் சென்று உடைவாளை உருவிக் குத்தி இருதுண்டாக்கினுர். 63 போர்க்களத்து வீரன் செய்யும் வீரப்போர் போல் வேடர்களும் உடைவாளினுல் இருதுண்டு படும்படி வெட்டுதல் சிறப்புச் செயலாகும். அரச மரபினை நன்கறிந்த சேக்கிழார் இவ்வாறு திண்ணனையும் சிறந்த வீரத் தலைவனகப் படைத்துள்ளார். உடன் வந்த வேடர் மகிழ்ந்து திண்ணனைப் புகழ்ந்து நெடுந்தூரம் வந்ததால் மிகுந்த பசி

யினால் இளைத்தோமென்றும், கொன்ற பன்றியைச் சுட்டு உண்ணலாமென்றும் கூறினர். திண்ணன் நல்லநீர் எங்குளது என வினவ, 'இப்பரந்த தேக்கு மரச் சோலையைத் தாண்டின் ஒரு மலை தொடரும், அதன் அடிவாரத்தில் குளிர்ந்த பொன் முகலி ஆறு செல்கிறது, அதில் குளிர்ந்த நீர் கிடைக்கும் 64 என அவர்கள் இயம்பினர்.

பன்றியைத் திண்ணன் கட்டளைப்படி எடுத்துக் கொண்டு திருக்காளத்தி மலையின் சாரலை நோக்கிச் சென்றனர். 'நாணனே! இவண் தென்படும் குன்றிற் செல்வோம்' எனத் திண்ணன் கூற நாணன், 'அங்குச் செல்லின் நல்ல காட்சியைக் காணலாம். இம்மலையில், செவ்வே எழுந்து கோணமில் குடுமித்தேவர் இருப்பர் கும்பிடலாம்' 65 என்று சொன்னான். இதைக் கேட்டதும், 'இஃதென்ன விந்தை! இதனைக் கண்டு சேருந்தோறும் என் மேல் உள்ள பாரம் குறைதல் போன்ற ஓர் உணர்வு உண்டாகிறது; ஆசை பொங்கிய மனத்தில் வேறு விருப்பம் தோன்றுகிறது; அங்குத் தேவர் இருக்கும் இடம் எங்கே? கூறுக' என்று விளம்பினார் திண்ணன். பொன்முகலியாற்றின் கரையை மூவரும் அடைந்ததும் காடனை நோக்கி, 'நீ இங்கு இரக்கடைத் தீக்கோல் வண்ணி நெருப்புக் கண்பாய்! 66 இம்மலையேறிக் கண்டு நாங்கள் வருவோமென்று' இயம்பி நாணனுடன் புறப்பட்டு ஆற்றைக் கடந்து உச்சிப்போதில் மலைச்சாரலை அடைந்தனர்.

''முன்புசெய் தவத்தினிட்ட முடிவிலா வின்பமான அன்பினை யெடுத்துக் காட்ட'' 67 என்ற சேக்கிழார் கூற்றுக் கிணங்க அளவற்ற ஆசை மீதூற என்புருக தீரா வேட்கை யுடன் மலையை நோக்கித் திண்ணன் சென்றார். நாணனும் அன்பும் வழிகாட்ட மலை ஏறிச் சென்று பேணும் தத்துவங் களென்னும் படிகளையேறி சிவத்தை அடைபவர் போலத் திண்ணன் நீண்ட மலையை நேர்படச் சென்றனர். 68 இந்நிலையில் காளத்திநாதரின் அருட்டிரு நோக்கம் இவர்

பால் விழுந்தது. பிறப்பில் தங்கிய முன்னைச் சார்புகள் யாவும் விட்டகன்றன. திண்ணன் ஒப்பற்ற அன்புருவ மானார். இந்நிலையில் திருக்காளத்தி நாதரைக் கண்டார் இதனைச் சேக்கிழார்,

**"மாகமார் திருக்காளத்தி மலையெழு கொழுந்தா யுள்ள**
**ஏகநா யகனைக் கண்டா ரெழுந்தபே ருவகைய ன்பின்**
**வேகமா னதுமேற் செல்ல மிக்கதோ விரைவினோடு**
**மோகமா யோடிச் சென்றார் தழுவினார் மோந்து நின்றார்"** 69

என்ற இப்பாட்டில் செப்பியுள்ளார்.

## தெலுங்கு :

வேட்டையாடிய களைப்பினால் திண்ணன் கேதகீ நதிக் கரையிலுள்ள பில்வ வனத்தில் படுத்துறங்கினார். உறக்கத்தில் உடலெல்லாம் வெள்ளையாகத் திருநீறு பூசி புலித்தோல் ஒட்டியாணம் அணிந்து பரட்டைத் தலையினராய் தாமரை மலர் போன்ற மென்மையான இரக்க குணம்உடையவாராய் ஓர் உருவம் கனவில் தோன்றியது. 70 அவ்வுருவம்,

**"பாலகா ! இசட சிலாவட**
**மூலம்புநக் கொட்டதம்ட மோகலே டிதரின்**
**ஷைல சுதாபதி பக்துல**
**பாலிடி பெங்நிதி வசிம்சு பக்திம் கொலும்"** 71

என்று கூறுகிறது. 'குழந்தாய் இங்கு ஒரு சிவலிங்கம் உள்ளது. அதைத் துதித்து மேன்மையடைக' என்று இயம்பி மறைந்தது. உறக்கத்தினின்று எழுந்த திண்ணன் நான்கு திசைகளிலும் கனவில் கண்ட உருவத்தைத் தேடினார். வாயினால் கத்தி ஒலி செய்து வலைகள் பரப்பி வேட்டைக்காக மிருகங்களைத் திரட்டினார். பல மிருகங்கள் வலையில் சிக்குண்டன. ஆயின் பன்றி ஒன்று வலையினின்று தப்பி ஓடுவதைக் கண்ட திண்ணன் அதைத் துரத்திச் சென்றார். நீண்டதூரம் சென்றபின் ஓரிடத்தில் நின்று தலையைத்

திருப்பி மறைந்து விடுகிறது. அப்பன்றியை நாற்புறமும் தேடி இறுதியில் சிவலிங்கத்தைக் காணுகிறார். இதனைத் தூர்சடி பின்வருமாறு கூறுகிறார்.

> ''அலயிவ்சகுத் திங்நடு தகநு
> கல்லோ பல கந்த சிவுநி கநுங்கோது தகென்
> ஜலமுந கொநி, சநி நய்யே
> கல மப்பு டத்ருஷ்யமைமந கூடு ஜோத்ய முநன்.'' 72

தின்னன், கனவில் கண்டது உண்மையே என்றும், எல்லாம் இறைவன் அருளே என்றும் எண்ணினன். சிவலிங்கம் கண்டதும் ஆனந்தம் மிக்கூர்ந்து கண்களில் நீர் ததும்ப உரோமம் சிலிர்க்கத் தரையில் விழுந்து வணங்கினர்.

பின் சிவலிங்கத்தை நோக்கி, 'சிவனே புலி, சிங்கம் முதலிய கொடிய விலங்குகள் வாழும் இக்காட்டில் ஏன் தனிமையில் இருக்கிறாய்; நீ என்னுடன் உடுமூருக்கு வந்தால் மான், பன்றி முதலிய மிருகங்களைக் கொன்று விருந்து படைப்போம்; மேலும் அங்கு நிவ்வரிபிய்யமு (மூங்கில் அரிசி, நொடிபில்லு, குணுகு பிராலு, வெதுரும்பிராலு, மேகமுலபாலு (ஆட்டுப்பால்) மற்றும் பாயாசம் முதலியன வும் படைப்போம்; இவற்றுடன் புட்டதேனு, பெரதேனு, புட்டஜீன்னு, தொர்ரதேனு என்றும் தேன் வகைகளையும், நேரேடு பண்டுலு (நாகப்பழம்), நெலயூட்டிபண்டுலு (நெல்லிக்காய்), கொண்ட மாடிபண்டுலு, தொண்ட பண்டுலு (கொவ்வைப்பழம்) பால பண்டுலு, நெம்மி பண்டுலு (ஊட்டி பழம் எனப் பேச்சு வழக்கில் தெலுங்கில் கூறுவர்), பரிவங்க பண்டுலு (சிகி பழம்), சிடிமுடிபண்டுலு, கலிம் பண்டுலு (கல்லகா பழம்), நொடிவந்த பண்டுலு, தும்மிகி பண்டுலு, ஜான பண்டுலு (கொய்யாப்பழம்), கங்கிரேணிபண்டுலு (ஜம்மு நாகப் பழம்), புல்லவெலக பண்டுலு (விலாம்பழம்), மேவி பண்டுலு, நங்கென பண்டுலு, பலசபண்டுலு (காரப்பழம்), பீரபண்டுலு, பிச்சுக பண்டுலு, கொம்மி பண்டுலு, கொஞ்சி பண்டுலு,

மேடிபண்ட்லு (அத்திப்பழம்) முதலிய பழவகைகளையும் வேடப்பெண்கள் அளித்து மகிழ்விப்பார்கள்[73] என்றெல்லாம் கூறித் தன்னுடன் வருமாறு அழைத்தார்.

திண்ணன் சிவலிங்கத்தைக் கண்டதும் சிவன் தன்னுடன் வரின் உறும் நன்மைகளைப் பதின்மூன்று பாடல்களில் தூர்சடி கூறுகிறார். ஆனால் எழுபத்தொன்றும் பாடல் திண்ணன் சிவனுக்கு நல்ல குறுகுறுத்த பார்வையினையுடைய இளம் பெண்களைப் பணிசெய்ய அனுப்புவதாகக் கூறுகிறார். இது சிவபூசையில் கரடி நுழைந்ததுபோல் உள்ளது என்றும் இப்பேச்சும் இப்பாடலில் உள்ள தன்மையும் ஒரு பாலகனுக்கு அற்பமாகத் தோன்றுது என்று வாவிலிகோலனு சுப்பாராவு[74] கூறுகிறார். இவர் கூற்று திண்ணன் பாலகனாக இருந்திருப்பின் பொருந்தும். திண்ணன் இளைஞன், வேடர் குலத் தலைவன், அரசன். அரசர்கள் பல அழகிய பெண்களைப் பணிப்பெண்களாக வைத்துக் கொள்வது வழக்கம். அதனாலேயே அரசன் காமுகனாகான். இவ்வாறே திண்ணனும் சிவனுக்கு இளம் பெண்களைப் பணி செய்ய அனுப்புவதாகக் கூறுவதும் காமவெறியாலன்று என்றே கொள்ளவேண்டும். மேலும் ஒன்றை இங்குக் கருதுதல் நன்மை தரும். காட்ரேணி தேவதைக்குப் பூசை செய்து முடிந்தபின் வேடர்கள் காமக்களியாட்டங்களில் ஈடுபட்டதைத் தூர்சடி கூறியபோதும் திண்ணன் அத்தகு களியாட்டங்களில் ஈடுபட்டதாகக் கூறவேயில்லை. மது உண்ட குறிபபோ அன்றிப் பெண்களுடன் தொடர்பு கொண்டது பற்றிய குறிப்போ எங்கும் சுட்டப்பெறவில்லை. இவற்றை நோக்குங்கால் திரு. சுப்பாராவு கருத்து பொருத்தமுடையதாக இல்லை என்பது விளங்குகிறது.

மேலும், சுற்றம் யாவும் தருவதாகவும் தன் சொல்லை நம்பி வருமாறும் இல்லையெனில் தான் அங்கேயே இருந்து விடுவதாவும்[75] கூறுகிறார்.

சேக்கிழார் தப்பி வந்த பன்றியைக் கொன்று, காளத்தி மலையேறிச் சிவலிங்கம் கண்டு பக்திப் பெருக்கால் பூசை

செய்ததாகக் குறிக்க, தூர்சடியோ திண்ணன் கனவு கண்டு, பின் பன்றி மறைந்த இடத்தில் கனவில் கண்டதுபோல் சிவலிங்கம் கண்டு, அதைத் தன் ஊருக்கு வருமாறும், பல பொருட்களைத் தருவதாகவும் இயம்பியும் வாராதிருக்க அங்கேயே இருந்து விடுகிறார். நாணனும் கடானும் திண்ணனுடன் வருவதாகச் சேக்கிழார் கூற, தூர்சடி எவரும் திண்ணனுடன் வருவதைப் பற்றிக் கூறவில்லை. நாணனும் காடனும் திண்ணனை அழைத்துச் செல்ல முயன்று பின் அம் முயற்சியை விடுத்து நாகனிடம் கூற அவனும் முயன்று பின் தானும் அம்முயற்சி விடுத்து வாளா சென்றனர் எனச் சேக்கிழார் கூற, தூர்சடியோ திண்ணனை வேடர்கள் பலவாறு அழைத்தும் அவர் வாராதிருக்கவே வாளா செல்கின்றனர் என்கிறார். திண்ணன் சிவலிங்கத்தைக் கண்டபின் எவருடனும் பேசியதாகக் கூறவில்லை சேக்கிழார். ஆனால் தூர்சடி, திண்ணன் தன்னை ஊருக்கு அழைத்த வேடர்களுடன் பேசுவதாகக் கூறுகிறார். திண்ணன் பன்றியைத் தன் குறுவாளால் இருதுண்டமாக்கினர் என்று சேக்கிழார் கூற தூர்சடி,பன்றி சிவலிங்கம் இருந்த இடத்தில் மறைந்து விட்டதாகக் கூறுகிறார். மேலும், பன்றியைக் கொன்றது ஓரிடம், சிவலிங்கம் கண்டது ஓரிடம் என்று சேக்கிழார் கூறுகிறார். தூர்சடி, பன்றி மறைந்த இடத்திலேயே சிவலிங்கத்தைத் திண்ணன் கண்டதாகக் கூறுகிறார். பன்றியைக் கொன்ற பின்பே சிவலிங்கம் பற்றிய உணர்வு திண்ணனை ஆட்கொள்வதாகக் கூறுகிறார் சேக்கிழார். ஆனால் தூர்சடி, பன்றி மறைவதற்கு முன்பே சிவலிங்கம் பற்றிய உணர்வைத் திண்ணன் கனவில் உணர்ந்த தாகக் கூறுகிறார்.

## சிவலிங்கப்பூசை :

தமிழ் : சிவலிங்கத்தைக் கண்டதும் அன்புருவமானார் திண்ணன். அளவற்ற மகிழ்ச்சியால் விரைந்து ஓடிச் சிவலிங்கத்தைத் தழுவிக் கொண்டார். கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் அருவி போல் வழிய கையில் ஏந்திய வில்

நழுவி விழச் சிவலிங்கத்தைக் கண் குளிரக் கண்ணுற்ருர். [76] அதன்மேல் இருந்த அடையாளங்களைக் கண்டு இச்செயலைச் செய்தது யாரோ என நாணனை வினவினர். நாணன் தாம் முன்னொரு நாள் வேட்டையாடி இவண் வந்துற்றபோது ஒரு அந்தணர் இவரைக் குளிர்ந்த நீரால் கழுவி இலையும் பூவும் சூட்டி உணவு படைத்து ஏதோ சொல்லவும் செய்தார் [77] என்ருன். இதைக் கேட்டதும் திண்ணன் இவர்க்கு உகந்த செயல் இஃதேயாம் என்றெண்ணி அதைப் பற்றியொழுக எண்ணினர்.

காலம் கழிவதை அறிந்த நாணனும் காடனும் தங்களுடன் மீண்டு வருமாறு வேண்டியும் அவர்கட்கு விடையிறுக்காது பன்றியைத் தீயில் வதக்கினர்; நல்ல தசைப் பகுதிகளை அம்பினல் அறிந்து கோலில் கோத்துக் காய்ச்சி வாயில் போட்டு வதக்கிச் சுவையானவற்றைத் தேக்கிலைக் கல்லையில் எடுத்துக் கொண்டார்; திருமஞ்சனத் திற்காக பொன்முகலியாற்றின் நீரைத் தம் வாயினல் எடுத்துக் கொண்டு தூய மணம் நிறைந்த பூ, இலைகளைத் தம் குடுமியில் செருகிக் கொண்டு ஒரு கையில் வில்லும் அம்பும், பிறிதொருகையில் ஊனமுதக்கல்லையும் கொண்டு பசியால் நாயனர் இளைத்தனர் என்றெண்ணி விரைந்து சென்று, திருமுடியில் இருந்த மலர்களைத் தம் காலில் உள்ள வளைந்த அழகிய செருப்பினல் தள்ளினர்; கொணர்ந்த பூக்களை இட்டார்; வாயில் உள்ள நீரை முடிமேல் விட்டார்; தம் குஞ்சியில் கொணர்ந்த திருப்பள்ளித்தாமத்தை அவர் திருமுடியில் வணங்கிச் சாத்தினர்; ஊனைப் படைத்து இனிய சுவையான உணவு கொணர்ந்திருப்பதாகவும் அதை உண்ணுமாறும் வேண்டினர். [78] இதற்குள் சூரியன் மறையத் துவங்கினன். மாலை சென்று இரவு வந்ததும் இனி காட்டு விலங்குகள் இவர்க்குத் தீங்கு செய்யும் என்றஞ்சி இரவு முழுவதும் இறைவன் அருகில் நின்று உறங்காது காவல் புரிந்தார் திண்ணனர். இவ்வாறு முதல் நாள் பூசை நிறைவுற்றது.

தெலுங்கு :

வெகு நாட்களாகச் சிவன் இக்காட்டில் உணவின்றி இருக்கிறான்; அதனால் அவன் அடிமையான நான் அவருக்குண்டான துன்பத்தைத் துடைக்க வேண்டும்,[80] என்றெண்ணிய திண்ணன், தேவதேவனுக்குப் பக்தி செலுத்த வேண்டிக் கொடிய விலங்குகளைக் கொன்று அவற்றின் மாமிசத்தைச் சுட்டு இனியவற்றை இலையில் வைத்து வில்லை ஒரு கையில் எடுத்துக் கொண்டு அம்புப் பொதியை முதுகில் கட்டிக் கொண்டு வாயில் பொன் முகலி நீரைக் கொண்டு மனத்தில் எல்லையற்ற பக்தி கொண்டு சென்று நீரால் சிவனைக் கழுவி ஊனமுது படைத்து உண்ணுமாறு வேண்டுகிறான்.[81]

சிவன் அவற்றை உண்ணாதிருக்கத் திண்ணன் 'இவை சரியாகச் சுடப்படவில்லையா! கொழுப்பில்லையா! தீய்ந்தனவோ! போதாதா! பழக்கம் இல்லையா! எதற்கு உண்ண மறுக்கிறாய்' என்று சிவனிடம் கேட்கிறார். மேலும், 'பின் பசி இல்லையா! நான் உண்மைப் பக்தனில்லையா! என்பால் கருணை காட்டி இவற்றை உண்க' என வேண்டியும் சிவன் உண்ணாதிருக்க,

> **''நிவாரகிம் பகும்டி ந**
> **ஜீவந மேமிடிகி நாகு? சிவா! நீபதரா**
> **ஜீவமுலமீத ப்ராணமு**
> **நே விடுது''**[82]

எனக் கதறி வருந்துகிறான். 'நீ உண்ணாயாயின் நான் உயிர் வாழ்வது எதற்கு? உன் மலரடிகளில் விழுந்து உயிர்விடுவேன்'' எனக் கூறி அவர் அடிகளில் விழுந்து அழுதான். திண்ணன் பக்திக்கு மகிழ்ந்த இறைவன் உடனே அமுதை உண்டார்.

**''சரகுந கறகுட்ளந்நா! திநியெத் லேலெ''**[83]

என்பது இறைவன் கூற்று. சிவன் உணவை உண்டதனால்

ஏற்பட்ட மகிழ்ச்சியால் திண்ணன் காட்டில் சுற்றிக் காலம் கழித்தார்.

சிவனுக்கு இனிய ஊனமுதம் படைத்துப்பின் கொடிய விலங்குகளால் இவருக்குத் தீங்கு நேரும் எனக் கருதிக் காவல் காத்ததாகச் சேக்கிழார் பின்வருமாறு சுட்டுகிறார்.

**''அவ்வழி யந்தி மாலை யணைதலு மிரவு சேரும்**
**வெவ்விலங் குளவென் றஞ்சி மெய்ம்மையில்**
**வேறு கொள்ளச்**
**செவ்விய வன்பு தாங்கித் திருக்கையிற் சிலையுந்தாங்கி**
**மைவரை யென்ன வையர் மருங்கிநின் றகலா'**
**நின்றார்.''** 84

தெலுங்கில்,

**''அம்திய்ய சிவுடு தக நா**
**நம்திம்சுசு நாரகிம்சிந ந்முதமுந மி**
**ந் நம்தி புவிம் தேம் த்ருரு கா**
**நம் திருகுசு நிட்கு திநதிநம்புறு கொலுவன்''** 85

என்று தூர்சடி பாடியுள்ளார். திண்ணன் சிவபெருமான் உண்டவுடன் காட்டில் சுற்றி நேரம் போக்கினான் என்பது இதன் பொருள். உலகையும் உயிர்களையும் காக்கும் எல்லா வன்மையும் படைத்த இறைவனைப் பக்தி வலைக்குட்படுத்து முகமாக அவனுக்குத் தீங்கு நேராவாறு காக்கிறான் திண்ணன் என்று சேக்கிழார் கூறுகிறார். தூர்சடி பகரும் திண்ணனோ இறைவனுக்கு உணவளித்து மகிழும் நிலையிலேயே இருந்து விடுகிறார். எனினும் தூர்சடி பகரும் திண்ணனின் பக்தியின் சிறப்பினும் சேக்கிழார் பகரும் திண்ணனின் பக்தியே சிறப்புடையதெனலாம்.

## சிவகோசரியார் பூசை :

**தமிழ் :** இரவு நீங்கப் புட்கள் ஓசைகேட்டுப் புலர் காலையில் உருமிகத் தெரியாத நிலையில் தேவரைத் தொழுது வில்லேந்தி அமுது கொணர்தற்காகத் திண்ணனார்

போயினர். காளத்தி நாதரை ஆகமவழி பூசித்துவரும் சிவகோசரியார் பூவும் நீரும் கொண்டு தேவர் அருகணைந்தார். அவர் அங்கு இறைச்சியும் எலும்பும் கண்டு பதைபதைத்து இதைச் செய்தவர் எவரோ என வருந்தி, 'திரு முன்பு நேர்வர அஞ்சாத வேடரே இதைச் செய்திருத்தல் வேண்டும். இறைவா! உன் திருமுன் இதைச் செய்து அவர்கள் போவதா? இதற்குத் தேவரீர் திருவுள்ளம் இசைவதா?' என்று அழுதார். எனினும் பூசையைத் தாழ்த்தாது திருவலகால் சுத்தம் செய்து பொன்முகலி யாற்றில் மூழ்கி நீரும் பூவும் கொணர்ந்து முறையாகப் பூசை செய்து தம்மிடமடைந்தார். 86

## தெலுங்கு

திருநீறு பட்டையாகப் பூசிய உடல், கழுத்தில் உருத்திராக்கிர மாலைகள், மார்பில் பூணூல், ஒருகையில் அபிடேகத்திற்குரிய பால்குடம், அடுத்த கையில் மலர் மாலைகள், பெரிய தொப்பை, குள்ளம், இடுப்பில் மேல்துண்டு எனும் இத்தகு கோலம் கொண்ட சிவப் பிராமணர் யோகிகள் மனதுக்கு மட்டிலும் விளக்கமுறும் சிவனைப் பூசிக்க வந்தார். 87 கோயிலில் நுழைந்ததும் அங்கிருந்த கோரக் காட்சியைக் கண்டு,

> ''ஈஷ்வரேஷ்வருதி நிர்ம
> வாங்க மேடிகி ஜாங்க லய்யெ? நகட!
> இசடி கெம்கிலி புல்லிய லேல வச்செ
> நொக்கொ? ஈதுஷக மெடுவலெ னோர்தவாட? 88

என்று கூறி புலம்புகிறார். 'என் தெய்வத்தை நீராட்டி அலங்கரித்திருக்க உள்ளே எச்சில் இலைகளோடு மாமிசத் துண்டங்கள் வரக் காரணம் என்ன? தூய நீரால் சுத்தம் செய்யப்பட்ட சிவலிங்கம் காய்ந்து போகக் காரணம் என்ன? இது வேதனையை உண்டாக்குகிறது. 89 இறைவா? மலர்களை மட்டுமே தொடும் இக்கைகளால் உன் தூய லிங்கத்தைத் தொடவும் நான் அஞ்சுகிறேன். ஆயின்

எச்சில் மாமிசத்தால் அசுத்தம் செய்ததை எவ்வாறு பொறுத்துக் கொண்டாய்; 'சிவனே கூறு'[90] என்று கேட்டார் அந்தணர்.

இதன்பின் தமிழில் சேக்கிழார் கூறியதுபோல் அங்கிருந்த மாமிசத் துண்டுகளை அகற்றிப் பொன்முகலி ஆற்றில் மூழ்கித் தம் பூசையைச் செய்தார் என்பது போன்று தெலுங்கில் தூர்சடி கூறவில்லை; பூசாரியார் பலவாறு புலம்புவதையே கூறியுள்ளார். அவர் பூசை செய்ததாக ஒரு பாடலிலும் சுட்டவில்லை. மேலும் முதல், இரண்டு, ஏழாம் நாள் பூசைகளையும் குறிக்கவில்லை. பொதுவாகத் திண்ணன் செயல்களைப் பாடுகிறார். இறுதியில் சிவப்பிராமணர் வாய்மொழியாக அசுத்தம் இவ்வாறு ஏற்பட்டு இன்றுடன் ஏழு நாட்கள் ஆகின்றன என்று கூறுகிறார். அவர் கூற்று பின்வருமாறு:

> **''நே டேடு — தினமு லய்யெம்**
> **பொடிமி செடசாகி து பூடகமோ? யெ**
> **வ்வாடைடநு சேசெநோ யிதி**
> **வேம் டெத சத்யம்பு செப்பவே கருணப்தி''** [91]

இதனைக் கொண்டு திண்ணன் ஏழு நாட்கள் பூசை செய்தாரென யூகிக்கலாம். சேக்கிழார் முதல், இரண்டாம் நாள் பூசைகளைக் கூறி இறுதியாக ஆறாம் நாட்பூசையைச் செய்து முக்தி பெற்றதாகப் பாடியுள்ளார். ஆனால் தூர்சடி ஏழு நாட்கள் பூசை செய்து ஏழாம்நாள் கண்ணப்பியதாகக் கூறுகிறார்.

இதற்கிடையில் நாணனும் காடனும் நாகனிடம் திண்ணன் கொண்ட நிலையைக் கூற உணவும் உறக்கமும் இன்றி மகன்பால் அனைந்து தாங்களறிந்தவாறெல்லாம் பேசிப் போதித்தும் தம் நிலைக்கு வராமை கண்டு கை விட்டகன்றனர் என்று சேக்கிழார் கூறுகிறார். ஆயின் தூர்சடி இவ்வாறு நாகன் முயற்சித்தமை குறித்து ஏதும் சுட்டவில்லை.

தூர்சடி, சிவப்பிராமணர் சிவனிடம், 'இவ்வசுத்தம் செய்தது யார்? உன் நண்பனோ! உன் மகனோ! உன் மனைவியோ! உன் உண்மைச் சேவகனோ அல்லது நீயே இவ்வாறு செய்தனையோ! [92] என்று பலவாறு கேட்பதாகக் கூறுகிறார். மேலும், 'அழுக்கடைந்த ஆடைகளை அணிந்தாய் உன்னினும் தாழ்ந்தவனுடன் உணவு உண்டாய், பிணம் சுட்ட சாம்பலை உடல் நிறையப் பூசிக் கொண்டாய், கபாலத்தில் உண்டாய், இவற்றையெல்லாம் நீ விரும்பினாய் எனவே இச்செயலும் உனக்கு விருப்பம் போலும், [93] உனக்கு விருப்பமாயினும் இத்தீமையைச் செய்தவனைச் சொல்லின் அதுவே எனக்குப் பத்து இலட்சம், இல்லையெனில் உயிர்விடுவேன்' [94] என்று புலம்புவதாகத் தூர்சடி கூறுகிறார்.

ஆயின் சேக்கிழாரோ இத்தீங்கை ஒழித்தருள வேண்டும் என்று மட்டிலும் இயம்புகிறார். தூர்சடி பகரும் சிவகோசரியார் உணர்ச்சி வயப்பட்டவராகவும், சேக்கிழார் பகரும் சிவகோசரியார் இறைவன் செயலுக்கு முதலிடம் அளிப்பவராகவும் காணப்படுகிறார்.

## திண்ணன் பக்தியை சிவகோசரியாருக்குக் காட்டுதல் :

**தமிழ் :** ஐந்தாம் நாள் இரவு சிவன் சிவகோசரியார் கனவில் தோன்றி திண்ணனின் பக்தியைக் கூறி வேடுவன் என்று திண்ணனை எண்ணற்க என்றும், "அவனுடைய செயலெல்லா நமக்கினிய வாம் "[95] என்றும் நாளை நம் பக்கல் ஒளித்திருந்து அவன் அன்பின் தன்மையைக் காணுமாறும் கவலையை விடுமாறும் கூறுகிறார்.

**தெலுங்கு :** 'சிவபக்தா! என்னை வேடன் ஒருவன் சாத்திரத்திற்கு விரோதமாகப் பக்தியுடன் பூசித்து வருகிறான். அதனால் எனக்குஅவன்பால் இரக்கம் ஏற்பட்டது. அதனால் அவன் பக்தியை ஏற்றுக் கொண்டேன். அவன் பக்தியை என் பின் மறைந்திருந்து பார்க்கவும்'[96] என்று சிவன் சிவகோசரியாரிடம் கூறுகிறார்.

தமிழில் சேக்கிழார் சிவப்பிராமணர் கனவில் தோன்றி திண்ணனின் பக்தியின் மேன்மையைக் கூறி நாளை தம் பக்கல் மறைந்திருந்து காணுமாறு கூறியதாகக் கூறுகிருர்.

ஆனல் தெலுங்கில் தூர்சடி ஏழாம் நாள் பூசையின் போது இத்தீமையைச் செய்தவன் யாரெனக் கூருவிடில் தாம் உயிரை மாய்த்துக் கொள்வதாகச் சிவகோசரியார் கூறியதாகவும் சிவன் தோன்றித் தன்பின் மறைந்திருந்து திண்ணனின் பக்தியைக் காணுமாறும் கூறியதாகக் கூறுகிருர்.

சேக்கிழார் திண்ணனின் பக்தியை உயர்ந்ததாகக் காட்ட வேண்டியே சிவகோசரியார் கனவில் தோன்றிக் கூறியதாகக் கொள்ளலாம். சேக்கிழாருக்கு நாயன்மார்க்குச் சிறப்பிடம் அளிக்க வேண்டும் என்ற எண்ணமிருத்தலால் இவ்வாறு பகர்ந்திருக்கலாம். அதனல்தான் சிவகோசரி யாருக்கு முதலில் காட்சி தருவதாகவும் பின் கண்ணப் பனுக்கு காட்சி தருவதாகவும் சுட்டவில்லை.

ஆயின் தூர்சடிக்குச் சிவபக்தர் யாவரும் ஒன்றே, மேலும் அவர் வீரசைவராயிருந்து அத்வைதியாய் மாறியவர். ஆதலால் சிவபெருமான் ஒரு சைவன் அல்லாத வேடனுக்கு முதலில் காட்சி தருவதைக் கூற அவர் விரும்ப வில்லைபோலும். இதனலேயே அவர் முதலில் சிவன் அந்தணருக்கு நேரில் தோன்றிக் கூறியதாகக் கூறினர் எனக் கருதலாம்''

## திண்ணப்பர் கண்ணப்பராதல்:

தமிழ் : சிவகோசரியார் கனவு நீங்கி அதிகாலை எழுந்து திருமுகலியில் மூழ்கிப் பலவாறு தம்பெருமானின் அருட்டிறத்தை நினைந்து மலையேறி இறைவனைப் பூசித்துப் பின்பாக ஒளிந்திருந்தார். திண்ணன் அதிகாலையில் வேட்டைக்குச் சென்று ஒப்பற்ற ஊனமுதும், திருமுடியில் ஏறும் புதுமலரும் நல்ல திருமஞ்சனமும் கொண்டு விரை

வாகத் திருக்காளத்தியப்பரிடம் வந்தணைந்தார். அந் நிலையில்,

**"மொய்த்தபல் சகுண மெல்லாம் முறைமுறை தீங்கு செய்ய**
**இத்தகுதீய புட்க ளின்டமுன் நுதிரங் காட்டும்**
**அத்தனுக் கென்கொல் கெட்டே னடுத்த தென்"** 97...

என்றவாறு தீச்சகுணங்கள் தோன்றின. இஃது காவிய உத்திகளில் ஒன்றாகும். ஆயின் தூர்சடி தீச்சகுணங்கள் பற்றி எதுவும் குறிப்பிடவில்லை.

திண்ணன் காளத்திநாதரை நெருங்குங்கால் இவரின் பக்தியைச் சிவகோசரியாருக்குக் காட்ட ஒரு கண்ணினின்று குருதி வருமாறு செய்தார். இதைக் கண்ணுற்றதும் அவர் வாயிலிருந்து நன்னீர் சிந்தியது, ஊனமுதம் கையிலிருந்து வீழ்ந்து சிதறியது, வில்லும்வீழ்ந்தது, குஞ்சியினின்றும் மலர்கள் வீழ்ந்தன, திண்ணனார் நிலத்தில் வீழ்ந்து பதை பதைத்து குருதியைத் துடைக்கவும் நிற்காததைக் கண்டதும் வருந்தி 'இதை யார் செய்தவர்' என்று வில்லும், அம்பும் கொண்டு தேவருக்கு இத்தீங்கைச் செய்தவரை ஒறுப்பேன் என்று சென்று யாரையும் காணாது தேவரைத் தழுவி என் செயின் இது தீரும் என்று பகர்ந்து மூலிகைகள் கொணர்ந்து பிழிய அதுவும் பயனற்றுப் போக இறுதியில்,

**"உற்ற நோய் திர்ப தூனுக் கூனெனு முரைமுன்"** 98 என்பதை நினைவு கூர்ந்து மிக மகிழ்ந்து தம் வலக்கண்ணைத் தோண்டி முதல்வர் கண்ணில் அப்பினார். அதனால் குருதி நின்றது. அதனால் மகிழ்ச்சி மிகப்பெற்று உன்மத்தர் போலானார். 99

மேலும் திண்ணனின் பக்தி நலனைக் காட்ட விழைந்த இறைவர் தம் இடக்கண்ணிலும் குருதி வடியுமாறு செய்தார். அதைக் கண்ட திண்ணன் அஞ்சாது அவரது கண்ணில் தமது இடது காலை ஊன்றிக் கொண்டு இடக்கண்ணைப்

பிடுங்க அம்பை ஊன்றினுர். 100 இந்நிலையில் சிவன் வெளிப் பட்டுக் "கண்ணப்ப நிற்க" 101 என்று மூன்று முறை கூறி அவரைத் தடுத்தார்.

இறைவர் திருமேனியிலிருந்து முளைத்தெழுந்த திருக்கை கண்ணப்பரது கையினை அன்புடன் பிடித்துக் கொண்டது. அதற்கு முன் அவரது அமுதவாயினின்றும் "கண்ணப்ப நிற்க" என்ற ஒலி மும்முறை எழுந்து தடுத்தது. இவற்றை மறைந்திருந்த சிவசோசரியார் கண்டார். வேதங்கள் முழங்க பிரமன் முதலிய தேவர்கள் பூமழை பொழிந்தனர். கையைப் பற்றிக் கொண்ட இறைவர் கண்ணப்பரை, "மாறில்லாய் என்வலத்தில் நிற்க" 102 என்று கூறி அருள் புரிந்து ஆட்கொண்டார்.

**தெலுங்கு :** சிவன் சிவப்பிராமணரிடம் தம்பின்பு மறைந்திருக்குமாறு கூறியதும் மகிழ்ச்சியுடன் அவ்வாறே செய்கிறுர். வேட்டைக்குச் சென்ற திண்ணன் திரும்பி இலையைப் பரப்பி அதில் சுட்ட பன்றி மாமிசமாகிய ஊனமுதைப் படைத்தார். உண்ணுமாறு வேண்டி அருகிருந்து எடுத்துக் கொடுத்தார். சிவன் உண்ணுதிருக்கக் கண்டு,

> "தினகுந்த நேமொ கோ யநி
> யதுமாநமு பொம்த ....." 103

உண்ணுததன் காரணத்தைப் பார்க்குங்கால் சிவபெருமான் கண்களில் இருந்து கண்ணீர் வழிவதைக் கண்டார். மலர்ந்தும் மலராமலும் இருக்கும் தாமரையில் இருந்து மகரந்தம் ஒழுகுவதுபோல் சிவன் கண்ணில் இருந்து வடியும் கண்ணீரும் அதிகமானது 104 (நபவு டம் தடிலோ ந கநுதம்மி க்ரம்மி பொடபொட சிறிகெம் கந்நீடு). திண்ணன் சிவனுக்குக் கண்வலியாக இருப்பதால் அமுதம் செய்யவில்லை என்று கருதி தக்கமருந்து தேட முயன்றுர். அதற்கு 'தாப்கேடாகு' (ஆவரம் இலை) தலையில் வைத்து 'ரேசகி நிம்ம (எலுமிச்சம் பழ இலை) பம்டி

புல்புந' அரைத்துப்பட்டுபோடுகிறார்; 'தெல்ல திண்டெநபூ', 'கலிவெபுவ்வுலு (அல்லிமலர்) அறுத்து நசுக்கிப் பிழிந்தார்; 'பேரிநநெய்யி' (உறைந்த நெய்) வைத்து 'பெருகு வத்துலு' தயிரில் தோய்ந்த வத்திகள் போட்டு, 'சநுபாலதோ' (முலைப்பால்) 'நசிசங்கு' (சங்கு) என்ற தான் கேட்ட மருந்துகளையும், காட்டு மருந்துகளையும் இவை போன்ற பிற மருந்து வகைகளையும் வைத்தும் கண்ணீர் நிற்கவில்லை. இம்மருந்துகளால் கண்ணில் மேலும் குழி விழுந்து இரத்தம் வழிந்தது. எத்தகு வைத்தியம் செய்யினும் அனைத்தும் நீர்மேல் எழுத்துப்போல் வீண் ஆயிற்று. 105

மேலும் பட்டத்து ராணியும், இமயமலையின் குமரியும் என்னுடைய தாயுமான பார்வதியைக் கோபித்ததினால் உனக்குக் கண்கள் இவ்வாறு ஆனதோ? எனக்குத் தெரியாத மருந்து எதுவும் இல்லை, என்ன செய்தும் கண்ணுக்குத் தீங்கு குறையவில்லையே; 106 'மன்மதனை எரித்துக் காமம் குரோதம் என்னும் எவ்விதத் தீமையும் மனதில் இல்லாத சிவனை நான் இவ்விதம் கூறுதல் சுவாமி துரோகம் அல்லவா! எதற்காக இவ்விதம் உரைத்தேன் இக்கண்ணுக்கு எவ்வைத்தியம் நான் செய்வேனோ'? 107 என்றெல்லாம் திண்ணன் வருந்தினார்.

இறுதியில் திண்ணன் கண்வலி தீர்க்கக் கண்ணே சிறந்த மருந்து எனத் தெரிகிறார்.

**'கம்டி கிம்க கம்டிகம்டே மம்து கலதெ முக்கம்**
**டிதி கம்டி.** 108

உயிர்போய் உடல் வீழ்தல் போல் அம்பினால் கண்ணைப் பிடுங்கி அப்பினார். அதனால் அக்கண்ணில் குருதி நின்று மறுகண்ணில் குருதி வழிந்தது. இதைக் கண்ட திண்ணன் வருந்தாது இரண்டாவது கண்ணை அறியும் அடையாளத்திற் காகச் செருப்புக் காலால் அவ்விடம் வைத்துக் கொண்டு இரண்டாவது கண்ணை அம்பினால் பெயர்க்குங்கால் சிவன் வெளிப்பட்டு நில்! நில்! 109 என்று கூறினார்.

பிரம்மா, விட்டுணு, முனிவர்கள், அட்டதிக்குப் பாலகர்கள் முதலானோர் சுற்றிலும் ஆராதித்திருக்கச் சிவலிங்கத்தில் இருந்து வெளிப்பட்டுப் பார்வதியின் கையைப் பற்றிக் கொண்டு திண்ணன் முன் தோன்றினர். 110 அவர் சிவகோசரியாரை நோக்கி, 'எல்லையில்லா இவன் பக்தியைக் கண்டாய் அல்லவா! ஆதி அந்தம் இல்லாப் பக்தியைப் பார்த்தாயா! இவன் உண்மையான பக்தன் அன்றோ? உன் மனதிற்கு இப்போது அமைதிதானே 111 என்று கூறி இருவரையும் அருகழைத்து உங்கட்கு வேண்டும் வரம் கேளுங்கள் 112 என்றார். சிவகோசரியார் 'உன் பரிபூரணமான சக்தியைக் காட்டி உலகின் மாயையைத் தெளியச் செய்து எங்கட்கு உலக ஆசையை ஒழித்து ஆசையின்மையாகிய குணம் கொடுத்து இவ்வுடம்பை வெறுக்கும் வரம் வேண்டும்' 113 என்று கேட்டார்.

'இவ்வுலகத்தில் மனிதனில் இருக்கும் மனசாட்சி அல்லது உள்மனம் எல்லாம் நீயே என்று வேதங்கள் கூறக் கேட்கும் நாங்கள் வேறு ஒன்றை எவ்விதம் வேண்டுவோம். உன் மனம் எனும் ஆகாயத்தில் எங்களைச் சேர்த்து இப்பிறப்பிலிருந்து காப்பாற்றுக' 114 என்று வேண்டினர்.

பின், 'இவன் வேடன், துட்ட புத்தியுடைய வேடர் குலத்தில் தோன்றியவன். என்னைக் கேட்டு என்பால் தயை கொண்டு உன் உருவம் காட்டினாய். அதுபோன்றே இவனையும் பிறப்பு இறப்புத் தளைகளில் இருந்து விடுவித்து ஆட்கொள்ள வேண்டும்' 115 என்றார்.

பின், உன் விருப்பத்திற்கு மாறாக எங்கட்கு வேறு இல்லை. எனவே உன் விருப்பம் போல் செய்! ஆனந்தக் கடலில் மனம் மூழ்கியுள்ளது. அதில் அவ்வாறே மூழ்கச் செய் இறைவா' என்றும் வேண்டி இருவரும் நெடிது வீழ்ந்தனர். சிவன், தூய மனதுடன் உலகப்பற்று நீங்க அருள் புரிந்து அவர்களைத் தன் இதயத்தின் ஒன்றாக்கினான்.

கண்ணப்பர் முத்தி பெற்ற நிலை தமிழ் தெலுங்கு இரண்டிலும் மாறுபட்டு விளங்குகிறது. தூர்சடி தெலுங்கில் திண்ணன் சிவபெருமான் கண்வலிக்குப் பல்வகை மருந்துகளை இட்டதாகக் கூறுகிறார். சேக்கிழார் அவ்வாறு கூறவில்லை.

கண்ணிலிருந்து குருதி வருதற்கான காரணத்தைத் தூர்சடி கூறியிருப்பதுபோல் சேக்கிழார் இயம்பவில்லை.

சேக்கிழார் முதலில் வலது கண்ணில் இருந்து குருதி வடிவதாகக் கூறிப்பின் இடது கண்ணில் இருந்து குருதி வடிவதாகக் கூறுகிறார். தூர்சடி வலதுகண், இடதுகண் என்று குறிப்பிடவில்லை. பொதுவாக முதலாவது கண் இரண்டாவது கண் என்று மட்டிலும் கூறுகிறார்.

சேக்கிழார் இரண்டு கண்களிலிருந்தும் குருதி வருகிறது என்கிறார். தூர்சடியோ முதலில் முதல் கண்ணிலிருந்து கண்ணீரும், பின் குருதிவருவதாகவும், பின் இரண்டாவது கண்ணிலிருந்து குருதி வடிவதாகவும் கூறுகிறார்.

சிவபெருமான் 'கண்ணப்ப நிற்க' என்று மூன்று முறை கூறுவதாகச் சேக்கிழார் பாடுகிறார். தூர்சடியோ, ''நிலுவு! நிலுவு! (நில்! நில்) என்று இரண்டு முறை கூறுவதாகக் கூறுகிறார்.

சேக்கிழார் திண்ணன் கையைப் பற்றிச் சிவபெருமான் தடுத்ததாகக் கூறுகிறார். ஆனால் தூர்சடி, அவ்வாறு இயம்பவில்லை.

தூர்சடி சிவபெருமானுக்கும் சிவகோசரியாருக்கும் உரையாடல் நிகழ்வதாகக் கூறுகிறார். ஆனால் சேக்கிழார் அவ்வாறு கூறவில்லை.

தூர்சடி, சிவன் சிவலிங்கத்தினின்று வெளிப்பட்டு இருவரையும் தன் அருகழைத்து வேண்டும் வரங்கள் கேட்குமாறு கூறுவதாகப் பாடுகிறார், சேக்கிழார் அவ்வாறு சுட்ட

வில்லை. வரங்கள் கேட்பதாகத் தூர்சடி கூறச் சேக்கிழா கூறவில்லை.

முக்திக்குச் சிவகோசரியார் சிவனிடம் பரிந்துரை செய்வதாகத் தூர்சடி பாடுகிருர். சேக்கிழார் பரிந்துரை செய்வதைப் பாடவில்லை.

சிவகோசரியார் முக்தி பெற்ருரா இல்லையா என்று சேக்கிழார் குறிக்கவில்லை. ஆனல் திண்ணன் மட்டிலும் சிவனல் ஆட்கொள்ளப் பெற்றதைச் சுட்டுகிருர். ஆயின் தூர்சடி, சிவன் இருவரையும் அவ்வியமே ஆட்கொண்ட தாகக் கூறியுள்ளார்.

# அடிக்குறிப்புகள்

1. தேவாரம், மூன்றாந்திருமுறை, கூடற்சதுக்கம், பா.
2. மே. ப., தென் குடித்திட்டைப் பதிகம், பா.
3. மே. ப., பா. 4.
4. மே. ப., நான்காந் திருமுறை, திருச்சாய்க் காட்டுப் பதிகம், பா. 8.
5. மே. பா., திருக்குறுக்கை வீரட்டப் பதிகம், பா. 7.
6. மே. ப., ஆறாந்திருமுறை, திருமழபாடிப் பதிகம். பா. 9.
7. மே. ப., திருச்சிவபுரம் பதிகம், பா. 1.
8. மே. ப., தனித்திருத்தாண்டகம், பா. 1.
9. மே. ப., திருக்கழிப்பாலைப் பதிகம், பா. 6.
10. மே. பா., ஏழாந்திருமுறை, திருத்தொண்டத் தொகை, பா. 2.
11. மே. ப., திருப்புன்கூர் பதிகம், பா. 7.
12. மே. ப., திருநின்றியூர் பதிகம், பா.
13. மே. ப. திருவீழிமிழலைப் பதிகம், பா. 6.
14. திருவாசகம், பா.
15. மே. ப., பா.
16. ஒன்பதாந் திருமுறை, திருவிசைப்பா, பா.
17. பதினொராந்திருமுறை; கைலைபாதி காளத்திபாதி யந்தாதி, பா.
18. மே. ப., திருக்கண்ணப்பதேவர் திருமறம், அடிகள் 1-157.
19. மே. ப.
20. மே. ப., கல்லாடதேவ நாயனார்.
21. மே. ப., சிவபெருமான் திருவந்தாதி, பா. 28.
22. மே. ப., கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம், பா. 20.

23. மே. ப., பா. 40
24. மே. ப., திருத்தொண்டர் திருவந்தாதி, பா. 11.
25. திருத்தொண்டர் புராணம், பா. 1013.
26. மே. ப., பா. 1017.
27. மே. ப., பா. 1021.
28. மே. ப., பா. 346.
29. மே. ப., பா. 197.
30. சித்தர் பாடல்கள், பட்டினத்தார் பாடல்கள், பா.
31. பார்க்க : அடிக்குறிப்பு 3.
32. கண்ணப்ப நாயனுர் புராணம், பா. 650.
33. காளத்தி மகாத்மியம், பா. 3.
34. கண்ணப்ப நாயனுர் புராணம், பா. 651.
35. காளத்தி மகாத்மியம், பா. 2.
36. கண்ணப்ப நாயனுர் சரிதச் சுருக்கம், பா. 64.
37. கண்ணப்ப நாயனுர் புராணம், பா. 656.
38. மே. ப., பா. 657
39. காளத்தி மகாத்மியம், பா. 8.
40. மே. ப., பா. 6.
41. கண்ணப்ப நாயனுர் புராணம், பா. 659.
42. மே. ப., பா. 660.
43. மே. ப., பா. 663.
44. காளத்தி மகாத்மியம், பா. 21.
45. மே. ப., பா. 22-24.
46. மே. ப., பா. 22.
47. மே. ப., பா. 27.
48. கண்ணப்ப நாயனுர் புராணம், பா. 676.
49. காளத்தி மகாத்மியம், பா. 33.
50. கண்ணப்ப நாயனுர் புராணம், பா. 680.
51. மே. ப., பா. 691.
52. காளத்தி மகாத்மியம், பா. 35.
53. கண்ணப்பநாயனுர் புராணம், பா. 694.
54. மே. ப., பா. 676.

55 மே. ப., பா. 709.
56. மே. ப., பா. 706—712.
57. மே. ப., பா. 716
58. காளத்தி மகாத்மியம், பா. 41.
59. மே. ப., பா. 45.
60. மே. ப., பா. 48.
61. மே. ப., பா. 49.
62. கண்ணப்ப நாயனூர் புராணம், பா. 738.
63. மே. ப., பா. 740.
64. மே. ப., பா. 743.
65. மே. ப., பா. 745.
66. மே. ப., பா. 748.
67. மே. ப., பா. 751.
68. மே. ப., பா. 752.
69. மே. ப., பா. 754.
70. காளத்தி மகாத்மியம், பா. 55.
71. மே. ப., பா. 56.
72. மே. ப., பா. 61.
73. மே. ப., பா. 69.
74. மே. ப., பா. 42.
75. மே. ப., பா. 72.
76. கண்ணப்ப நாயனூர் புராணம், பா. 755.
77. மே. ப., பா. 758.
78. மே. ப., பா. 774.
79. மே. ப., பா. 776.
80. காளத்தி மகாத்மியம், பா. 85.
81. மே. ப., பா. 87.
82. மே. ப., பா. 91.
83. மே. ப., பா. 92.
84. பார்க்க ; அடிக்குறிப்பு 79.
85. காளத்தி மகாத்மியம், பா. 93.
86. கண்ணப்பநாயனூர் புராணம், பா. 784-789.
87. காளத்தி மகாத்மியம், பா. 94.

88. மே. ப., பா. 95.
89. மே. ப., பா. 96.
90. மே. ப., பா. 97.
91. மே. பா., பா. 98.
92. காளத்தி மகாத்மியம், பா. 99.
93. மே. ப., பா. 100
94. மே. ப., பா. 101.
95. கண்ணப்ப நாயனார் புராணம், பா. 806.
96. காளத்தி மகாத்மியம், பா. 104
97. கண்ணப்ப நாயனார் புராணம், பா. 812.
98. மே. ப., பா. 821.
99. மே. ப., பா. 823.
100. மே. ப., பா. 826.
101. மே. ப., பா. 827.
102. மே. ப., பா. 829.
103. காளத்தி மகாத்மியம், பா. 106.
104. மே. ப., பா. 107.
105. மே. ப., பா. 110, 111.
106. மே. ப., பா. 112.
107. மே. ப., பா. 113.
108. மே. ப., பா. 114.
109. மே. ப., பா. 119.
110. மே. ப., பா. 120.
111. மே. ப,, பா. 121.
112. மே. ப., பா. 122.
113. மே. ப., பா. 123.
114. மே. ப., பா. 124.
115. மே. ப., பா. 125.
116. மே. ப., பா. 126.

இயல் : 6

# தமிழ், தெலுங்கு இலக்கிய நயம்

தமிழிலும் தெலுங்கிலும் அமைந்துள்ள கண்ணப்பர் வரலாறுகள் சிறந்த இலக்கிய நயம் கொண்டவையாய் இயங்கிக் கற்போர்க்குப் பக்திச் சுவையுடன் இலக்கிய நயத்தையும் சுவையையும் தரவல்லதாய்த் திகழ்கின்றன. சிறந்த இலக்கியத் தன்மைகளைக் கீழ்க்காணும் தலைப்புகளில் இவண் ஆராயப்பெறுகின்றன.

1. காவிய நலம்
2. நூல் நயம்

அ. கற்பனை

ஆ. அணிகள்

இ. வர்ணனை

ஈ. உணர்ச்சி

## 1. காவிய நலம் :

தமிழ் : சேக்கிழார் பெருமான் தம் திருத்தொண்டர் புராணத்தைப் பழஞ்சிவ அடியார்களின் வரலாறுரைக்கும் புராணமாகப் பாடினும் காவிய அமைப்பும் ஒருங்கு அமையுமாறு அதை ஆக்கியுள்ளார். தண்டியலங்காரம் பகரும் காவியப் பண்புகள் யாவும் பொருந்த இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இது அவரின் சிறந்த புலமைக்கோர் சான்றாகும்.

புராண நலனும் காவியப் பண்புகளும் ஒருங்கமைந்த பெரியபுராணத்தில் சுந்தரருக்குத் தலைமைத் தன்மை

அளிக்கிருர். திருமுனைப்பாடி நாட்டில் தோன்றிய சுந்தரரின் வாழ்வை ஒட்டியே பிற நாயன்மார் வரலாறுகள் இயம்பப் பெறுகின்றன. இறுதியில் சுந்தரர் கயிலையில் இறைவனுடன் ஒன்றுதலுடன் நூல் முடிவடைகிறது. பெருங்காப்பிய இலக்கணங்கள் யாவும் பெற்ற பெரிய புராணத்துள் ஒரு சிறு பகுதியாகக் கண்ணப்பர் வரலாறு அமைந்துள்ளது. அதனுல் இதைத் தனிமைப்படுத்திக் காவியம் என்பதற்குரிய நால்வகை உறுதிப் பொருட்களாகிய அறம் பொருள் இன்பம் வீடு என்பன விரவிவரும் பாங்கைக் காண இயலாது. எனவே தமிழில் கண்ணப்பர் வரலாறு காவியம் என்பது பொருத்தமுடையது அன்று எனலாம். எனினும் வீடு பற்றிய கருத்துக்கள் கூறப்படுகின்றன. இரு சுடர்த் தோற்றமும் மறைவும் காணப்படுகின்றன.

வீடு என்பது உறுதிப் பொருளான இறைவனையடைவதாகும். திண்ணன் திருக்காளத்தி நாதரை அறிந்து அடைந்து மூல ஆணவமும் இருவினையும் முழுமையாக நீங்கப் பெற்றுக் கண்ணப்பிச் சிவனுல் ஆட்கொள்ளப் பெற்றுக் கண்ணப்பராய் முக்தி பெற்றது வீடு பற்றிக் கூறுவதாகும்.

இரு சுடர்த் தோற்றத்தைச் சேக்கிழார் கண்ணப்பர் புராணத்தில் அழகுறச் சுட்டிச் செல்கிருர்.

### கதிரவன் மறைவு :

சூரியன் மறையும் இயற்கையான நிகழ்வினைத் திண்ணனின் பக்தியைக் கண்டு மேற்றிசையில் தாழ்ந்தனன் என்று சுட்டுகிருர். குடுமித் தேவருக்கு இன்னமும் இனிய கறியமுதூட்ட வேண்டுமென்ற திண்ணனின் காதல் கண்டு பகலவன் தன் கரங்கள் கூப்பி மலையில் தாழ்ந்தான்.[1] காதல் கண்டு மறைந்தான் என்பதுதான் மறைந்து மீண்டும் தோன்றி அவர் விரும்பிய ஊன்பெறுதற்கு விலங்குகளைக் காட்டல் வேண்டும், அதனுல் திண்ணனின் அன்பைப் பெற

வேண்டும் என்று கருதியவன் போலத் தாழ்ந்தான் என்பதாகும். இதைத் தன் குறிப்பை ஆசிரியர் ஏற்றிக் கூறியதாகவும் கொள்ளலாம்.

## கதிரவன் தோற்றம் :

படர்ந்திருக்கும் இருளை நீக்கித் தன் முகத்தைக் காட்டித் தேரில் வருகின்ற சூரியன் அன்புருவமாகிய வில் ஏந்திய திண்ணனார் வேட்டையில் எய்கின்ற காட்டு விலங்குகளைக் கொல்வதற்கு வளைக்க, அவற்றை மறைக்கும் திரையை நீக்கிக் காட்டுதல் போலத் தன் கதிர்களைக் காட்டித் தோன்றுகிறது என்று கூறுகிறார். இதைப் பின்வரும் அடிகளால் அழகுறச் சுட்டுகிறார். "**மெய்காட்டின் மாவளைக்க விட்டகருந் திரையெடுத்துக் கைகாட்டு வாள் போலக் கதிர்காட்டி** யெழும் **போதில்.**" [2]

## தெலுங்கு :

தமிழில் எவ்வாறு கண்ணப்பர் வரலாறு தனித்தொரு காவியமாகத் திகழவில்லையோ அதுபோன்றே தெலுங்கிலும் தனிக் காவியமாக இயம்பப் பெறவில்லை. பெரிய புராணத்துள் ஒரு சிறு பகுதியாகக் கண்ணப்பர் வரலாறு உள்ளதுபோல் தெலுங்கிலும் காளத்தி மகாத்மியமு என்னும் நூலுள் ஒரு பகுதியாக விளங்குகிறது. பிரமாஸ்வாசமு, த்வியாஸ்வாசமு, த்ருதீயாஸ்வாசமு, சதுர்தரஸ்வாசமு என்ற நான்கு பகுதிகளுள் மூன்றாவதாயுள்ள த்ருதீயாஸ்வாசமு என்பதில் இவ்வரலாறு வருகிறது. இதன் கண் கண்ணப்பர் வரலாற்றுடன் நக்கீரன் கதையும் இடம் பெற்றுள்ளது. காளத்தி மகாத்மியம் எனும் நூலின் ஒரு பகுதியாக இது வருதலால் காவியத்தின் உறுதிப் பொருட்களாகிய அறம் பொருள் இன்பம் வீடு போன்றன காண இயலாது. எனினும் வீடுபற்றி வருகிறது.

வீடு முக்தி பெறுதலாகும். கண்ணப்பர் முக்தி பெற்றது வீட்டைக் குறிக்கிறது. காவியப் பண்பில் ஒன்றாகிய

வாழ்த்தும் வணக்கமும் இதன் கண் அமைந்துள்ளன.[3] சேக்கிழார் இயற்கையாக நிகழும் சூரியன் செயலைக் கதைத் தலைவன் செயலுடன் இயைத்துக் கூறியுள்ளதுபோல் தூர்சடி கூறவில்லை. அதனால் தூர்சடி எழுதிய கண்ணப்பர் வரலாற்றையும் ஒரு காவியம் எனலாகாது.

## 2. நூல் நயம் :

### அ. கற்பனை :

இலக்கியத்தில் கற்பனை இலக்கிய நயத்திற்கும் கற்போர் உணர்வதற்கும் இன்றியமையாத ஒன்றாக உள்ளது. இலக்கியமே வரன்முறைப்பட்ட கற்பனை எனலாம். ஓவியம், சிற்பம் போன்றன யாவும் கற்பனைகளே. கற்பனை ஒன்றாயினும் அது வெளிப்படும் வடிவங்கள் பலவாகும். அதனால் பெயரும் மாறுபடுகிறது. அது இலக்கியத்தில் இடம் பெறுங்கால் இலக்கியக் கற்பனையாகிறது. அக்கற்பனை மனித உள்ள உணர்வுக்கு ஒத்து இயற்கையை ஒட்டியதாய மையும் போதுதான் வாழ்க்கைக்குப் பயன்படுதலுடன் சிறப்பும் பெறுகிறது. இயற்கை இகந்த வாழ்வுடன் ஒவ்வாத கற்பனைகள் யாவும் படிக்கச் சுவையுடன் இருப்பினும் வாழ்க்கைக்குப் பயன் படுபவனவாக அமைவ தில்லை. அதனால் அது வெறுங் கற்பனை எனப் படுகிறது. இது சுவையற்றதும் கற்பனைக்கு முரணானதும் அல்லாமல் அதனின்று வேறுபட்டுச் சற்றுமிகைபடக் கூறுதலாகும். அத்தகு வேறுபாடும் மனக்கண் காணும் காட்சியால் ஏற்பட்டதன்று; மனம் உணரும் உணர்ச்சியின் தன்மையால் ஏற்பட்டதாகும்.[4] இயற்கையுடன் இயைந்த உள்ளம் விழைந்த கற்பனை படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என மூவகையாகு மென்பர். சேக்கிழார் தம் புராணத்தில் கற்பனைகள் பல பயன்படுத்தியுள்ளார். கண்ணப்பநாயனார் புராணத்திலும் இத்தகு கற்பனைகள் காணப்படுகின்றன.

**படைப்புக் கற்பனை :**

வெவ்வேறிடங்களில் வேறு வேறு வகையான நிகழ்ச்சிகளை ஒன்றுபடுத்தி முழுமையான ஒன்றாக ஆக்குவதே படைப்புக் கற்பனையாகும்.

சேக்கிழார் சமய தத்துவ அறிவு பெற்றவர். திண்ணன் கதையைக் கூறுங்கால் அதில் இடம் பெறும் நிகழ்ச்சிகளைத் தம் சமய தத்துவ அறிவுடன் ஒன்றுபடுத்திக் கற்பனை செய்து கூறுகிறார். உயிர்களைப் பிறப்பிறப்புக்களில் ஆழச் செய்யும் இருவினைகளாகிய வலையில் பட்டுத் தந்நிலை கலங்கிச் சுழல்பவரின் நன்னெறி செல்லும் மனத்தைத் தடை செய்கின்ற ஐம்பொறிகள் போல் (இதனுடன்) பலவாறு வலைகளை அறுத்துச் செல்லும் விலங்குகளை நாய்கள் செல்லாவாறு தடுக்கின்றன என்று கற்பனை செய்கிறார். அப்பாடல் வருமாறு:

**"பலதுறைகளில் வெருவரலொரு பயில்வலையற நுழைமா**
**வலமொருபடர் வனதகைவுற வுறுசினவொடு சுவர்நாய்**
**நிலவியவிரு வினைவலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர்**
**புலனுறுமன னிடைதடைசெய்த பொறிகளினை வுளவே."** 5

**இயைபுக் கற்பனை :**

ஓரிடத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியை பிறிதோரிடத்தில் நிகழும் நிகழ்ச்சியையும் கண்டு அது போன்றதே இது என்று இரண்டையும் இயைபுபடுத்திக் கூறுவது இயைபுக் கற்பனையாகும்.

தமக்குதவும் தத்துவப்படிகள் பலவற்றையும் கடந்து (36 தத்துவங்களையும் கடந்து சிவத்தையடையும் சிவயோகிகளைச் சேக்கிழார் நன்கறிந்தவர். அவர் தம் அன்புப் பெருக்கையும் உணர்ந்தவர். தாம் கண்ணப்பரின் கதையைக் கூறுங்கால் திண்ணனார் நாணனுடனும் அன்புடனும் ஏறுவதாகக் கூறும் பாடல் வருமாறு :

''நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேறத் தாமும்
பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பானநெறி
யாணையாஞ் சிவத்தைச் சார வணைபவர் போல வையர்
நீணிலை மலையை நேர்படச் செல்லும் போதில்''[6]

இங்கு இரண்டையும் இயையுபடுத்தி அது போன்றதே இதுவும் என்று கூறுகிறார். யோகிகள் தத்துவங்கள் என்கின்ற படிகளை ஒவ்வொன்றாகக் கடந்து சிவனை அடைவது போன்று திண்ணனார் நாணனும் குடுமித் தேவர் பால் கொண்ட அன்பும் முன்னே செல்ல மலைப்படிகளை ஏறிச் சென்றார் என்று கற்பனை செய்கிறார்.

மேலும் அன்பு பொழிவார் போலத் திண்ணன் தன் வாயில் உள்ள மஞ்சன நீரைச் சிவன்மேல் விட்டான் என்று கற்பனை செய்கிறார். ''வாயின்மஞ் சனநீர் தன்னை வனைத்தவன் புமிழ்வார் போலளிமலனார் முடிமேல் விட்டார்.[7]

எரிக்கடவுள் தேவர்க்கிடும் உணவைக் கொண்டு செல்கிறார் என்பதைப் போன்றே திண்ணனார் திருக்காளத்தி நாதனுக்கு ஆகின்ற தன்மையைத்தானே சோதிப்பதற் காகத் திண்ணனார், வாயில் ஊனுகிய திருவமுதினையை வைத்தார் என்று சேக்கிழார் கற்பனை செய்கிறார். அப்பாடல் வருமாறு :

''எண்ணிறந்த கடவுளருக் கிடுமுணவு கொண்டூட்டும்
வண்ண வெரி வாயின்கண் வைத்ததெனக் காளத்தி
யண்ணலார்க் காம்பரிசு தாஞ்சோதித் தமைப் பதற்குத்
திண்ணனார் திருவாயி லமைத்தாருன் றிருவமுது.[8]''

## கருத்து விளக்கக் கற்பனை :

புலவன் ஏதேனும் ஓர் உண்மையைப் பிறி தொன்றினுக்கு அப்பிறிதொன்று அவ்வுண்மையைக் காட்ட வில்லையாயினும் அது காட்டுதல் போல் கற்பனை செய்து

கூறுவது கருத்து விளக்கக் கற்பனையாகும் இக்கற்பனையை கண்ணப்பநாயனார் புராணத்தில் பயின்றுவரவில்லை. வெறுங் கற்பனையும் பயின்று வரவில்லை.

## ஆ. அணிகள்

கண்ணப்ப நாயனார் புராணத்தில் அணிகள் மிக்குப் பயின்று வருகின்றன. அவை இங்கு நோக்கப் பெறுகின்றன.

### தன்மையணி :

"எவ்வகைப் பொருளு மெய்வகை விளக்கும்
சொன்முறை தொடுப்பது தன்மையாகும்" [9]

என்பது தண்டி. அரிய தவங்கள் செய்தும் மலைகளையும் காடுகளையும் சேர்ந்தும் முனிவரும் தேவரும் காணுதற்கரிய ராகிய சிவனை அம்பினால் கண்டு இருள் நீங்கும்படி கண்ணப்பர் நின்றார் [10] என்கிறார் சேக்கிழார். இங்கு முனிவர்களின் தன்மையைக் கூறுவதால் தன்மையணி ஆயிற்று. திண்ணன் மலையை நோக்கிச் செல்வதையும் இதன் கண் அடக்கலாம். [11]

### உவமையணி :

"பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்த்
தொப்புமை தோன்றச் செப்புதுவமை" [12]

என்பது தண்டி.

"கவர்நாய்...புகனுறுமன விடைதடை செய்த பொறி களினை வுளவே" [13] என்பது புராணம் கட்டிய வலைகள் அறுமாறு வெளிச்செல்ல முயன்ற விலங்குகளைக் கோபத்துடன் பிடிக்கின்ற நாய்கள் பிறப்பிறப்புகட்கும் காரணமாகிய இருவினை வலையில் பட்டுத் தந்நிலை தாழ மனம் நன்னெறி செல்லாது இடையில் தடுக்கும் ஐம்பொறிகளைப்போல்

உள்ளன என்பதாகும். நாய்கள் விலங்குகளை வெளிவிடாத தன்மை மனத்தை ஐம்பொறிகள் நன்னெறியில் செல்லா வாறு தடுத்ததற்கு உவமையாக அமைந்துள்ளது. 'அளவு' உவம உருபாகும்.

திண்ணனார் குடுமித்தேவருக்குத் தாம் முன்பெற்ற ஊனமுதை அளித்து மீண்டும் அமுதை அளிக்க வேண்டு மென்ற காதலினால் செல்வார். ஆயின் மீண்டு வருவார்; காதலால் தழுவிக் கொள்வார். கன்றினை விட்டுப் போகும் ஈறணிய பசுவினைப் போல் இருப்பார். என்று சேக்கிழார் கூறுகிறார். அப்போதுதான் கன்றை ஈனிய பசு தன் கன்றை விட்டுப்போக மனமின்றிச் சென்று சென்று மீள்தல்போல் திண்ணனாரும் சிவன்பால் கொண்ட ஆருக் காதலினால் அவரைப் பிரிய மனமில்லாதவராகி, "கன்றகல் புனிற்குப் போல்வர்" [14] என்று கூறுகிறார். இங்கு இறைவனைக் கன்றாகவும் திண்ணனாரை 'ஊட்டுவித்துக் காக்கும் தாயா கவும் கொள்ளலாம்.

இதுபோன்ற உவமை நயங்கள் பல இப்புராணத்தில் காணப்படுகின்றன. அவற்றுட் சில வருமாறு: "**வங்கினைப் பற்றிப் போதா வல்லுடும் பென்ன**" [15] "**வளைத்தவன் புமிழ்வார் போல**", [16] "**எரிவாயின் வைத்ததென,**" [17] "**வேதகத்திரும்பு பொன்னானாற்போல்,**" [18] "**உன்மத்தர்போல்**". [19]

**உருவக அணி :**

> "**உவமையும் பொருளும் வேற்றுமையொழிவித்**
> **தொன்றென மாட்டினஃ துருவக மாகும்**" [20]

என்பது தண்டி.

உவமானமும் உவமேயமும் வேறுபாடின்றித் தோன்று வது உருவகம். யானையின் பெரிய கொம்புகளில் விளையும் முத்துக்கள் மூங்கிலில் விளையும் முத்துக்கள் மலையில் விளையும் ஏனைய மணிகள் எனும் இவற்றின் ஒலிகள் வேடர்கள்

மகிழ்ச்சியால் பொழியும் மணிமழையுடன் வண்டுகள் எழுந்து பறக்க விண்ணில் மலர்மழை பொழிந்தது. சிறிய உடுக்கைகளன்றி தேவர் துந்துபிகளும் எங்கும் ஆர்த்தன. 21 வேடர் ஒலிகள் காட்டில் எழும் மணிகளின் ஒலிகளுடன் ஒத்திருந்தன என்பதாகும்.

திண்ணன் முதன் முதலாக வேலைப் பிடித்த தன்மையைக் கீழ்க்கண்டவாறு உருவகம் செய்கிறார். உச்சிப்போதில் இசைக் கருவிகள் இயங்க ஒளிவீசும் கரிய போர்வல்ல ஏறுபோன்ற திண்ணனாரைப் போர்புரிய வல்லதாகிய வில்லைப் பிடிப்பித்தார்கள். 22

திண்ணன் விற்றொழிற் பயிற்சி முடித்ததை நாளும் விற்றொழில் பயின்ற முற்றுப் பெற்றார் வானவர் குலத்தில் அரியராய் அவதரித்த சிங்க ஏறு போன்ற திண்ணனார். 23

நாகன் தன் மக்களை, "சிலைக் கீழ்த்தங்கி" 24 என்பது போல் அன்புடன் ஆட்சி செய்தான் என்கிறார். வேடர் தலைவன் ஆட்சி புரிந்த சிறப்பினது அவன் கையிலேந்திய வில்லாதலின் அச்சிலையின் கீழ் அவன் குடிகள் தங்கினர் என்பதாம்.

வேடர் இட்ட வலைகள் இருவினைகள் எவ்வாறு உயிர்களை உய்யவொண்ணாது செய்கிறதோ அவ்வாறு வலைகள் மிருகங்களை வெளிச் செல்லாவாறு தடுத்தன 25 என்று கூறுகிறார் சேக்கிழார்.

மலையில் தவழும் மேகங்களைப் போன்ற நீலநிறம் போன்ற கண்டத்தையுடைய காளத்திநாதன் என்பதை, "**மைதழையும் கண்டத்து மலைமருந்து**" 26 என்று இயம்புகிறார்.

## தற்குறிப் பேற்றவணி

"பெயர் பொரு ளல்பொரு ளெனவிரு பொருளினும்
இயல்பின் விளைதிற னன்றி யயலொன்று
தான்குறித் தேற்றுதல் தற்குறிப் பேற்றம்" [27]

என்பது தண்டி.

கீழிருந்து உயரக் கிளம்பி விழும் மானினை மேலிருந்து விழும் மானாகவும் மானைக் குறிவைத்து இடைவிடாது தொடர்ந்து எய்யப்படும் அம்பு வரிசையைப் பாம்பாகவும் கூறியது தற்குறிப்பேற்றமாகும். [28]

## ஆர்வமொழியணி :

"ஆர்வ மொழி மிகுப்ப தார்வ மொழியே" [29] என்பது தண்டி. திண்ணன் குடுமித் தேவரை ஆர்வம் பொங்கக் கண்டுத் தம் இருள் நீங்குமாறு செய்தார் என்பது ஆர்வ மொழியணியாகும். இதைக் கீழ்க்காணும் பாடலில் சேக்கிழார் சுட்டுகிறார்.

"சார்வருந் தவங்கள் செய்து முனிவரு மமரர்தாமுங்
கார்வரை யடவி சேர்ந்துங் காணுதற் கரியார் தம்மை
யார்வமுன் பெருக வாரா வன்பினிற் கண்டு கொண்டே
கேர்பெற நோக்கி நின்றார் நீளிரு ணீங்க நின்றார்." [30]

திண்ணனைக் குடுமித்தேவரிடமிருந்து அழைத்துச் செல்ல வந்த அவர் பெற்றோர் கருத்தை அறியாது தன் கருத்திலேயே ஆர்வமாக இருந்தார் என்று சேக்கிழார் கூறுகிறார். திருக்காளத்தி நாதரின் அருள் எய்தியதனால் இன்பம் உறும் பரிசன வேதியினால் இரும்பு பொன்னாதல் போல் யாக்கையின் தன்மையும் வினைகளிரண்டும் சாரும் மலம் மூன்றும் அறுபடுவதால் முன்னைப் பசுபோதத் தன்மை மாறிச் சிவபோதவடிவமாய திண்ணனார் தம் கருத்திலேயே ஆர்வமுடனிருந்தார். [31].

திண்ணன் ஆர்வத்துடன் திருக்காளத்தி மலையை நோக்கிச் சென்றதை ஆர்வமொழியணி அமைந்ததாகச் சேக்கிழார் பாடுகிறார்.

**"முன்பு செய் தவத்தி னீட்ட முடிவிலா வின்ப மான**
**வன்பினை யெடுத்துக் காட்ட வளவிலா வார்வம் பொங்கி**
**மன்பெருங் காதல்கூர வள்ளலார் மலையை நோக்கி**
**யென்புநெக் குருதி யுள்ளத் தெழுபெரு**
**வேட்கை யோடும்"** 32

என்பது அப்பாடல்.

**தெலுங்கு :**

தெலுங்கிலும் அணிகள் உள்ளன. ஆயின் அவற்றைச் சரியாகப் பொருத்திக் கண்ணப்பநாயனர் புராணத்தில் அறிய இயலவில்லை. தெலுங்கில் அணிகட்கு 'அலங்காரமு' என்று கூறுவர். தூர்சடி உவமையணிகளைக் கையாண்டுள்ளார். அவை இங்கு விளக்கப்படுகின்றன.

பெண்களின் கூந்தல் தோகை போல் இருந்ததாம். இதை "நெமலிபிஞ்சம்பு ஜுட்டி" 33 என்று கூறுகிறார்.

கண்கள் அல்லி மலரைப் போன்று உள்ளன என்பதை, **"நேத்ரநீலோத் பலம்புல நீல கருநியர்சநமு சேய"** 34 என்ற வாறு சுட்டுகிறார்.

குழந்தை பிறந்ததும் தொப்புள் அறுப்பது வழக்கம். திண்ணன் பிறந்ததும் தொப்புளை அறுத்தனர். அது சம்சார ஆசையை அறுப்பதுபோல் உள்ளதென்பதை, **"சம்சார மோஹபாசமு நடுவால, பொட்டு, கோசிரி மிக்க பிட்டநிகிநி"** 35 என்று பகர்வர்.

அக்குழந்தையை நீராட்டுவது பாவங்கள் அழிய வேண்டும் என்பதைக் காட்டுகிறது. இதை,

"பாபகதம் பஜம்பாலம்பு கடிகெடு
பகதி நீள்ளார்சிரி பாபநிகிநி" [36]

என்று விளம்புவர்.

இறைவன்பால் மனத்தை நிறுத்திய பக்தன் யோக நித்திரையில் இருத்தல்போல் திண்ணனாகிய குழந்தையும் சிறிது நேரம் கண் திறவாமல் இருந்தது. [37]

இவ்வுலகம் எவ்வாறுளதோ எனக்காண அக்குழந்தை கண்களைத் திறந்தது. [38]

உலகப் பற்றை உதறித் தள்ளுதல்போல் அடி எடுத்து வைத்துத் தளர்நடை நடந்தது.

புதியதாகத் திருமணம் செய்து கொண்டவர்கள் வண்டு பூவில் மகரந்தம் உண்டு களித்தல்போல் தம் இளம் மனைவி யுடன் கூடி மகிழ்ந்திருந்தனர் என்பதை, "...பிம்கமு ஜாப பாநமுல பெக்குவ ஜொக்கிரி பில்லதம்பதுல்" [40] என்று இயம்புகிறார்.

## இ. வர்ணனை :

சேக்கிழார் கண்ணப்பநாயனர் புராணத்தில் பல இடங் களில் வர்ணனைகள் கூறியுள்ளார். தேவையான இடங்களில் மட்டிலும் இதைக் கையாண்டுள்ளார்.

### நாட்டு வர்ணனை :

திண்ணன் பிறந்த பொத்தப்பி நாடு புலவர்களால் புகழப்பெறும் நல்ல வளங்களும் பூக்கள் நிறைந்த வாவி களும், சோலைகளும் நிறைந்தது என வர்ணனை செய்கிறார். [41]

### நகர வர்ணனை :

திண்ணன் பிறந்த உடுப்பூர். முத்துக்கள் வரும் அருவி கள் ஓடும் சாரல்களையும் யானைக் கொம்புகளாலாய

மதிலரணாற் சூழப்பெற்று விளங்குவதாகும். 42 மேலும் இவ்வூர் விளாமரங்கள் நிறைந்ததாயும் அதில் வலைகள் தொங்குவதாயும் அருகில் காட்டுப்பன்றி, புலி, கரடி, கடமை, மானினங்கள் விளங்குவதாயும் உள்ளது. 43

சிறுவர்கள் புலிக்குட்டி, யானைக்கன்று, பெண்மான் இவற்றுடன் விளையாடுகின்றனர். 44 இசைக் கருவிகளின் ஓசையினும் மிக்கு ஓசை செய்து ஓடும் அருவிகள் ஆங்குள்ளன. 45

திண்ணன் அரசுரிமை ஏற்றுக் கன்னி வேட்டைக்குச் செல்லுமுன் தன்னை அழகுறப் போர்க்கோலம் செய்து கொள்கிறார். அதைச் சேக்கிழார் பின் கண்டவாறு வர்ணிக்கிறார்.

தலைமயிரைச் சுருளில்லாது மேலே தூக்கிக் கட்டி அதில் கண்ணி சார்த்தி, அதனிடையில் மயிற்பீலி சேர்த்தி முல்லை மாலையுடன் குறிஞ்சி வெட்டுப் பூக்களையும் சூட்டிக் கொண்டார். 46

முன்னெற்றிமேல் மயிலிறகின் அடியில் இடையிடையே மணிகளை உடன் வைத்து மயிரைப் பொருந்தும்படி சார்த்தி வெள்ளிய தோட்டைக் காதில் பொருத்தினர். 47

கழுத்தில் பலகறைகளுடைய வெள்ளையாகிய மாலையும் பல்வகை மணிகள் கோத்து பன்றிக் கொம்புகள் துண்டப் பிறை போல்வனவாறு வைத்து வேங்கையின் வலிய தோலிற் பதித்துத் தட்டையாகச் செய்த சன்னவீரம் என்ற வெற்றி மாலையும் அணிந்தனர். 48

மார்பில் யானைத்தந்தத்தாலாகிய சிறுமணிகளின் மாலையும், தோளில் வாகு வளையங்களும் முன் கையில் கைக்கோதையும் கட்டினர். 49

இடையில் மயிற்பீலி யமைந்த புலித்தோலாடையின் மேல் பலகறைகளைக் கோத்து விளாம்பாகக் கட்டியும்,

உடைதோலும் துவரேற்றிய வாரையும் சேரக்கட்டும் விசியைப் பூட்டி அமைத்திருந்தனர்.[50]

காலில் வீரக்கழலும் பாதங்களில் நீண்ட செருப்பும் அணிந்தனர்.[51] இத்தகு வேட்டைக் கோலம் பூண்டு தம் கையினுல் தடவி வில்லில் நாணெலி செய்தார்.[52]

## தெலுங்கு.

தூர்சடியின் காளத்தி மகாத்மியத்தில் ஒரு பகுதியாக இலங்கும் கண்ணப்ப நாயனூர் புராணத்திலும் வர்ணனைகள் இடம் பெற்றுள்ளது.

தெலுங்கில் உள்ள காளத்தி மகாத்மியம் ஒரு பிரபந்த மாக விளங்குகிறது. பிரபந்தத்தில் இருபத்திரண்டு வர்ணனைகள் இருக்கவேண்டுமென்று அப்பகவி என்ற தெலுங்குப் புலவர் கூறுகிருர்.[53] யாவற்றிற்கும் விதிவிலக்கு இருத்தல் போல் தூர்சடி தன் பிரபந்தத்தில் பதினேழு வர்ணனைகளைக் கூறுகிருர். ஒரே பொருளை இரண்டு அல்லது மூன்று முறையும் வர்ணித்துள்ளார். இவரின் பெண்களின் உடல் வர்ணனை இதற்குக் காட்டாகச் சுட்டலாம்.

தூர்சடி கீழ்க்காணும் வர்ணனைகளைத் தம் நூலில் கையாண்டுள்ளார்.

1. புறவர்ணனமு
2. ருது வர்ணனமு
3. ப்ரயாணமு
4. ஷைலமு
5. வேட
6. சாசசமு
7. ருஷ்யாசிரமமு
8. ரணமு
9. விஜயமு
10. மத்யபாநமத்த சேஷ்டலு (மது உண்டவர் செயல்)

11. வரவிஷாரமு
12. கந்யாக ஸௌம்தாதநமு
13. சந்த்ரோதயமு
14. சூர்யோதயமு
15. சுரதமு
16. தௌ விற்ருதமு (கருப்பம் தரித்தல்)
17. நனமு (மக்களைப் பெற்றல்)

பிற ஐந்தும் வருமாறு :

18. மம்தரமு
19. த்யதமு
20. விப்ரலம்பறமு
21. பரிணயமு
22. ரூபசித்ரமுலு

தூர்சடியின் காளத்தி மகாத்மியத்தின் ஒரு பகுதியாக உள்ள கண்ணப்பர் வரலாற்றில் நான்கு வர்ணனைகள் காணப் படுகின்றன. அவையாவன :

1. வேட (வேட்டையாடுதல்)
2. மத்யபாநமத்த சேஷ்ட்லு (மது உண்டவர் செயல்)
3. தௌவிற்ருதமு (கருப்பம் தரித்தல்)
4. சுதஜநனமு (மக்களைப் பெறுதல்)

## 1. வேட (வேட்டையாடுதல்) :

காட்ரேணி தேவதைக்குப் பூசை முடித்த பின்னர் மறுநாள் வேடர்களுடன் திண்ணன் வேட்டைக்குச் சென்றார். தம்முடன் பல பொருட்களையும் எடுத்துச் சென்றதாகத் தூர்சடி கூறுகிறார். தெநசீரட்டலு, ப்ரோகுசுட்டலு, தொட்டிவல, லேடிவல (மான்வலி) சுபதம்டவல மகரிவல (மீன்வலை), யெலிகலவல (எலிவலை) முதலிய வலைகளையும்; சிவ்வங்துலு, குக்கலு (நாய்கள்), க்ருஷ்ணகுரஸ்கம்புலு, முங்கீசுலு (கீரிகள்), நெத்தலு முதலான மிருகங்களையும் நோரணம்புலு, செலகட்டுடலு, சாறுவம்புலு, கித்துலு,

வேசடம்புலு மற்றும் வேட்டைக்குத் தேவையான விஹம் கம்புலு, பூரேடு, காருகோடி. கேரஜம்பு, நுருலு, நரிகோலு, போலுலு, கிக்கம்புலு, ஜிக்ருகம்டலு, தீசுத்ராள்ளு, நொடித்ராள்ளு, தலமுள்ளு முதலியவற்றுடன் வேட்டைக்குச் சென்றனர்.54

வேட்டைக்குச் சென்ற திண்ணன் பல விலங்குகளையும் பறவைகளையும் வேட்டையாடினார். 55 புலுலு (புலிகள்), குரங்கமுலு (குரங்குகள்), கரடிபோதமுல், ஏதுலு, மந்நுபில்லுலு, துப்புலு, கனதுலு, கிடுலு(பன்றி) செவுல போதுலு, கொர்னகம்ட்லு, பல்லூகம்புலு, சமரிம்ரு கம்புலு, எநுபோதுலு, கஸ்தூரி பில்லுலு முதலிய மிருகங்களையும் பலவகையான பறவைகளையும் திண்ணன் வேட்டையாடித் தன் தந்தைக்குக் காணிக்கையாக அனுப்பினார். 56

கொழுத்த மிருகங்களை நன்ருகச் சுட்டு இறைச்சியைக் கொணர்ந்து தூய்மையான கல்லில் வைத்தனர். அவ்விறைச்சியில் தேன் கலந்து திண்ணனுக்கு ஊட்டினர். 57

வேட்டை தொடங்குமுன் வேடர்கள் காட்ரேணி தேவதைக்குப் பூசை செய்வர். காட்டில் விளையும் பல பொருட்களையும் கொண்டு பூசை செய்தனர். முதலில் திண்ணனுக்கு எவ்வெவ் மிருகங்களுக்கு எவ்வாறு வலைவிரிக்க வேண்டும் என்பதைக் கூறினர். முதலில் முன்னதாகப் பிறந்த (தலைச்சன்) ஆட்டினைக் கொணர்ந்து கண்முட்டைகளைக் குத்தி, தலையை நீரில் நனைத்து, வால் அறுத்துத் தூபமிட்டு மீசையைச் சுட்டுக் காட்ரேணி தேவதைக்குக் காணிக்கை ஆக்கினர். 58

நாதநாதனும் தந்தெயும் நீராடி அலங்காரம் செய்து கொண்டனர். திண்ணன் நீராடி திருநீறு இட்டு, இரட்சாபந்தனம் என்னும் கொடியைக்கட்டி, தலையில் கருப்புக் கொடியைக் கட்டி, வில்லில் அம்பை ஏற்றி காட்ரேணி தேவதை கோயிலுக்குத் தந்தை மனம்

மகிழுமாறு திண்ணன் சென்றார். 59 ஆயுதங்களைக் கோயிலில் வைத்து சிவப்புப் பூமாலைகள், நிவ்வரி தானியம் (மூங்கில் அரிசி), சிவப்புச் சந்தனம், சாம்பிராணி புகை, தீபங்கள் முதலியவற்றை வைத்துத் தாய் தந்தையுடன் பூசை செய்து வேடர்களுடன் கலந்து உணவுண்டார். 60

## 2. மத்யபாநமத்த சேஷ்டலு (மது உண்டவர் செயல்) :

"மாடலாட தலம்சி மறசிபோயெடு வாரு.
நடவு போவுக தொட்கு—படெடுவாரு
தூ ரகும்டெதமநி யும்டநோ பநி வாரு
வேசெதமநி லேவலேநி வாரு
பநிலேநிபநி பட்டபயலு திட்டெடுவாரு
பாடநேரகயுநு பாடுவாரு
கெதுரைவாரிகி கெல்ள ம்கொக் கெடுவாரு
வீரீடாவி உற்றுனல யாடுவாறு" 61

என்று தூர்சடி மது உண்டவர் செயலைச் சித்தரித்துக் காட்டுகிறார். பேச நினைந்தும் மறந்தவர், நடக்க முயன்றும் விழுந்தவர், அமைதியாக இருக்க நினைந்தும் எழமுயன்றும் முடியாதவர் திட்டுகின்றவர், பாடல் கற்காமலேயே பாடுகின்றவர், ஆடுகின்றவர், மிக்குக் குடித்தும் மீண்டும் கைநீட்டுவோர், என்ற இவர்கள் மிக்குக் கள் குடித்துத் தடுமாறினர். பெண்கள் மிகுதியாகக் குடித்ததால் அவர் தம் சித்தம் தன் நாயகன்பால் சென்றது. பெண்க்ள் கணவன் பெயரால் காதலனையும் அழைத்துத் தழுவி மகிழ்ந்தனர். பெண்கள் அதிகமாகக் கள் குடித்ததால் நிலைதடுமாறினர். தன் கணவனைக் கோபித்து வேறு ஒருவனைக் கட்டிப் பிடித்து, பிடி இறுக்கிச் சரசமாடினார்கள். இதனை,

'புடி செடுகாநி லேதிபுடு புச்சக த்ராகிற மத்ய மித்தலோ
நொடலெறுகம் டடம்சு ஜொகயுக்மலி நாதுறி திட்டி
ஜடியடு சூடு மம்சு சரசம்புற மெச்சு தெறம்கு தோபற
ப்புடு பிகி கௌகிடம் கடிநம்ஜலு குப்பல நொத்தெ மக்குவங்'' 62

என்று பாடுகிறார்.

இவ்வாறு ஆண்களும் வேறு பெண்களுடன் கூடி இருவரும் தன் விருப்பத்திற்கு வந்தாய் இன்று என்று காமச் சொற்கள் ஆயிரம் கூறி அவர்களுடன் கூடினர். புதியதாகத் திருமணமான இளம் தம்பதிகளும் தம் இளம் மனைவியுடன் வண்டு பூவில் மகரந்தம் உண்டதுபோல் இருந்தனர். 63

## 3. தௌவிற்ருதமு (கருப்பம் தரித்தல்) :

கருப்பம் தரித்த பெண்ணின் உடல் பிரகாசம், கருப்பத்தில் உள்ள குழந்தை சிவன்போல் பிரகாசம் அடையக்கூடும் என்று எண்ணும்படி இருந்தது. 64 கர்ப்பிணி யின் பருத்த உடல் அவள் அழகைக் கெடுக்கக் கூடும் என்பது போல் அவளின் முலைகளும் இடையும் அழகை இழந்தன. 65 கர்ப்பிணியாகிய தந்தெக்குக் குகைகளில் சென்று வேட்டையாட வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. புலி, சிங்கம், பன்றி, மான் முதலியவற்றைக் கொல்ல வேண்டும் என்ற எண்ணமும் தோன்றியது. மலைப் பள்ளங் களிலும் குகை போன்ற இடங்களிலும் சிவனைக் காண வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. 66 சுவைமிக்க ஊனை இலையில் வைத்துச் சிவனைப் பூசிக்க வேண்டும் என்றும் எண்ணுகிறாள்.

''நேக்ர நீலோத்பலம்புல நீலகருநி
யர்சநமு சேய ஜிதம்திம்செ நம்பு ஜாக்ஷி'' 67

சந்திரனுக்கு மன மகிழ்ச்சி தரும் அல்லி மலர்களையொத்த தன் கண்களைப் பிடுங்கி வைத்துப் பூசிக்க வேண்டும் என்ற எண்ணமும் தோன்றியது.

**4. சுதஜநனமு (மக்களைப் பெறுதல்) :**

தந்தெக்கு மக்கட்பேறு வாய்க்கிறது. குழந்தை பிறக்கும் நேரம் நெருங்கியதும் மருத்துவச்சியை அழைத்தனர். தந்தெயை எழவிடவில்லை. நீராட்டி நன்கு கவனித்தனர். நல்ல நேரத்தில் சிவபக்தியுடைய குழந்தை பிறந்தது. இதைத் தூர்சடி, "**நிலுவகாங்குரே யதுஅ நேர்பருலை கடுசம்பர மிம்பகன்**" [68] என்று சுட்டுகிறுர்.

**உணர்ச்சி :**

**தமிழ் :** பாடல் சிறப்புடையதாக இலங்க வேண்டுமாயின் உணர்ச்சி அதில் அமைந்திருக்க வேண்டும். புலவன் எடுத்துக் கொண்ட தன்மைக்கேற்ப உணர்ச்சித் தன்மைகளும் மாறுபடும். கண்ணப்ப நாயனுர் புராணத்தில் போர் (வேட்டை) தொடர்பான உணர்ச்சியும் பக்தி தொடர்பான உணர்ச்சியும் என்ற இருவகை உணர்ச்சிகள் இடங்கொண்டுள்ளன. திண்ணனுக்கு வில்விழா எடுக்கும் நிலையிலும், [70] அவர் விற்பயிற்சி துவங்கி அதைக் கற்று முடியும் நிலையிலும் [71] போர் உணச்ச்சியைக் காணலாம். பின்னர் வேடர்கள் நாகனிடம் முறையிடும் நிலையிலும், பின் திண்ணன் கன்னி வேட்டைக்குச் செல்லும் நிலையிலும் திண்ணன் வன்மையாகப் போர் செய்ததையும், வேடர்கள் விலங்குகளைக் கொன்றதையும் [72] சேக்கிழார் போர் உணர்ச்சி ததும்பப் பாடியுள்ளார்.

இறுதியாக அமைந்தது பக்தி உணர்ச்சியாகும். திண்ணன் சேனுயர் காளத்தி மலையைக் கண்டதிலிருந்து முத்தி பெறும் வரையில் உள்ள பாடல்கள் பக்தி உணர்ச்சியின் பெற்றியினைக் கொண்டதாயுள்ளன. பக்தி நிலையில் கண்ணப்பனுக்கு இணையானோர் எவரும் இல்லை என்பதை அப்பாடல்கள் புலப்படுத்துகின்றன. அத்தகு பக்தி உணர்ச்சியை அவற்றில் பெய்துள்ளார் சேக்கிழார். இப்பக்தி உணர்ச்சியின் ஏற்றத்தைக் காட்ட ஒரு பாடலைச்

சான்று காட்டினாலே சாலும். சிவகோசரியார் திண்ணனின் ஆகமவழி நில்லாத பூசையை வெறுத்து இறைவனிடம் முறையிட்டு அதைத் தடுக்குமாறு வேண்டச் சிவனும் திண்ணனின் பக்தி பெருமையைக் காட்ட வேண்டி அவர் கனவில் தோன்றி நாளை மறைந்திருந்து பார்க்குமாறும் கூறித் திண்ணனின் பக்தியின் மேன்மையைப் பின்வருமாறு கூறுகிறார்.

> **"அவனுடைய வடிவெல்லா நம்பக்க லன் பென்று**
> **மவனுடைய வறிவெல்லா நமையறிவு மறி வென்று**
> **மவனுடைய செயலெல்லா நமக்கினிய வா மென்று**
> **மவனுடைய நிலையிவ்வா றறி நீ யென்றருள்**
> **செய்வார்** [78]

வடிவம், அறிவு, செயல் எனும் மூன்றும் சிவன் பக்கமாய திண்ணனின் பக்தியை அவ்வுணர்ச்சியுடன் காட்டுகிறார் சேக்கிழார்.

## தெலுங்கு :

தூர்சடியும் உணர்ச்சியைக் கையாண்டுள்ளார். இவரும் போர் உணர்ச்சியையும் பக்தியுணர்ச்சியையும் பாடியுள்ளார். இங்கு போர் உணர்ச்சி என்பது வேட்டையாடுதலாகும். திண்ணனும் வேடர்களும் கலந்து காட்ரேணி தேவதைக்குப் பூசை செய்யும் நிலையிலும் பல விலங்குகளைக் கொன்று அவற்றின் ஊனை அனைவரும் கலந்து உண்ணும் நிலையிலும் வேடர்களின் போர் (வேட்டை) உணர்ச்சியைக் காண இயலுகிறது.

பக்தியுணர்ச்சியைத் தூர்சடி மிக அழகுறச் சித்தரிக்கிறார். திண்ணன் பிறந்ததிலிருந்து தளர்நடையிட்டு நடக்கும் வரையிலும் அக்குழந்தையின் ஒவ்வொரு செயலையும் பக்தியின் செயலுக்கு ஒப்புமைப்படுத்திக் காட்டுகிறார்.

ஒரு நல்ல வேளையில் பக்தியுள்ளம் கொண்ட குழந்தை பிறந்தது. உலக ஆசையை அறுப்பதுபோல் தொப்புள் அறுத்தனர். சிவபக்தியின் அடையாளமாகிய திருநீறு வைத்தனர். பாவங்கள் அழியவேண்டும் என்பதுபோல் அக்குழந்தையை நீராட்டினர். இறைவன்பால் மனம் செலுத்தும் பக்தன் யோகத்நித்திரையில் இருத்தல்போல அக்குழந்தையும் சிலமணி நேரம் கண்களைத் திறவாமல் இருந்தது.

பின் இவ்வுலகம் எவ்வாறுளதோ என்பதைப் பார்க்கலாம் என்பது போல் கண்களைத் திறந்தது. 75 பின் இவ்வுலகில் சிவபக்தியை எங்கும் காண இயலவில்லையே எனக்குறிக்கும் வண்ணம் வெகுளியாகச் சிரித்தது. இவ்வுலகப் பற்றிலிருந்து விடுபடுதல்போல் அடி எடுத்து வைத்து நடந்தது. உலகப் பொருட்கள் எதன் மீதும் நாட்டம் இல்லாததைப் போல் பஞ்சணையில் புரண்டது. பின் அரசன் போல் எழுந்து உட்கார்ந்தது. காணாமல் போன முகத்தைத் தேடுவதுபோல் இறை உண்மையை எங்கும் தேடிக் கைகளால் அளைத்தது. மன்மதன் சிவன்மேல் காமக்கணைவிட அஞ்சியது போன்று குழந்தை தப்படி எடுத்து வைத்து நடந்தது. இவ்வாறு தூர்சடி, குழந்தையின் ஒவ்வொரு செயலையும் இறைத் தன்மைகளுடன் ஒப்புமைப்படுத்திப் பாடியிருப்பது அவரின் ஆழ்ந்த சிவபக்தியையே குறிக்கிறது. இது பக்தி உணர்ச்சிக்கோர் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

திண்ணன் சிவனைக் கண்டு அளவற்ற அன்பால் தன்னுடன் தன் வீட்டிற்கு வருமாறு அழைத்தான். பல வகையான பொருட்களையும் பணி செய்ய அழகிய பெண்களையும் தருவதாகவும் கூறி வருமாறு அழைக்கும் பகுதிகளிலும் அவரின் பக்தியுணர்ச்சியைக் காணலாம். இறுதியில் தன் இறைவனுக்காகத் தன் கண்களை இழந்தது பக்தியுணர்ச்சியின் உயர்ந்த நிலையாகும்.

# அடிக்குறிப்புகள்

1. கண்ணப்ப நாயனூர் புராணம், பா. 775.
2. மே. ப., பா. 783.
3. காளத்தி மகாத்மியம், பா.
4.
5. கண்ணப்ப நாயனூர் புராணம், பா. 734.
6. மே. ப., பா. 752.
7. மே. ப., பா. 772.
8. மே. ப., பா. 796.
9. தண்டியலங்காரம், சூ. 5.
10. கண்ணப்பநாயனூர் புராணம், பா. 734.
11. மே. ப. பா. 751.
12. தண்டியலங்காரம், சூ. 12.
13. கண்ணப்பநாயனூர் புராணம், பா. 734.
14. மே. ப., பா. 761.
15. மே. ப., பா. 765.
16. மே. ப., பா. 772.
17. மே. ப., பா. 796.
18. மே. ப., பா.803.
19. மே. ப., பா. 823.
20. தண்டியலங்காரம், சூ.
21. கண்ணப்பநாயனூர் புராணம், பா. 663.
22. மே. ப., பா. 689.
23. மே. ப., பா. 690.
24. மே. ப., பா. 695.
25. மே. ப., பா. 734.
26. மே., ப. பா. 784.
27. தண்டியலங்காரம், சூ.
28. கண்ணப்பநாயனூர் புராணம், பா. 732.

29. தண்டியலங்காரம், சூ.
30. கண்ணப்பநாயனூர் புராணம், பா. 777.
31. மே. ப., பா. 803.
32. மே. ப., பா. 751.
33. காளத்தி மகாத்மியம், பா. 15.
34. மே. ப., பா. 24.
35. மே. ப., பா. 27.
36. மே. ப., பா. 27.
37. மே. ப., பா. 28.
38. மே. ப., பா. 29.
39. மே. ப., பா. 30.
40. மே. ப., பா. 45.
41. கண்ணப்ப நாயனூர் புராணம், பா. 650.
42. மே. ப., பா. 651.
43. மே. ப., பா. 652.
44. மே. ப., பா. 653.
45. மே. ப., பா. 654.
46. மே. ப., பா. 706.
47. மே. ப., பா. 707.
48. மே. ப., பா. 708.
49. மே. ப., பா. 709.
50. மே. ப., பா. 710.
51. மே. ப., பா. 711.
52. மே. ப., பா. 712.
53. காளத்தி மகாத்மியம், பா.
54. மே. ப., பா. 46.
55. மே. ப.. பா. 47.
56. மே. ப., பா. 48.
57. மே. ப., பா. 50.
58. மே. ப., பா. 49.
59. மே. ப.. பா. 38.
60. மே ப., பா. 39.
61. மே. ப., பா. 41.

62. மே. ப., பா. 43.
63. மே. ப , பா. 44—45.
64. மே. ப., பா. 22.
65. மே. ப., பா. 23.
66. மே. ப., பா, 24
67. மே. ப. பா.
68. மே. ப., பா. 26.
69. மே. ப., பா. 27.
70. கண்ணப்ப நாயனூர் புராணம், பா. 680—689
71. மே. ப., பா. 690—691.
72. மே. ப., பா. 718—740.
73. மே. ப., பா. 806.
74. காளத்தி மகாத்மியம், பா. 28.
75. மே. ப., பா. 29.
76. மே. ப., பா. 30

இயல் : 7

# தமிழ்-தெலுங்கு ஆய்வினால் பெறப்பெற்ற கொள்வன-கொடுப்பன : கதை, கருத்து,

தமிழ், தெலுங்கு மொழிகளில் உள்ள கண்ணப்பர் வரலாறுகளை ஒப்பு நோக்கியதால் சில உண்மைகள் புலப்படு கின்றன. அவற்றைக் கதை அமைப்பிலும், கருத்து நிலையிலும், இங்கு அணுகி உணர்வதே நோக்கமாக உள்ளது.

## கதை அமைப்பு :

தமிழ், தெலுங்கு இரண்டு மொழிகளிலும் கண்ணப்பர் வரலாறு கதையாகக் கூறப்படுகிறது. அதில் இரண்டிற்கும் ஒற்றுமை வேற்றுமைகள் காணப்படுகின்றன. சேக்கிழார் அனபாய சோழனின் வேண்டுகோட்கிணங்க நாயனார் வரலாறுகளைக் கூறினார். ஆனால் சிவபெருமானே யாதவ அரசனுக்குக் கண்ணப்பர் கதையைக் கூறுவதாகத் தூர்சடி எழுதியுள்ளார். சேக்கிழார் காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு. தூர்சடியின் காலம் கி. பி. பதினாறும் நூற்றாண்டு. புராணக் கதைகளைக் கேட்டதால்தாம் காளத்தி மகாத்மியம் எழுதியதாகத் தூர்சடி கூறுகிறார். சேக்கிழாரின் பெரிய புராணம் பற்றிய குறிப்பு ஏதும் அதில் இல்லை.

மேலும் தூர்சடி கதையைக் கூறுவதில் சேக்கிழார் கூறுதலினின்றும் மிகவும் மாறுபட்டுள்ளது. சேக்கிழாரின்

பெரிய புராணத்தைச் தூர்சடி அறிந்திருப்பின் அவ்வாறு எழுதியிருக்கமாட்டார். சேக்கிழாருக்குப் பக்தியே முக்கிய மானதாக இருந்தது. ஆனால் தூர்சடிக்குப் புராணம் என்பது முக்கியமானதாக இருந்தது. மேலும் கண்ணப்பர் வாழ்ந்த காலம் இரு ஆசிரியர்கட்கும் மிகவும் முந்தியதாகும். அதனால் அவர் வரலாறு பற்றிய கதை பல இடங்களிலும் வழங்கப்பட்டிருக்கலாம்.

கதை அமைப்பில் இரண்டிற்கும் பல வேற்றுமைகள் காணப்படுகின்றன. அவை பின்வருமாறு :

| தமிழ் | தெலுங்கு |
|---|---|
| 1. தாய் தத்தை | 1. தாய் தந்தெ |
| 2. தந்தை நாகநாதன் (நாகன்) | 2. தந்தை நாதநாதன் |
| 3. வேடர் குலம் விளங்க ஒரு மகன் இல்லையே யென முருகவேளுக்குப் பூசை செய்தான், நாகன் | 3. இத்தகு பூசை செய்தல் பற்றி இல்லை. |
| 4. தேவராட்டி ஒவ்வொரு நிகழ்ச்சியின் போதும் குறிப்புக் கூறுகிறாள். | 4. தேவராட்டி என்பது பற்றிய குறிப்பு இல்லை. |
| 5. காம உணர்வுக்கோ உடல் வர்ணனைகட்கோ இடம் இல்லை. | 5. காம உணர்வுக்கும், உடல் வர்ணனைக்கும் இடம் உண்டு. |
| 6. கரட்ரேணி தேவதைக் குப் பூசை செய்தல் இல்லை. | 6. காட்ரேணி தேவதைக் குப் பூசை செய்கின் றனர். |

| | தமிழ் | | தெலுங்கு |
|---|---|---|---|
| 7. | முருகன் அருளால் தத்தை கருவுற்றதாகக் கூறப்படுகிறது. | 7. | இயற்கையாகவே தந்தெ கருவுற்றதாகக் கூறப்படுகிறது. |
| 8. | கருத்தரித்த நிலையில் தத்தை பின் நிகழப் போகும் நிகழ்ச்சிகளைக் கனவுகாண்பதில்லை. | 8. | பின் நிகழப்போகும் நிகழ்ச்சிகளை எல்லாம் கனவு காண்கிறாள் தந்தெ |
| 9. | குழந்தை பற்றிய வர்ணனை இல்லை. | 9. | குழந்தை பிறந்த பின் அதன் ஒவ்வொரு செயலும் சிவனுடன் ஒப்பிட்டுக் காட்டப் பெறுகிறது. |
| 10. | குழந்தை திண்மையாக இருந்தமையின் திண்ணன் எனப் பெயரிட்டான் நாகன் | 10. | குழந்தையின் ஒவ்வொரு செயலிலும் சிவ அறிகுறி இருந்தமையின் நாத நாதன் அதற்குத் திண்ணன் எனப் பெயரிட்டான். |
| 11. | திண்ணனின் சிறுபருவ விளையாட்டுகள் எவையும் குறிக்கப் பெறவில்லை . | 11. | சிறுபருவ விளையாட்டுகள் பல விளக்கமாகக் குறிக்கப் பெறுகின்றன. |
| 12. | திண்ணன், விற்பயிற்சியைத் துவங்குவது ஏழு நாட்கள் நடைபெறும் விழாவாகக் கூறப்படுகிறது. | 12. | அத்தகு விழா குறிக்கப் படவில்லை. |
| 13. | வேடர்கள் காட்டு விலங்குகளால் ஏற்பட்ட துயரை நாகனிடம் கூறல். | 13. | இத்தகு குறிப்பு இல்லை |

| | தமிழ் | | தெலுங்கு |
|---|---|---|---|
| 14. | நாகன் திண்ணனை அழைத்து அரசுரிமை அளிக்கிறான். | 14. | அரசுரிமை அளிப்பது பற்றிய குறிப்பு இல்லை. |
| 15. | தேவராட்டியை அழைத்து காடு பலியூட்டுமாறு செய்வதாய் கூறப்படுகிறது. | 15. | இவ்வாறு இல்லை. |
| 16. | அரசுப் பட்டம் சூட்டுதல் விழாவாகக் குறிக்கப்படுகிறது. | 16. | பட்டம் சூட்டுதல் இல்லை. |
| 17. | காட்ரேணி தேவதைக்குப் பூசை செய்கின்றனர். | 17. | இங்கும் உள்ளது. |
| 18. | அவ்வாறு இல்லை. | 18. | காட்ரேணி பூசைக்குச் செல்லுமுன் நாத நாதன் தந்தை இருவரும் விரதம் காத்தனர். |
| 19. | அக்குறிப்பு இல்லை. | 19. | காட்ரேணி பூசையில் வேடர்கள் குடித்து முறை தவறிய காமப் புணர்ச்சியில் ஈடுபட்டனர். காமச்சுவை சுட்டப்பட்டுள்ளது. |
| 20. | பூசை முடிவுற்றதும் மனையில் வைகி மறுநாள் வேட்டைக்குச் செல்கிறான் திண்ணன் | 20. | அவ்வாறே உள்ளது. |

| தமிழ் | | தெலுங்கு | |
|---|---|---|---|
| 21. | திண்ணன் வேட்டையாடும் திறத்தை நன்கு விளக்குகிறது. | 21. | அவ்வாறு இல்லை. |
| 22. | அக்குறிப்பு இல்லை. | 22. | வேட்டையாடிய மிருகங்களைத் திண்ணன் பெற்றோருக்குக் காணிக்கையாக அனுப்புகிறான். |
| 23. | வேட்டையில் பன்றி ஒன்று தப்பிச் செல்கிறது. அதைத் தொடர்ந்து சென்று கொல்கிறான் திண்ணன். | 23. | வேட்டையாடிய களைப்பினால் திண்ணன் உறங்கக் கனவு காண்கிறான். கனவில் 'சிவலிங்கம் தெரிகிறது. மீண்டும் வேட்டையாடிய போது பன்றி தப்பிச் சென்று சிவலிங்கம் உள்ள இடத்தில் மறையச் சிவலிங்கத்தைக் காண்கிறான். திண்ணன். |
| 24. | பன்றியை வாளால் கொன்றபின் நாணன், காடன் இருவருடன் பொன் முகலியடைந்து பின் காளத்தி மலையேறிச் சிவலிங்கம் காண்கிறான். | 24. | நாணன், காடன் குறிப்பே இல்லை. |
| 25. | சிவலிங்கம் கண்டதும் தன்னை மறந்து அதற்குப் பணி செய்யத் துவங்கு | 25. | சிவலிங்கம் கண்டதும் பலவாறு கூறித் தன் ஊருக்கு வருமாறு |

| தமிழ் | | தெலுங்கு |
|---|---|---|
| | கிருன். இறுதியில் நாணனும் காடனும் திண்ணனை விட்டுச் சென்று பெற்ருேருடன் மீண்டனர். அவர்களும் பயனின்றித் தம்மூர் மீண்டனர். | அழைக்கவும் வாரா திருக்க அங்கேயே இருந்து விடுகிருர். திண்ணன். வேடர்கள் திண்ணனைத் தேடி அழைத்தனர். தன்ஞல் வர இயலாதெனக் கூறி விட வேடர்கள் மீள் கின்றனர். |
| 26. | சிவலிங்கம் கண்டதும் திண்ணன் பேசியதாகவே இல்லை. | 26. வேடர்களிடம் தன்ஞல் வர இயலாது என்று சிவலிங்கம் கண்டபின் கூறு கிருர். |
| 27. | உணவைச் சிவலிங்கத் திற்கு அளிக்கிருன். | 27. திண்ணன் சிவலிங்கத் திற்கு உணவளிக்கவும் உண்ணுமலிருக்கத் தன் உயிரை மாய்த்துக் கொள்வதாகக் கூறப் பின் சிவலிங்கம் உண்டது. |
| 28. | சிவலிங்கத்திற்குத் தீங்கு நேராவாறு இரவு பகல் எல்லாம் காக்கிருர். | 28. சிவலிங்கம் உண்ட மகிழ்ச்சியால் திண்ணன் காட்டில் அலேந்து திரி கிருன். |
| 29. | சிவகோசரியார் அசுத்தம் கண்டு அதை நீக்கியருளுமாறு சிவனே வேண்டுகிருர். | 39. சிவகோசரியார் அசுத்தம் கண்டு பலவாறு பேசி இன்றுடன் ஏழு நாட்கள் இவ்வசுத்தம் நடப்பதாகக் கூறவும் செய்கிருர். |

| தமிழ் | தெலுங்கு |
| --- | --- |
| 30. சிவன் சிவகோசரியார் கனவில் தோன்றி நாளை மறைந்திருந்து காணுமாறு பகர்கிறார். | 30. அவ்வாறு கூறியதும் சிவன் அவர் முன் தோன்றி தன் பின் ஒளிந்திருந்து பார்க்குமாறு கூறுகிறார். |
| 31. திண்ணனுக்கு முன் தோன்றுமுன் அந்தணன் முன் சிவன் தோன்றுவதாகக் கூறவில்லை. | 31. அவ்வாறு கூறுகிறது. |
| 32. சிவனின் வலது, இடது கண்களில் குருதி வடிவதாகவே கதை வருகிறது. | 32. முதலில் ஒரு கண்ணிலிருந்து கண்ணீர் வருகிறது, பின்பு குருதி வருகிறது. இறுதியில் பிற கண்ணிலிருந்து குருதி வருகிறது எனக் குறிக்கப்படுகிறது. |
| 33. இடது கண்ணைப் பெயர்க்கும்போது சிவன் தோன்றித் தடுத்து விடுகிறான். | 32. அவ்வாறு இல்லை. இரண்டாவது கண்ணைத் திண்ணன் பெயர்க்குங்கால் சிவன் தடுத்தாட்கொள்வதாயுளது. |
| 34. பின் தன் வலத்தில் நிற்குமாறு கூறி முக்தி நல்கினார் சிவன். | 34. சிவன் திண்ணன் முன் தோன்றியதும் சிவகோசரியாரையும் அழைத்து வேண்டும் வரங்களைக் கேட்குமாறு கூற அவர்கள் முக்தியை நல்குமாறு வேண்டினார். சிவன் இருவருக்கும் முக்தியை நல்கினார். |

| தமிழ் | தெலுங்கு |
|---|---|
| 35. இத்தகு குறிப்பு இல்லை. மறைந்து பார்க்குமாறு சிவகோசரியாரிடம் கூறி யபின் அவர் பற்றிய பேச்சே இல்லை. | 35. சிவகோசரியார் சிவனி டம் திண்ணனுக்கும் முக் தி யை அளிக்குமாறு வேண்டுவதாக உள் ளது. |
| 36. சிவன் தோன்றியதும் திண்ணனுக்கு முக்தி கிடைக்கிறது. | 36. சிவன் தோன்றி வரம் அளித்து மறைகிருன். பின் இறுதியில் அவர் களைச் சிவன் தன்னுள் ஒன்ருக்குகிருர். |

கருத்து :

கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு நோக்கி ஞலும் அவையும் வேறுபாடு காட்டுவனவாய் அமைந் துள்ளன.

1. வேடர் வாழ்வைத் தூர்சடி சேக்கிழாரிலும் தெளிவுறக் காட்டுகிருர். வேடர்களின் வாழ்க்கை முறை களும், பழக்க வழக்கங்களும், காம உணர்வுகளும், அவ்வாறே சித்தரிக்கப்படுகின்றன. இதனால் தூர்சடி வேடர் வாழ்வை நன்கு உணர்ந்தவர் எனலாம். ஆயின் சேக்கிழார் வேடர் வாழ்வை ஓரிரு சொற்களால் மட்டிலும் சுட்டிச் செல்கிருர்.

2. தூர்சடிக்குக் காவியம் பாடவேண்டுமென்ற விருப்பம் முழுமையாக இருந்தது, ஆயின் சேக்கிழாருக்கோ அடியார்களின் பக்தியைப் பாடவேண்டும் என்பதே நோக்க மாயிருந்தது.

3. சேக்கிழார் காமச் சுவையையும் பெண்களின் வடிவு அழகையும் சுட்டினாரில்லை. அவருக்கு இவ்வர்ணனை முக்கியமல்ல, ஆயின் தூர்சடி இதை விவரிக்கிருர். வேடர் வாழ்வை அவ்வாறே தர விரும்பியதே இதற்குக் காரண மாயிருக்கலாம்.

4. அந்தணர் செல்வாக்கைத் தூர்சடி விடவில்லை. சிவன் திண்ணன் முன் தோன்று முன்பே சிவகோசரியார் முன் தோன்றினுர் என்பதும், சிவகோசரியார் திண்ணனுக்கு முக்தியையளிக்குமாறு சிவனிடம் வேண்டுவதும் அந்தணர் செல்வாக்கை நிலைநாட்டுதற்கே யாம்.

ஆயின் சேக்கிழாருக்கு அடியவரின் பக்தியே வேண்டியது. அதனுல் சிவகோசரியார் பற்றியே அவர் இறுதியில் கட்டவில்லை. சிவன் தோன்றி திண்ணனுக்கு முக்தியளித்து மறைகிருர் எனக் கூறிக் கதையை முடிக்கிருர்.

# நிறையுரை

தமிழ், தெலுங்கு இலக்கியங்களில் காணப்பெறும் கண்ணப்பர் வரலாற்றைச் சுட்டி ஆய்ந்து காட்டுகிறது இந்நூல். ஒப்பிலக்கிய ஆய்வின் பயனாகிய இலக்கியச் சுவையை இந்நூல் அழகுறச் சுட்டிக் காட்டுகிறது. இவ்வாய் வால் கீழ்க்காணும் உண்மைகளை அறிய இயலுகிறது.

1. தமிழ்-தெலுங்கு இலக்கியங்கள் கண்ணப்பர் வரலாற்றை இயம்பியுள்ள திறத்தைத் தமிழ் அறிஞர் உணர உறுதுணை பயக்கிறது.

2. கண்ணப்பர் வரலாற்றை எழுதிய ஆசிரியர்களின் நோக்கங்களை அறிய இயலுகிறது.

3. இருமொழி இலக்கியங்களையறிந்து சுவைக்க இயலுகிறது.

4. ஆசிரியர் தம் பக்திப் பெருக்கை யறிய முடிகிறது.

5. இவ்வரலாறுகள் எழுதப்பெற்ற காலச் சூழல்களை அறிய இயலுகிறது.

6. வேட்டுவ வாழ்வை உணர வழிகோலுகிறது.

7. வெவ்வேறு இலக்கிய ஆசிரியர்கள் ஒரே கதையைத் தம் கால இட பயன் போன்ற சூழல்களுக்கேற்பக் கூறும் பாங்கைத் தெளிவுற உணர்ந்திட இயலுகிறது.

# பின்னிணைப்பு

## தூர்சடியின் காளத்தி மகாத்மியம்
## மூன்றாவது : த்ருதீய ஆஸ்வாசமு

1. இல்வாழ்வில் இருந்து துயருறும் என் மனத் துயரங்களினின்று நோயைத் தீர்க்கும் மருந்தைப் போன்று தீர்க்குமாறு வேண்டுகிறேன் காளத்தி இறைவனே! சிவனே!

2. இப்புனிதமான கதையைக் கேட்ட, கேட்கப் போகிறவர்களுமாகிய பக்தர்களே! கேளுங்கள்! யர்தவன் பெற்ற அருளை நீங்களும் பெற்றவர்கள் ஆவீர்கள்!

## கண்ணன் எனப்படும் திண்ணனின் நாட்டு வர்ணனை

3. பொத்தப்பி நாட்டில் உடுமூறு என்னும் கிராமம் உள்ளது. அங்குள்ள காட்டுப் பகுதிகளில் வேடர்கள் வாழ்ந்து வந்தனர். அங்குத் தாமரை மலர்கள் மலர்ந்திருக்கும், நீரூற்றுகளும் பல உண்டு.

4. எலந்தம் முதலிய மரங்களில் வலைகள் தொங்கும். சுண்டைக்காய் போன்ற முத்துக்களை அணிந்திருப்பர். குருதி நிறத்தையொத்த நிறத்தையுடைய 'ஊடுக' பழத்தைப் போன்ற மணிகளை அணிந்திருப்பர். சந்தனக் கட்டைகளை விறகாக எரிப்பர். ஆண்களும் பெண்களும் இணைந்து இன்பமான இல்வாழ்வை நடத்தினர்.

5. கத்தூரி, புனுகு முதலிய வாசனைப் பொருட்களால் புகை போட்டனர். வீடு மெழுகி மோட்ச உலகிற்கு வழி தேடினர்.

6. பட்டால் ஆகிய உடைகளை அணியும் செல்வம் பெற்றிருந்தும் இலை உடையை அவர்கள் வெறுக்கவில்லை. அரசு உணவு உட்கொள்ளும் நிலையினராயினும் காட்டில் விளையும் 'வன்யதான்யம்' என்ற உணவைக் கீழானது என எண்ணார். மாணிக்கம் போன்ற உயர்ந்த ஆபரணங்களை அணியும் செல்வம் படைத்திருப்பினும் சிவப்பு நிறமான குண்டு மணிகள் எதற்கு என எண்ணார். மென்மையான பஞ்சணைகளில் உறங்கும் அளவிற்குச் சிறப்பு பெற்றிருந்தும் 'பூதிக' என்னும் கொடியாலான ஊஞ்சலைப் பயன்படுத்தினர். அவர்கள் மிகுந்த செல்வம் பெற்றிருந்தும் தங்கள் குல ஒழுக்கங்களை (தர்மங்களை) மறக்கவில்லை.

7. எல்லா உறுப்புகளும் உடைய பொம்மை செய்து அதற்குக் கரி பூசி முடிவைத்து யானைத்தந்தத்தால் ஆன முத்துக்களைக் கண்களாக வைத்து சிறு கஜேந்திரன் போன்று அதைத் தம் நிலங்களில் வைத்தனர்.

8. யானைக் கொம்பினால் தம் நிலங்களுக்குக் கண்ணேறு (திருஷ்டி) கழித்தனர்.

9. மலைகளில் உள்ள தம் நிலங்களில் அறுவடைக் காலங்களில் பன்றிகள் மேயாமல் இருக்க வெள்ளையான ஒலிக்கும் மணிகளைக் கயிறுகளில் கட்டி வைப்பர்.

10. 11. பரண்மீது ஏறிக் கவண் வீசி பறவை ஓட்டினர்.

12. அழிக்க இயலாத உடன் பிறந்தோர் பகை போன்று பருத்த அழகிய முலைகளையுடைய பெண் அழகு காலம் காலமாக இருந்து வருகிறது.

13. பிடி இடை, தேனொழுகும் இதழ்கள், ஒளி பொருந்திய மேனி, மேகம் ஒத்த கூந்தல் என்ற அழகுடன் விளங்கினர்.

14. தேனினும் இனிமை பயப்பது வேடர் தம் மனைவியர் இதழ்ச்சுவை.

15. கருமையான கூந்தலில் கொண்டையிட்டு அதில் மயிலிறகுகளை அணிந்தனர். நெற்றியில் சந்தனப் பொட்டிட்டனர். இடையில் இலை உடையை அணிந் தனர். அதனுடன் ஒட்டியாணம் என்னும் அணி கலனையும் அணிந்துகொண்டனர். இத்தகு ஒப்பனைகள் உடைய வேடர்கள் ஆண்களும் பெண்களும் பிள்ளை களுமாகக் கூடிக் காட்டில் திரிந்து வாழ்ந்தனர்.

16. தம் மனைவியரின் அழகை, சிம்மத்தை ஒத்த இடை என்றும், மயில் தோகையொத்த முடி என்றும், மான் போன்ற மருண்ட விழிகள் என்றும் முலைகள் யானையின் மத்தகத்தை ஒத்தது என்றும் வர்ணித்தனர் வேடர்கள்.

17, 18. இத்தகைய வேடர்களின் தலைவன் சிவபெருமானை ஒத்த நாதநாதன் என்பவன். சிவன், அடியாரைச் சோதிக்க எண்ணினால் வேடர் உருவமே கொள்வான்.

19. பார்வதி தேவியான கௌரியும் வேட்டுவப்பெண் உருவமே பூணுவாள். அவர்களை ஒத்திருந்தாள் நாத நாதனின் மனைவி தந்தெ என்பவள்.

20. நாதநாதனும் தந்தெயும் அன்பாக வாழ்வு நடத்தினர்.

21. சிவன் கருணையால் தந்தெ கருவுற்றாள்.

22. நிறைமாத கர்ப்பிணியின் உடற் பிரகாசமானது. பிறக்கும் குழந்தை சிவன்போல் பெயர் பெறக்கூடும் என்று உன்னுமாக இருந்தது.

23. வயிற்றில் உள்ள குழந்தை அரசியின் உடல் அழகைக் கெடுக்கும் வண்ணம் இருந்தது.

24. பிறக்கும் குழந்தை பிறந்தபின் செய்யும் செயல்களை யெல்லாம் முன்னமே இவள் மனத்துதித்து செய்யத் தூண்டியது. புலி, சிங்கம், மான், கரடி, பறவைகள் போன்ற மிருகங்களை வேட்டையாட வேண்டும் என்று எண்ணினாள். மலைப்பள்ளங்களில் சிவனைத் துதிக்க

வேண்டும் என்ற விருப்பம் உண்டாயிற்று. சந்திரனுக்கு இன்பம் விளைவிக்கும் அல்லி மலர் வைத்து விளையாட வேண்டும் என்று எண்ணினாள். சுவைமிக்க மாமிசம் வைத்துச் சிவனைப் பூசிக்க வேண்டும் என்ற அவாவும் அவள் மனத்து எழுந்தது. நீலமலர்களை யொத்த கண்களைப் பிடுங்கி வைத்துப் பூசை செய்ய வேண்டும் என்று எண்ணினாள். இவையும் வயிற்றில் வளரும் சிசுவின் கோரிக்கைகள் ஆகும்.

25. குழந்தை பிறக்கும் நேரம் நெருங்கியதும் தந்தெ வளர்ப்புக் கிளிக்குச் செய்தி சொல்லி ஆடை ஆபரணங் களைத் தளர்த்தி படுக்கைமேல் ஒருக்களித்து இருக்கச் செய்து குழந்தை பிறத்தற்கான ஏற்பாடுகள் செய் தனர்.

26. தந்தெக்குப் பிரசவவலி ஏற்பட்டதும் அங்கிருந் தோர்; அழையுங்கள் மருத்துவச்சியை, எழவிட வேண்டாம்; தண்ணீர் காய்ச்சுங்கள்; பள்ளம் தோண்டுங்கள் பிரசவக்காரியை; என்று நிற்க விடாதீர் தாம் அறிந்தவற்றையெல்லாம் செய்தனர்.

27. நல்ல நேரத்தில் வேடர் அரசி சிவபக்தி பொருந்திய குழந்தையைப் பெற்றெடுத்தாள். உலக இல்லற ஆசையை (சம்சாரம்) அறுத்ததுபோல் தொப்புள் அறுத்தனர்." சிவபக்தி அடையாளமாகத் திருநீறு பூசினர். பாவங்களைக் கழுவுவதுபோல குழந்தையை நீராட்டினர். ஆமணக்கு எண்ணெயைத் தொப்பு ளுக்குப் பூசிக் குழந்தையைப் பெண்கள் படுக்க வைத்தனர்.

28. இறைவன்பால் மனத்தை நிறுத்திய பக்தன் யோக நித்திரையில் இருப்பது போல் அக்குழந்தை சிலமணி நேரம் கண்களைத் திறவாமல் படுத்திருந்தது.

29. இவ்வுலகம் எவ்வாறு உள்ளதோ என்று காணும் ஆவலோடு தாய் தந்தை மகிழ அக்குழந்தை மெல்லக் கண்களைத் திறந்தது.

30. என்ன உலகம் இது! சிவபக்தி எங்கும் இல்லையே என்பது போல் ஏளனமாகச் சிரித்தது. இல்லற உறவுகளை உதறித் தள்ளுவது போல அழகிய கால்களை உதைத்துக்கொண்டது. உலக வாழ்க்கையில் விருப்பம் இல்லாதது போல பஞ்சணையில் புரண்டது. அரசன் போல் எழுந்து உட்கார்ந்தது. காணாமற்போன முத்தைத் தேடுதல் போல் இறை உண்மையையறியக் கைகளால் தரையில் அலைத்தது. மன்மதன் சிவன்மேல் அம்பு எய்ய அஞ்சியது போல் குழந்தை தளர்நடை நடந்தது.

31. இவ்வாறு அக்குழந்தையின் ஒவ்வொரு செயலும் சிவ அறிகுறி பொருந்தி இருந்தமையின் அதற்குத் திண்ணன் எனப் பெயரிட்டனர்.

32. குளிப்பாட்டி, திருநீறு இட்டு எருக்கம் நாரினால் அரைஞாண் கயிறுகட்டி, மயிலிறகு வைத்து, கழுத்தில் மணிமாலைகள் அணிவித்துக் கண்களில் மைதீட்டி மந்திரத் தாயத்துக்கள் கட்டினர்.

33. சிட்லபொட்ளகாய, சிரசிங்கணுவர்த்தி, குடுகுடு குஞ்சாலு, குந்தெனகுடி, தாகிடிமுச்சுலாடலு, க்ரச்சகாயலு, வெந்நெலகுப்பலு, தந்துபில்ல, தூரநதுங்காலு, கீரனகிம்சலு, பில்லுதிபாலம்கி, பில்ளகோடு, சிருகுடுவ்வலபொடி, செண்டு கட்டி நடோதி, யல்லியிப்பநபட்டெட, லப்பளாலு, சிக்கர பில்ல, லோடில்லு போன்ற விளையாட்டுக்களைத் தன் வயதுக் குழந்தைகளுடன் சேர்ந்து விளையாடினார்.

## திண்ணனின் விற்பயிற்சி

34. திண்ணன் மூங்கிலை விற்போல் கட்டிக் குச்சிகளை அம்புகள் போல் செய்து எய்தான்.

35. வில்லைக் கையில் பிடித்த மாதம் பத்து நாட்களுக்கெல்லாம் வேகம் பொருந்திய தடவில்லு, வெதுரு வில்லு, செலசுவில்லு முதலியவற்றை எளிதாகக் கற்றுத் தேர்ந்தார்.

36. அந்நிலையில் ஒன்பது உடல் உறுப்பு அழகும் பொருந்திய திண்ணனுக்குப் பல்வகை மிருகங்களை வேட்டையாடும் முறையைக் கற்றுத்தர எண்ணினர். அதன் பொருட்டு காட்ரேணி பூசைக்கு ஏற்பாடு செய்தனர். பால் குடங்கள், சந்தனம், மயில் இறகினால் செய்த மாலைகள், கரிய அம்புகள் முதலியவற்றை வைத்தனர். பழுத்த இலைகளால் ஆன சேலை உடுத்திக் கொண்டை போட்டு மான்கண்களுக்கு மையெழுதி புனுகு பூசி, பச்சை கத்தூரி, ஜவ்வாது புகையிட்டு வாசனை பொருந்திய காட்டுமஞ்சளைப் பூசி காட்டில் வேடர்கள் திரிந்தனர். இவ்வாறு சாட்டு வைத்த அடுத்த செவ்வாய்க் கிழமை மூங்கில் அரிசியில் பூப்போல் வடிக்கப்பட்ட பண்டங்கள், சமரி மிருகங்களின் ஏற்றுற்போல் குலுகும்பரால பாயாசம் கொண்ட குடங்கள், மாவு இடித்து உப்பிட்டுப் பிசைந்து ஆவியில் வேக வைத்த கொழுக்கட்டைப் பானைகள், இலவங்கம், கசகசாலு முதலிய வாசனைப் பொருட்கள் கூடிய குழம்புச் சட்டிகள், மாமிச வகைகள் கொண்ட தட்டுகள், மலர்கள், மாலைகள் கொண்ட கூடைகள், காவடிகள், பலி இடுவதற்கான பலவகைக் காட்டு விலங்குகள் எனும் இவற்றுடன் வண்டிகள் கட்டிக் கொண்டு காட்ரேணி கோயிலுக்குச் சென்றனர். அவ்வாறு செல்கையில் தாரை தம்பட்டைகள், மேளங்கள் போன்ற இசைக் கருவிகளை இசைத்துக் கொண்டும் பாடிக் கொண்டும் காட்ரேணி கோயிலை அடைந்தனர்.

37. ஒருபொழுது இருந்து ஆற்றில் குளித்து நாதநாதன் தந்தை இருவரும் பல அலங்காரங்களையும் பூண்டு சக்தி நிறைந்த மனத்தினராய் இருந்தனர்.

38. நீராடி, திருநீறு பூசி மூலிகைகளால் செய்யப்பட்ட 'ரஷாமூலிகா மாலிகாலு லயம்' (இரட்சாபந்தனம்) அணிந்து குளித்த ஈர உடையுடன் தலையில் கருப்புக் கொடியைக்கட்டி அம்பு பூட்டிய வில்லுடன் திண்ணன்

தன் தந்தை இதயம் பொங்கக் காட்ரேணி கோயி லுக்குச் சென்றன்.

39. வேடர்கள் ஆலயத்தில் ஆயுதங்களை வைத்துச் சிவப்புப் பூமாலைகள், மூங்கில் அரிசி, சிவப்புச் சந்தனம், சாம்பிராணிப்புகை, புனுகு முதலியன வைத்துத் தீபங்கள் ஏற்றிப் பல்வகை காணிக்கைப் பொருட்களை அர்ப்பணித்துப் பூசை செய்தனர்.

40. தாய் தந்தையருடன் தானும் உயிர்ப்பலி இட்டு, தந்தை அருகிலமர்ந்து புதியதாகத் திருமணம் செய்து கொண்டவர்களோடும் வேடர்களோடும் உணவுண்ணத் துவங்கினர்.

41. பேச நினைத்தும் மறந்து போனவர், நடக்கப்போய் குப்புற விழுவோர், அமைதியாக இருக்க நினைந்தும் இருக்க முடியாதோர், எழ முயன்றும் முடியாதவர், அடாத சொற்கள் கூறித் திட்டுவோர், பாடல் கற்காமலே பாடுவோர், எதிரில் வந்தோர்க்கு நிலத்தில் விழுந்து கும்பிடுவோர், வெட்கத்தை விட்டு ஆடுகின்றவர், மிக்குக் குடித்தும் மீண்டும் குடிக்கக் கைநீட்டுவோர், வில்லம்புகளைத் தொடுப்போர். இவ்வாறாகக் கடவுளுக்கு அத்தம்பதிகள் பூசை செய்தனர்.

42. பெண் ஒருத்திக்குக் கள் மிகுதியாக உண்டமையால் மனம் காதலன்பால் செல்கிறது. அவள் அவன் அருகில் சென்று பெயரிட்டு அழைத்துக் கட்டித் தழுவி இன்ப லோகத்து வாசலுக்கு அழைத்துச் செல்கிருள்.

43. கள்ளை மிகுதியாகக் குடித்ததால் நிலை தடுமாறிய ஆண் களும், பெண்களும் காமம் மிக்குக் கூடுகின்றனர்.

44. ஆண் ஒருவன் நீண்ட நாட்களாகத்தன் விருப்பத்திற்கு வராத ஒரு பெண்ணை நெருங்கி இருவரும் சிறிது

போராடிப் பின் அவள் வாளாவிருத்தலினுல் இன்று வந்தாய் வழிக்கு என்று கூறி ஆயிரம் மயக்க வார்த்தைகள் கூறி அதில் வெறுப்பேற்பட்டவுடன் அவளுடன் கூடுகிருன்.

45. புதிய மலரில் மதுவுண்ட வண்டுபோல் புதியதாகத் திருமணம் செய்த காதலர்கள் தம் இளம் மனைவியரோடு கூடி இன்பம் நுகர்ந்தனர்.

## திண்ணன் வேடர்களுடன் வேட்டைக்குச் செல்லுதல்

46. இவ்வாறு காட்டேரேணி தேவதைக்குப் பூசையும், கேளிக்கை விளையாட்டுக்களும் முடிந்த பின்னர் காட்டேரேணி தேவதையின் வாழ்த்துக்களுடன் மறுநாள் நாதநாதன் தன் மகனைத் தக்காருடன் வேட்டைக்கு அனுப்புகிருன். அப்போது அவர்கள் தம்முடன் தாம்பு கயிறுகள், தொட்டிவல லேடிவல (மான்வலை), குந்தேடிவல (முயல்வலை), பந்திவல (பன்றிவலை), சவதம்டவல, மகரிவல: (மீன்வலை), யெலிகவல (எலிவலை) முதலிய வலைகளையும்: சிவ்வள்கலு (நாய்கள்) குரங்கமுலு (குரங்குகள்), முங்கீதலு (கீரிகள்), நெத்துலு முதலிய பார்வை மிருகங்களையும், அம்புகளையும், பலவகைக் கயிறுகள் முதலியவற்றையும் எடுத்துச் சென்றனர்.

47. திண்ணன் இவ்வாறு வேட்டைக்குச் சென்றபோது பல்வகை விலங்குகளையும் பறவைகளையும் வேட்டையாடினுன்.

48. புலுலு (புலிகள்), குரங்கமுலு (குரங்குகள்), கரடிபோதமுலு, ஏதுலு, மந்து பில்லுலு (ஒரு வகையான காட்டுப் பூனை), துப்புலு (எருதுபோல் பெரியதாக இருக்கும், எருமைக் கொம்புகள் போல் இவற்றின் கொம்புகள் இருக்கும். ஆயின் இவற்றிற்குக்

கிளைகள் இருக்கும், கனதுலு (எருமை போல் இருக்கும்). கிடுலு (பன்றிகள்), செவ்வுல போதுலு (நரிகள்), கொர்ணலகண்ட்லு, செமறிமிருகம்புலு, பல்லு கம்லு (மூன்று தந்தங்களையுடைய காண்டா மிருகங்கள்), எனபோதுலு (ஆண் எருமைகள்), கஸ்தூரி பில்லுலு (புனுகுப்பூனை) முதலிய விலங்கு களைத் திண்ணன் தந்தைக்குக் காணிக்கையாக அனுப் பினர்.

49. முன்னர் பிறந்த (தலைச்சன்) ஆட்டைக் கொணர்ந்து கண் முட்டைகளைக் குத்தித் தலையை நீரில் நனைத்து வால் அறுத்து, தூபமிட்டு, மீசைகளைச் சுட்டு காணிக்கையாக்கினர் காட்ரேணி தேவதைக்கு.

50. நன்கு கொழுத்த பன்றிகள் சிலவற்றைக் கொன்று நெருப்பால் சுட்டு, தோல் உரித்து, வாயில் எச்சில் வர அவற்றைப் பதமாகச் சுட்டு, கொழுப்பாகிய எண்ணெய் வடியுமாறு கண் முட்டைகளைச் சுட்டு, மரத்தின் நிழலில் ஒரு தூய்மையான கல்லின்மேல் கொண்டு வந்து வைத்தனர்.

51. அவ்வாறு கண் முட்டைகளைச் சுட்ட பறவைகளின் இறைச்சியில் தேன் கலந்து பிசைந்து நாதநாதனின் குழந்தைக்கு ஊட்டினர்.

52. இதற்கு முன் வேட்டையாடிய காட்டுப் பகுதியைக் கடந்து அவர்கள் காட்டின் நடுப்பகுதியை அடைந் தனர்.

53. பக்க மலைகளாகிய சதாசிமலை, வெள்ளிமலை முதலிய மலைகளிலும் வேட்டையாடினர்.

54. ஒரு நிலையில் திண்ணன் வேட்டையாடிய களைப்பினால் மலர்ச் செடிகளின் நிழலில் படுத்து உறங்கினார்.

## கனவில் திண்ணனைச் சிவன் தன் வயப்படுத்துதல்

55. உடலெல்லாம் வெள்ளை விபூதி அணிந்து இடையில் புலித்தோல் உடுத்து, பரட்டைத் தலையுடன் இரக்க முடைய மனத்துடன் கனவில் தோன்றியது ஒரு உருவம்.

56. 'பாலகா' இவண் வடக்கு மூலையில் ஒரு சிவலிங்கம் உள்ளது, அதனை நீ பூசை செய்து மேன்மை அடைவாயாக எனச் சொல்லி மறைந்தது.

57. உடனே திண்ணன் திடுக்கிட்டெழுந்து நான்கு திசைகளிலும் சிவலிங்கத்தைத் தேடிய வண்ணம் மனத்தில் வியப்புடன் இருந்தார்.

58. வாயால் ஒலிசெய்து வலைபரப்பி விலங்குகளைத் திரட்டும் பொருட்டுச் சீக்கை செய்தார். அவ்வாறு செய்கையில் பல விலங்குகள் வருகின்றன. அவற்றில் பன்றியும் ஒன்று.

59. அப்பன்றியும் வலையில் சிக்காது ஓலமிட்டுக் கொண்டே ஓடியது.

60. திண்ணன் வில்லுடன் அப்பன்றியைத் துரத்திக் கொண்டு ஓடினார். அப்பன்றி அவரை அழைத்துச் சென்றது வெகு தொலைவு.

61. இறுதியில் திண்ணன் கனவில் கண்ட சிவலிங்கமிருக்கும் இடம் வந்ததும் பன்றி மறைந்து விடுகிறது.

62. கனவில் கண்டது போன்றே அப்பன்றி மறைந்த இடத்தில் சிவலிங்கம் இருப்பதைக் கண்டார். கனவில் வந்தவையாவும் உண்மையே; இப்பன்றி வந்த நிலையும் இமயமலையரசன் மாட்சியே என்று எண்ணினார்.

63. சிவலிங்கம் கண்ட திண்ணன் மிகுந்த இன்பம் அடைந்தார்.

64. சிவலிங்கம் கண்டதும் திண்ணன் கண்களில் நீர் வழிகிறது. உரோமம் சிலிர்க்கிறது. உடலெல்லாம் தரையில் படுமாறு விழுந்து வணங்கினார்.

## திண்ணன் சிவலிங்கத்திற்குத் தொண்டு செய்தல்

65. ஓ! சாமீ! இப்படிப்பட்ட மலையில், புலிகள், சிங்கங்கள் திரியும் இருண்ட காட்டில் ஏன் இருக்கிறாய்? இங்கு இருக்கும் ஆற்றங்கரைக்கு வா! அங்கு உனக்குச் சோறு தண்ணீர் முதலியவற்றை நாளும் தருவோம் என்று கூறினார்.

66. என்னுடன் உடுமூருக்கு வா! அங்கு நாங்கள் நன்கு கொழுத்த பன்றி, மான் போன்ற பலவகையான விலங்குகளைக் கொன்று விருந்து சமைத்து இடுவோம்.

67. ஓ! சிவலிங்கமே! கேள்! நிவ்வரி (மூங்கில் அரிசி), குறுகுபிராலுலு, வெதுறு பிராலுலு, சபநபு மேகமுலு (செம்மறி ஆடுகள்), பால் முதலியவற்றுடன் பாயாசமும் செய்து தருவோம்.

68. புட்தெநிபு, பெரதேன், புட்டஜிந்து, ரேந்நதேநியு முதலிய தேன் வகைகள் அங்கு நிறைய உண்டு. நெய், மாவு, இறைச்சி முதலியனவும் உண்டு. அவற்றை உண்டு மகிழலாம்.

69. நேரெடு பண்டலு, நெலயூடி பண்டலு, கொண்ட மாமிடி பண்டலு, தொண்ட பண்டலு, பலெம்டுலு, நெம்மிபண்டலு, பரிவங்க பண்டலு, நிடிமுடிபண்டலு, கலிலெபண்டலு, தொடிவெம்த பண்டலு, தும்மிகி பண்டலு, ஜாநபண்டலு, கங்கரேணி பண்டலு, வெலக பண்டலு, புல்ல வெல்கபண்டலு, மோளி பண்டலு, ஈதபண்டலு, கொம்நி பண்டலு, மேடி பண்டலு முதலிய பழங்கள் கொடுப்போம். அதனால் வந்துவிடு அய்யனே!

70. வீடோ, சுற்றமோ, மனைவியோ, மகனோ-ஆகிய எவ்விதச் சுற்றமும் இல்லாமல் ஏன் இருக்கிறாய்? எங்கள் கிராமத்தில் வேண்டியயாவும் தவறாது உனக்குத் தருவேன். இவ்வாறு தனியாக இருப் பதினினும் வந்துவிடு லிங்கமே !

71. அழகிய இளம் பெண்களைப் பணி செய்ய அனுப்பு கிறேன் என்னுடன் வந்துவிடு.

72. என்பால் நம்பிக்கை இருப்பின் வா என்னுடன் இப்போதே, இல்லையெனில் நான் இங்கேயே இருப் பேன்; நீயே எனக்கு எல்லாம். நான் ஏன் உன்னைக் கட்டாயப்படுத்த வேண்டும்; வரவில்லையாயினும்போ! நானும் இங்கேயே இருந்து விடுகிறேன்.

73. சிவலிங்கம் மௌனமாக இருந்தது. அதனால் திண்ணன் அழுது கொண்டே அங்கேயே இருந்து விடுகிறார். அந்நிலையில் மற்ற வேடர்கள் பன்றியின்பின் சென்ற திண்ணன் இன்னும் வரவில்லையே என்று காலடி அடையாளம் கண்டு அவனைத் தேடிச் செல்கின்றனர்.

## திண்ணனின் கண்கள் துயரடைதல்

74. தலைவா ! உன்னை அலைக்கழித்துக் கொண்டு வந்த பன்றி எங்கு போயிற்று? எங்களை ஏறெடுத்தும் பார்க்க மறுக்கிறாயே எதற்கு? கண்ணீர் பெருக்கெடுக்க நாங்கள் என்ன கூறினும் பார்க்கமாட்டேன் என்கிறாய் ? என்ன காரணமோ ? வேட்டையாட வந்த நாம் எவ்வளவு நேரமாகியும் செல்லாவிடின் உன் தாய் தந்தையர் வருந்துவர் அன்றோ !

75. நீ இருக்கும் இடம் தெரிந்து வேட்டை நாய்கள் உன்னைச் சூழ்ந்து கொண்டதும் அறியாமல் இருக்கிறாயே ?

76. பரப்பிய வலைகளையும் சுருட்டவில்லை. கொன்ற விலங்கு களையும் கொண்டு வரவில்லை. நாய்களுக்கும் சிறுத்தை

களுக்கும் இன்னும் உணவு அளிக்கவில்லை. காட்டேரணி தேவதையையும் இன்னும் பூசிக்கவில்லை. வேட்டை சென்று திரும்பியசெய்தியைத் தந்தைக்குக் கூறவில்லை. உன்னை நீ மறந்து மரம்போல் நின்று விட்டாயே. உன் மனத்தில் உள்ளதைச் சொல் எங்கள் துயரத்தைப் போக்கு !

77. ஓ ! தந்தையே ! உன்னை விட்டுப்போகமனம் வருமா ? உன் உடன் பிறந்தோர் தாய் தந்தையர் இவர்கள் 'திண்ணன் இப்போது எங்கே ? என்று கேட்டால் எங்கள் உயிர் நிலைக்குமா ? நீ எங்களோடு வந்து கிராமத்தில் எங்களுக்கு இடுக்கண் வராது காத்து நன்னெறிப்படுத்து !

78. எவ்வளவு கேட்கினும் எங்களை ஏன் பார்க்காமல் இருக்கிறாய் ? இவற்றை எல்லாம் அரசனிடம் கூறுவோம். கூறவேண்டியது ஏதேனும் இருப்பின் கூறவும் என்றெல்லாம் கூறி அவன் பாதங்களைப் பற்றிக் கொண்டனர்.

79. சிவலிங்க நினைவை மனத்தில் கொண்டவனாய் வேடச் சிவனான திண்ணன் அவர்கள்பால் கனிவு கொண்டு பின்வருமாறு கூறத் துவங்கினான்.

80. இந்த சிவலிங்கத்தில் உயிர் உள்ளவரை அடிமையாக இருக்க எண்ணியுள்ளேன். உங்கட்கு ஏன் இவ்வளவு அவசரம்; கிராமத்திற்குச் செல்லுங்கள்.

81. என்பின் இவர் வரின் வருவேன் உங்களோடு சேர்ந்து இப்போது. இல்லையெனில் எது எவ்வாறு ஆயினும் நானும் இதனுடன் இருந்து விடுகிறேன்.

82. எனக்குச் சுற்றம் தாய் தந்தையர் எல்லாம் இத்தெய்வமே. உங்கட்கு இங்கொன்றும் வேலையில்லை. நீங்கள் கிராமத்திற்குச் செல்லலாம். நீங்கள் உங்கள் விருப்பம் போல் கத்தினாலும் நான் வரமாட்டேன். என் இறைவனுக்காக இங்கேயே உயிரையும் போக்கிக் கொள்வேன். இது உண்மை.

83. இவ்விதம் பகர்ந்து சிவனைத் தன் மனத்தில் நிறுத்தி உடல் நினைப்பொழிந்து முன்போல் இருக்கவே வேடர்கள் சென்றுவிட்டனர்.

84. அந்நேரத்தில்

## திண்ணன் நாள்தோறும் உணவு அளித்தல்

85. பல வருடங்களாகப்பட்டினியிருக்கிறான் இவ்விறைவன். அடிமையாகிய நான் இருக்குங்கால் சிவனுக்குண்டான துயரத்தைத் துடைக்க வேண்டுமல்லவா!

86. திண்ணன் அவ்விறைவனுக்குப் பக்தியால் மன நிறைவை உண்டாக்க வேண்டுமென்று கொடிய விலங்குகளைக் கொன்று அவற்றைச் சுட்டு சுவையான மாமிசத் துண்டங்களைச் சிவலிங்கத்திற்கு அளித்தார்.

87. வில்லொரு தோளில் அணிந்து, அம்புக் கட்டை முதுகில் கட்டிக் கொண்டு இலைகலையில் மாமிசம் கொண்டு, வாயில் நீரும் கொண்டு, பத்தி ஆறுய்ப் பெருகி ஓட அந்நீரால் சிவனைக் கழுவி, மாமிசத் துண்டுகளை உண்ணுமாறு வேண்டினார்.

88. சிவன் அவற்றை உண்ணாதிருக்கவே இவை சரியாகச் சுடப்படவில்லையா? நல்ல கொழுப்பு இல்லையா? மிக்குப்பொசுங்கி விட்டதோ? சுவையாக இல்லையா? இது போதாது என்றா? பழக்கம் இல்லையா? எதற்கு உண்ணமாட்டாய்? பார்வதி கேள்வனே சொல்லய்யா?

89. பசி இல்லையா? நான் உண்மையான பக்தன் இல்லையா? உண்ண மாட்டாய் ஏன் ? இனி என்னில் என்ன குறை உள்ளது! இரக்கம் காட்டி இம்மாமிசத்தை உண்ணக் கூடாதா?

90. நீ உண்ணாதிருப்பின் நான் எதற்கு உயிர் வாழ்வது; சிவா! உன் மலரடிகளில் உயிர்விடுவேன் என்று கூறிச் சிவலிங்கத்தின் மீது விழுந்து அழுதார்.

91. திண்ணன் பக்திக்குச் சிவன் மகிழ்ந்து அங்கு எழுந்தருளி அவன் அழுகையை நிறுத்தி ஊனமுதை உண்கிறேன் எழுந்திரு ! என்று சிவன் இயம்பினார்.

92. மகிழ்ச்சியுடன் எழுந்து மாமிசத் துண்டுகளைச் சிவனுக்கு எடுத்துக் கொடுத்தார். சிவன் பேரின் பத்துடன் உண்டார். சிவன் உண்ட மகிழ்ச்சியால் திண்ணன் இன்பமாகக் காட்டில் சுற்றிக் காலம் கழித்தார்.

## சிவ அந்தணன் ஆலயத்தில் அசுத்தம் கண்டு துயருறுதல்

93. திருநீற்றைப் பட்டையாகப்பூசி, குனிந்த தலையுடன், உருத்திராக்க மாலைகள் அணிந்து, பூணூல் துலங்கக் கையில் அபிடேகத்திற்குரிய பால் குடம் ஏந்தி மலர் மாலைகள் கையில் கொண்ட அவர், பெரிய தொப்பை உடையவர், குள்ளமானவர், இடுப்பில் மேல் துண்டு அணிந்தவர் என்ற இந்தக் காட்சியினையுடைய சிவ அந்தணர் யோகிகள் மனத்திற்கு மட்டிலும் தெரியக் கூடிய சிவனைப் பூசிக்க அங்கு வந்தார்.

94. வந்ததும் கோயிலில் நுழைந்தார். சிவன் தூயலிங்கம் ஏன் இவ்வளவு அசுத்தம் அடைந்தது? அய்யோ? இங்கு எச்சில் இலைகள் ஏன் வந்தன? இத்துயரை நான் எவ்வாறு பொறுப்பேன்?

95. குலதெய்வம் என்று மெழுகி, பூசி, கோலங்கள் போட்டு அலங்கரித்திருக்க உள்ளே எச்சில் இலைகளோடு மாமிசத்துண்டங்கள் வரக்காரணம் என்ன? தூய நீரால் சுத்தம் செய்யப்பட்ட சிவலிங்கம் உலர்ந்து போகக் காரணம் என்ன? என் தூய மனத்திற்கு மிகுந்ததுயரை உண்டாக்குகிறது.

96. இறைவா! மலர்களை மட்டிலும் தொடும் இக் கைகளால் உன்லிங்கத்தைத் தொட வேண்டும்

என்றால் அஞ்சுகிறேன். இங்கெல்லாம் எச்சில் மாமிசத்தால் அசுத்தம் செய்ததை எவ்வாறு பொறுத்தாய்? ஓ! பார்வதி கேள்வனே! சொல்லய்யா!

97. இன்றுடன் ஏழு நாட்களாகக் கோயில் இவ்வாறு அசுத்தம் செய்யப்படுகிறது. இது உன் மாயையா? அல்லது எவனாவது இவ்வாறு செய்தானா? உண்மையைக் கூறுமாறு வேண்டுகிறேன்! ஓ கருணா மூர்த்தியே!

98. உன் நண்பனோ! உன் மகனோ! உன் மனைவியோ! உன் உண்மைச் சேவகனோ! நீயே இவ்வாறு செய்தனையோ? சர்வேசா! தூய்மையான ஆலயத்தை அசுத்தம் செய்தது இவர்களில் யார்? உனக்குத் தெரியாமல் இதைச் செய்யக் கூடிய சக்தியுடையவன் யார் ! தயைகாட்டி உண்மையைச் சொல்.

99. அழுக்கடைந்த ஆடைகளை அணிந்தாலும் நான் சகித்தேன். உன்னினும் கீழானவனுடன் உணவுண்டாய் பிணம் சுட்ட சாம்பலை உடலில் பூசிக் கொண்டாய்! இத்தனை வெறுப்புகள் உன்னிடம் இருந்தும் அவற்றை நீ விரும்பினாய்!

100. உனக்கு விருப்பம் இது ஆனாலும், எனக்கு இவ்வாறு அசுத்தம் செய்த அப்பாவியைப் பற்றிக் கூறினால் அதுவே பத்து இலட்சம் இல்லையெனில் உயிர் விடுவேன்! ஓ! நீலகண்டா!

101. அந்தணன் இவ்வண்ணம் இயம்பியதும் நட்சத்திரங்களுக்கெல்லாம் தலைமை பொருந்திய சந்திரனைத் தலையில் தரித்த சிவன் அன்பால் அவருக்கு நடந்த உண்மையைக் கூறினார்.

## சிவன் திண்ணனின் பக்தியை அந்தணனுக்குக் காட்டல்

102. ஓ! சிவ பக்தா! என்னை வேடன் ஒருவன் சத்திரத்திற்குப் புறம்பாக மிகவும் பக்தியுடன் பூசிக்கவே எனக்கு இரக்கம் ஏற்பட்டது.

103. அவ்வேடனின் பூசையை ஏற்றேன். அவனின் பக்தியை நீயும் இன்று பார்க்கலாம். என்பின் தெரியாது ஒளிந்து கொள்ளவும். விரைவில் அவன் வருவான்.

104. இவ்வாறு சிவன் கூறியதும் மகிழ்ச்சியுடன் அந்தணன் சிவன் பின் ஒளிந்திருக்குங்கால் திண்ணன் வந்தார். புனிதமான அவ்விடத்திற்குச் செருப்புக் காலுடன் சென்று சிவன்முன் இலையைப் பரப்பி அதில் சுட்ட பன்றி மாமிசம் வைத்து உண்ணுமாறு வேண்டி அவற்றை எடுத்துக் கொடுத்தான்.

105. சிவன் உண்ணுதிருக்கவே என்ன? என்று தலையை நிமிரப் பார்த்ததும் சிவன் கண்ணில் இருந்து கண்ணீர் வடிந்து வருவதைக் கண்டார்.

106. மலர்ந்தும் மலராமலும் இருக்கும் தாமரையில் இருந்து மகரந்தம் ஒழுகுவதுபோல் சிவன் கண்ணில் இருந்து ஒழுகும் கண்ணீரும் அதிகமானது.

107. சிவனுக்குக் கண்வலி போலும்! அதனுல்தான் மாமி சத்தை உண்ணவில்லை. என்று கருதி அதற்குத் தக்க மருந்து தேடினுர்.

108. எப்பொழுதும் காணுத துன்பம் நுகர்வதுபோல் மனத்தில் துயரம் கொண்டார்.

## திண்ணன் பரமேசுவரனின் கண் நோய்க்குச் சிகிச்சை செய்தல்

109. சிவனின் கண் வலிக்கு கிணற்று அடிமண்ணை எடுத்து இளஞ்சூட்டோடு ஒத்தடம் கொடுத்தார். ஆவரம் இலையைத் தலையில் வைத்து எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துப் பட்டு போட்டார். வெள்ளை கிண்டெற பூ கொணர்ந்து தேய்த்து கலிவ்புவ்வுலு அறுத்து கசக்கிப் பிழிந்து உறைந்த நெய் வைத்து, தயிர் வத்திகள் போட்டு, முலைப்பால் தேய்த்து, சங்கு அரைத்துப் போட்டு, பலவாருகக் கேட்ட மருந்துகள் கண்ட

மருந்துகள், கேட்டுக் கொண்டுவந்த மருந்துகள், காட்டு மருந்துகள் என்று இத்தனை சிகிச்சைகள் செய்தும் கண்ணீர் நிற்கவில்லை. மாருக்க் கண்ணில் குழி விழுந்து குருதி வழியத் துவங்கியது.

110. ஒவ்வொரு முறையும் போட்ட மருந்துகள் யாவும் கடலில் கரைத்த பெருங்காயம்போல, நீரின்மேல் எழுத்துப்போல வீணுயிற்று. கண்ணீருக்குப் பதிலாகக் குருதி பிறந்தது ஏன் ?

111. பட்டணத்து இராணியும், இமயமலையின் அன்புக் குமரியும் என்தாயும் ஆன பார்வதியைக் கோபித்த தால் உனக்குக் கண்கள் இவ்வாறு ஆனதோ? எனக்குத் தெரியாத மருந்து என்ன உண்டு? கண்ணிற்கு வந்த தீங்கு குறையவில்லையே !

112. காமனை எரித்து மனத்தில் எத்தகு காமக்குரோதம் எனும் தீங்கும் அற்ற சிவனை நான் இவ்வாறு நிந்தனை செய்தேன் எனத் திண்ணன் வருந்திஞன். இவ்வாறு சொல்வது சுவாமி துரோகம் அல்லவா? எதற்காக இவ்வாறு உரைத்தேன்? இக்கண்ணுக்கு எவ்வைத்தியம் நான் செய்வேனே !

113. பலவகை மருந்துகளை இட்டும் குணமாகாத இக்கண் வலிக்குக் கண்ணினும் சீரிய மருந்து உண்டோ ? மருந்து கண்டேன் என்று சிவலிங்கத்தைப் பிடித்துக் கொண் டார்.

114. உயிர்போய் உடல் எங்கே விழுந்து விடுகிறதோ என்பது போல அம்புப் பொதியில் இருந்து அம்பினை எடுத்து உறுதியாகப் பற்றிக் கொண்டு, அம்பினைத் தாமரை போன்ற கண்ணில் வைத்துக் குத்தி எடுத்துத் தெய்வச் சிரோமணி கண்ணில் பொருத்திஞர்.

115. முன் இருந்த கண்ணிலும் அழகான கண் தனக்கு வந்தமைக்கு மகிழாமல் உமாபதி இரண்டாவது கண்ணில் இருந்தும் குருதி வடியுமாறு செய்தார்.

'இதற்கு யான் அஞ்சேன்' உன் அருளால் கண்ட மருந்து இதற்கு உள்ளது.

116. சிவனுக்கு இடுக்கண் உண்டான நிலையில் என் உயிரையும் கொடுக்க வல்லேன்.

117. என்று கூறி, செருப்புக் காலால் இரண்டாம் கண்ணில் அடையாளம் வைத்துக் கொண்டு கூரான அம்பினால் தன் இரண்டாவது கண் முட்டையைப் பெயர்க்கும் போது சிவன் கருணை காட்டி,

118. கண்ணிற்குக் கண்ணினைப் பிடுங்கி அப்ப முயலும் கண்ணப்பனின் பக்திப் பெருக்கைக் கண்டமையால், கண்ணைப் பிடுங்க முற்பட்ட அம்பிற்குக் குறுக்கே கை வைத்துப் பிடித்துக் கொண்டு 'நில் ! நில் !' என்று கூறினார்.

119. பிரமன், விட்டுணு, முனிவர்கள், அட்டதிக்குப் பாலகர்கள் முதலானோர் சுற்றும் புகழ்பாடச் சிவலிங்கத்திலிருந்து வெளிப்பட்டுப் பனிமலைக் குமரியான பார்வதியின் கைபற்றித் திண்ணன் முன் தோன்றினார் சிவன்.

120. சிவகோசரா ! இப்பக்தனின் ஆதி அந்தமில்லா பக்தியைக் கண்டாய் அல்லவா ! இவன் உண்மையான பக்தன் அன்றோ! உனக்கு மன நிறைவுதானே இனி, என்றார் சிவன்.

121. இவ்வாறு பகர்ந்து குறுநகை செய்து வேடனையும் அந்தணனையும் அருகழைத்துக் கருணையுடன் உங்கட்கு வேண்டும் வரம் கேட்க என்றார்.

122. 'உன் முழுமையான கருணையைக் காட்டி உலகத்தின் மாயையைத் தெளியச் செய்து உங்கள் உலக ஆசையை ஒழித்து ஆசையின்மையாகிய குணம் கொடுத்து இவ்வுடம்பின் பாலுள்ள மமகாரத்தைப் போக்கும் வரம் வேண்டும்' என்றனர்.

123. இவ்வுலகத்தில் மனிதனில் இருக்கும் மனசாட்சி (அந்தராத்மா) எல்லாம் நீயே என்று வேதங்கள்

கூறிக்கொண்டிருக்கக் கேட்டும்கூட வேறு வரங்களை எவ்வாறு கேட்போம் உன் முழுமையான மனம் எனும் ஆகாசத்தில் எங்களைச் சேர்த்து இப்பிறப்பி லிருந்து எங்களைக் காப்பாற்றுக என்று வேண்டினர்.

124. 'இவன் வேடன் குரூற புத்தியுடைய குலத்தில் பிறந்தவன். என்றால் உன் வடிவைக் காட்டினாய். அதே போன்று இவனையும் பிறப்பு இறப்பு தவிர்த்து ஆட்கொள்ள வேண்டும்' என்றார் சிவகோசரியார்.

125. உன் விருப்பத்திற்கு மாறாக எங்களுக்கு விருப்பம் உண்டோ? எங்களை ஏன் கேட்க வேண்டும்! உன் விருப்பம் எதுவோ அவ்வாறே செய் சிவா!

126. ஆனந்தக் கடலில் என் மனம் மூழ்கியுள்ளது. அதனை அவ்வாறே மூழ்கியிருக்கச் செய்யும் வரம் கொடு.

127. இத்தகைய வரம் வேண்டி, அந்தணரும் திண்ணனும் நெடிது வீழ்ந்து, தூய மனத்துடன் தூயவர்களாய் இருக்க உலகத் தொடர்பான நிகழ்ச்சிகளில் அவர்கள் மனத்தைப் போகவிடாது அவர்களைத் தன் இதயத்தில் ஐக்கியப்படுத்திக் கொண்டார் சிவபெருமான்.

128. இப்பக்தர்களின் பக்தியைக் கண்டு தேவர்கள் பல்வகை ஒலிகள் செய்து ஆரவாரித்தனர்.

129. யாதவ அரசன் விதண்டாவாதம் செய்து இக்கதை யினைக் கேட்டு முக்தியடைந்தான்.

# துணைநூற் பட்டியல்


1. அருணாசலம், ப., பக்தி இலக்கியம்-ஓர் அறிமுகம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5, முதற்பதிப்பு 1973.

2. கைலாசபதி, டாக்டர் க., ஒப்பியல் இலக்கியம், பாட்டாளிகள் வெளியீடு, சென்னை 1978.

3. சித்பவானந்தனர், ஸ்ரீமத்., பக்தியோக விளக்கம், திருப்பராய்த்துறை, எல்மனூர் போஸ்ட், திருச்சி ஜில்லா.

4. சுந்தரமூர்த்தி, கு., (பதிப்பாசிரியர்) திருக்குறள் உரைத்திறன், 1981, உலகத் தமிழ் மாநாடு நினைவு வெளியீடு.

5. சுப்பிரமணிய முதலியார், சி. கோ., (உரையாசிரியர்) திருத்தொண்டர் புராணம், இரண்டாம் பகுதி, கோவைத் தமிழ்ச் சங்கம், கோயம்பத்தூர், இரண்டாம் பதிப்பு 26-1-1968.

6. திருக்கண்ணப்பநாயனூர் சரிதச் சுருக்கம், கோவைத் தமிழ்ச் சங்கம், கோயம்பத்தூர், 1939.

7. வரதராசன், மு., இலக்கியத் திறன், பாரி நிலையம், 59-பிராட்வே, சென்னை-1, 1965.

8. வரதராஜன், ஜி., (பதிப்பாசிரியர்) — திருமந்திரம், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-14, 1978.

9. வெள்ளைவாரணன், க., — பன்னிருதிருமுறை வரலாறு இரண்டாம் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1969.

10. இரத்தின நாயகர் சன்ஸ் பதிப்பு, பி., — ஸ்ரீமத் தாயுமான சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு, திருமகள் விலாச அச்சகம், சென்னை-1.

11. கழக வெளியீடு — தண்டியலங்காரம், 1973.

12. ,, — சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரப் பதிகங்கள், 1973.

13. ,, — திருநாவுக்கரசர் தேவாரப் பதிகங்கள், 1973.

14. ,, — திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரப் பதிகங்கள், 1974.

15. ,, — பதினொராந்திருமுறை, 1971.

16. தருமையாதீனப் பதிப்பு, — திருவாசகம், 1966.

17. ,, — ஒன்பதாம் திருமுறை, 1976.

18. தமிழ் வளர்ச்சிக் கழகம் — கலைக் களஞ்சியம். தொகுதி-6, சென்னை-5.

## *தொல்காப்பியத் தத்துவச் சிந்தனைகள் :*

தொல்காப்பியம் அக்காலத் தமிழர்களின் சமய, பக்தி நிலைகளைச் சுட்டுகின்றன. பொருள்கள் அனைத்தையும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூன்று வகையாகப் பகுத்துப் பேசுவார் தொல்காப்பியர்.

உயிர் வாழ்க்கைக்கு அமைந்த நிலமும், காலமும் 'முதற்பொருள்' என வழங்கப்பெறுகின்றன புல் முதல் மக்கள் முதலாகிய உயிர்ப்பொருள்களும் உயிரற்ற பொருள் களும் நிலமும் காலமுமாகிய முதற்பொருளின் சார்பாகத் தோன்றுவதால் அவை 'கருப்பொருள்' எனப்பெயர்பெற்றன மக்களின் அக, புற, ஒழுகலாறுகளை 'உரிப்பொருள்' என்றார். மக்கள் வாழும் நிலத்திற்கும் காலத்திற்கும் ஏற்ப அவர்களின் உள்ளத்து உணர்ச்சிகளும் செயல் முறைகளும் உருப்பெறுகின்றன மக்கள் வாழும் நிலத்தியல் பிற்கேற்ப அவர்தம் மனத்தியல் பாகிய தெய்வக் கொள்கையும், வழி பாட்டு முறைகளும் மலர்கின்றன இக்காரணம் பற்றியே தொல்காப்பியர் தெய்வத்தைக் கருப்பொருள்களுள் ஒன்றாக அமைத்துக் காட்டினார்.

காடுரை யுலகமாகிய முல்லை நிலத்தில் மாயோன் வழி பாடும், மைவரை யுலகமாகிய குறிஞ்சி நிலத்தில் சேயோன் வழிபாடும் தீம்புனலுலகமாகிய மருத நிலத்தில் இந்திரன் வழிபாடும், பெருமணலுலகமாகிய நெய்தல் நிலத்தில் வருணன் வழிபாடும் தோன்றி நிலைபெற்றன இதை,

*'மாயோன் மேய காடுறை யுலகமுஞ்*
*சேயோன் மேய மைவரை யுலகமும்*
*வேந்தன் மேய தீம்புன லுலகமும்*
*வருணன் மேய பெருமண லுலகமும்*

*முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்*
*சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே''(1)*

என்ற நூற்பாவால் தெளிவுபடுத்துகிறார்.

முல்லை நிலக் கோவலர் தம்மால் மேய்க்கப்பெறும் ஆனிரைகள்பால் தருதல் வேண்டிக் காயம்பூ வண்ணனாகிய கண்ணனைப் பாடிக் குரவையாடினார். குறிஞ்சி நிலத்துக் குரவர், தெய்வமணமாகிய வெறியினையறியும் சிறப்புடைய வேலனை அழைத்து, வெறியாடச் செய்து, முருகனை வழிப் பட்டனர். மருத நிலத்து வாழும் உழவர். நாடு செழிக்கவும், காமச்சிறப்பு நிகழவும் வேண்டி அழகுக்கும் தேவர்க்கும் இறைவனாகிய இந்திரனுக்கு விழாவெடுத்து வணங்கினர். நெய்தல் நிலத்துப் பரதவர், வலைவளஞ் சிறக்க கடற் கடவுளாகிய வருணனைப் பரவினர் நானில மக்களின் இவ்வழிபாடுகளேயன்றி வெற்றிவிளைக்கும் கொற்றவை வழிபாடும் தமிழர்களால் பண்டைக் காலத்தில் மேற் கொள்ளப்பட்டது. மேலும், முருகவேள் வழிபாடு, மாயோன் சிறப்பு, கொற்றவையைப் பரவுதல் என்ற செய்திகள் தொல் காப்பியத்தில் காணலாம். இவைமுறையே.

*''வெறியறி சிறப்பின் வெள்வாய் வேலன்*
*வெறியாட் டயர்ந்த காந்தளும்'' (2)*

*''மாயோன்மேய மன்பெருஞ் சிறப்பின்*
*தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்''(3)*

*''மறங்கடை கூட்டிய குடிநிலை, சிறந்த*
*கொற்றவை நிலையும் அத்திணைப்புறனே'' (4)*

என்ற பாடல்களான் விளக்குகிறார்.

தெய்வத்தினை நில வகையால் வகுத்துக் கூறிய தொல்காப்பியர் நிலப்பாகுபாடின்றி எல்லா நிலத்திற்கும் உரிய நிலையில், அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்த முழுமுதற் பொருளைக் 'கடவுள்' என்ற பொதுப் பெயரால் சிறப்பிக்கிறார். நிலவகையால் பல தெய்வங்கள் கொள்ளப்படினும் எல்லாத் தெய்வங்களும் ஒன்றே என்ற உண்மையைத் தமிழ் மக்கள் தெளிவாக அறிந்திருந்தனர்.

*''ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்*
*கல்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்*
*அவ்வவை மேய வேறுவேறு பெயரின்*
*எவ்வயி னோயும் நீயே'' 0*

என்ற பரிபாடற்பகுதியால் இவ்வுண்மையைத் தெளியலாம்.

## உருவ வழிபாட்டு முறை :

மாயோன், சேயோன் என்று தெய்வங்கட்கு நிறம்பற்றிப் பெயர் கூறப் பெறுவதிலிருந்து இத் தெய்வங்கட்குத் திருவுரு வமைத்து வழிபடும் வழக்கமும் தொல்காப்பியர் காலத்திற்கு முற்பட்ட தொன்மையது போதரும். போரில் வீரச்செயல் புரிந்து மறைந்துபோன வீரர்கட்குக் கல்' நட்டு வழிபடும் வழக்கம் இருந்தது இதைத் தொல்காப்பியம்,

*''காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்*
*சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தல் என்று*
*இருமூன்று மரபின் கல்லொடு புணர்''*

என்று கூறுகிறது,

*ஊழில் நம்பிக்கை :*

தொல்காப்பிய கால மக்கள் ஊழில் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். இவர் ஊழை 'பாலது ஆணை' என்ற தொடரால் வழங்குவர். ஒருவர் செய்யும் நல்லிதை தீவினைகளை அவரவர்களே நுகர்தல் வேண்டும் என்பது இறைவன் நியதி. இதுவே ஊழ் என்பது பால், வகை, நியதி, விதி என்ற சொற்கள் யாவும் ஊழினையே குறிக்கும் இறைவன் இருவினையின் மாட்டுத் தன் ஆணையை வைத்து உயிர்கள் வினைப்பயனை நுகருமாறு செய்வன், இதனால்தான் இறைவள் 'பால்வரை தெய்வம்' எனக் குறிப்பிடப் பெற்றான்.

ஒருவனும் ஒருத்தியும் எதிர்பட்டுக் காதல் கொள்ளக் காரணம் ஊழ்வினையே என்று பண்டையோர் நம்பினர். ஊழ்வினைதான் அவர்களைச் சந்திக்கச் செய்கின்றது என்று கருதினர்.

*"ஒன்றே வேறே என்றஇரு பால்வயின்*
*ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்*
*ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப" 0*

என்ற நூற்பாய் பகுதியினால் இதனை அறியலாம்.

ஒன்றுபடுத்துவதும் வேறுபடுத்துவதும் எனப் பால் (ஊழ்) இருவகைப்படும் என்பதும், அவற்றுள் ஒன்றுவிதத்தலால் உயர்ந்த பாலின்வழி நிகழும் இறைவனது ஆணையால் உருவும் திருவும் முதலிய நலங்களால் ஒத்த தலைவனும் தலைவியும் ஓரிடத்தில் சந்திப்பார் என்பது இதன் பொருளாகும். இதனையே வள்ளுவர் ஆகூழ், போகூழ் என்று குறிப்பிடுவர்.

இதனால் தொல்காப்பியர் காலத்தில் சமய நிலையும், தெய்வக் கருவும் சமயங்கட்கு அடிப்படையான உயிர், உடல், ஊழ்வினைஎன்ற கொள்கைகளும் இருந்தன எனஉணரலாம்.

*முப்பொருள் உண்மை :*

தொல்காப்பியர் காலத்திலும் அவருக்கு முன்னும் மக்கள் உலகம் உயிர், இறை என்ற முப்பொருள்களின் உண்மையை அறிந்திருந்தினர். இவற்றை ஆயும் மெய்யுணர்வும் அவர்களிடமிருந்து இம் மெய்யுணர்வு பெற்றோரே வீடுபேறு அடைதல் கூடும்

**உலகின் உண்மை :**

உலக இயல்பை ஆசிரியர்,

*"நிலம்தீ நீர்வளி விசும்பொ டைந்துங்*
*கலந்த மயக்கம் உலகம் ஆதலின்"*

என்று பகர்வர் நிலமும் தீயும் நீரும் காற்றும் வானும் எனும் ஐம்பெரும் பொருட்களின் கலவையேஉலகம் கலத்தல் என்பது முத்தும் பவளமும் நீலமும். மாணிக்கமும் விரவினாற் போன்றது. மயக்கமாவது பொன்னும, வெள்ளியும் செம்பும் உருக்கியொன்றாதல் போல்வது இங்கு உலகம் என்பது உலகினையும் உலகினுட் பொருள்களையும் அடக்கி நிற்கின்றது முத்தும் மணியும் கலந்தாற்போல் உலகம் நீர் தீ வளி ஆகாயம் என விரவியும், பொன்னும், வெள்ளியும் செம்பும் உருக்கி யொன்றானாற்போல் உலகினுட் பொருள்கள் வேற்றுமைப்படாதும் நிற்கும் தொல்காப்பியர் கோட்பாடு நாடோறும் உலகியற் பயிலும் நமது அறிவுக்கு பொருத்தமாயுள்ளது.உலக பொருட்கள்யாவும் அடுத்தடுத்து உருமாறி வருவனவேயன்றி, அவை இல்லாத வெறும்

பாழாதல் என்றும் இல்லை என்ற மெய்யுரையுடன் தொல் காப்பியர் கருத்தும் ஒத்துப்போகிறது.

*உயிரின் உண்மை*

உயிர்கள் என்றும் அழிவற்றன என்பதே தமிழர்தம் கொள்கை உயிர்கள் என்றும் நிலைபேறுடையனவாதலின் அவற்றை 'மன்னுயிர்' என வழங்குதல் மரபு இம்மரபினைத் தொல்காப்பியர் 'தொல்லுயிர்' எனச் சுட்டுவர் உயிர் எத்தன்மைத்து என்று வினயவழி உணர்தல் தன்மைத்து என்றல் செவ்வன் இறையாம், என்பர் சேனாவரையர், இதனால் உணரும் தன்மையுடையது உயிர் என்பது தெளி வுறும். உயிர்களது உடம்பின்கண் அமைந்த உறுப்புக்களின் குறைவு மிகுதிகளுக்கேற்ப அவற்றின் உணர்ச்சி வாயில்கள் வேறுபடும். இவ்வுலக உயிர்கள் ஓரறிவுடையன முதல் ஆரறிவுடையன வரையில் ஆறுவகையாகப் பகுக்கப் பெறு வதைத் தொல்காப்பியம் குறிக்கிறது. இதனை,

*" ஒன்றறி வதுவே உற்றறி வதுவே*
*இரண்டறி வதுவே அதனொடு நாவே*
*மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே*
*நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே*
*ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே*
*ஆறறி வதுவே அவற்றொடு மனனே*
*நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே" O*

O மரபியல் நூற் - 26(இளம்)

என்ற நூற்பாவால் அறியலாம். சிற்றறிவுடைய உயிர்கள் தீவினைக்கு ஏதுவான மலத்தால் மறைப்புண்டு கிடந்து இறைவனது அருளால் பிறவிக்கு வருகின்றன. அங்ஙனம வருங்கால் முதலில் தொடுதல் உணர்வு தோன்றுவதற்கு இடம் தரும் புல், மரமாகப் பிறக்கின்றன; அதன்பின் சிறிது அறிவு விளக்கம்பெற்று தொடுதல், சுவையுணர்தல் கொண்ட நத்தை, கிளிஞ்சல் முதலியனவாய்ப் பிறக்கின்றன; அதற்குப் பிறகு சிறிது அறிவு மிகுந்து அவ்விரண்டோடு மூக்குணர்வு தோன்றுதற்கேற்ற கறையான், எறும்பு முதலியனவாகப் பிறவி எடுக்கின்றன. அதன் பின் மேலும் அறிவு மிகுந்து அம்மூன்றோடு கண்ணறிவும் தோன்றுதற்கேற்ற நண்டு, தும்பி முதலியனவாகப் பிறக்கின்றன. பின் இன்னும் அறிவு முதிரபெற்று அதனுடன் செவியறிவும் புலனாதற்கேற்ற விலங்குகளும் மக்களுமாகப் பிறக்கின்றன, பின் அவ்வைந் துடன் மன அறிவுடன் ஆறறிவுடைய மக்களாய்த் தோன்று கின்றன. இக்கால விஞ்ஞானிகள் இதை படிமுறை வளர்ச்சிக் கொள்கையில் அடக்குவர்

### கடவுள் உண்மை:

பாசங்களினின்று நீங்கிய இறைவன் உள்ளதை

'வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூலாகும்'

என்பர் தொல்காப்பியர்.

எல்லாத் தத்துவங்களையும் கடந்து காணவும் கருதவும் முடியாத முழுமுதற் கடவுளைக் காணவும் கருதவும் எளிதாகும்படி உருவம் கொடுத்து வழிபட்டனர் பண்டைத் தமிழர் இதனை,

"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்று
கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருமே"

என்று பகவர் தொல்காப்பியர்

# திருச்சதகம் மகரும் சிவதத்துவம்

தொன்மைச் சமயங்களுள் ஒன்றாகத் திகழ்வது சைவம். அத்தத்துவம் நாட்டின் பல்வேறு பகுதிகளில் பலவாறு அழைக்கப் பெற்றது. காச்மீரப் பகுதிகளில் நிலவிய சைவத்திற்கு 'காச்மீர சைவம்' என்றும், கர்நாடகம் மற்றும் ஆந்திரப் பகுதிகளில் நிலவி வந்த சைவத்திற்கு 'வீரசைவம்' என்றும், தமிழகத்தில் பின்பற்றப் பெற்று வந்த சைவத்தை 'சைவ சித்தாந்தம்' என்றும் இயம்புவர்.

தமிழகத்தில் பண்டு தொட்டு நிலவி வந்த சைவ சித்தாந்த தத்துவம் காலம் காலமாக சைவ சித்தாந்திகளால் விளக்கப் பெற்று வந்துள்ளன.

முதன் முதலில் சைவசித்தாந்தக் கொள்கைகளை விளக்கமாகவும் தத்துவரீதியாகவும் திருமூலர் தம்முடைய திருமந்திரத்தில் கூறியுள்ளார்.

ஒன்பது தந்திரங்களில் சைவக் கொள்கைகளின் முக்கியமான மூன்று தத்துவங்களான 'பதி, பசு, பாசம்' என்றவற்றை விளக்கமாகக் கூறுகிறார்.

'பதி' யாகிய பரமசிவனையும், 'பசு' ஆகிய உயிர் அல்லது ஆத்மாவையும் 'பாசம்' ஆகிய ஆணவம், மாயை, கன்மம் என்ற மும்மல பந்தத்தையும் தெளிவுறக் கூறி, அனாதியாகவே மும்மலத்தால் கட்டுண்ட உயிர், அத்தளைகளிலிருந்து உயிர் விடுப்பட்டுப் பரம்பொருளாம் பரமசிவனை அடையும் வழிமுறைகளைக் கூறுகிறது திருமந்திரம்.

இதற்குப் பின் இச் சிவதத்துவத்தை பக்தியோடும் ஞானத்தோடும் தத்துவக் கொள்கைகளோடும் பகர்பவர், மாணிக்க வாசகர். அவர்தம் 'திருவாசகம்' சிவ இறைத் தத்துவக் கொள்கைகளையும் மனித ஆன்மா மீட்சிபெற்று சிவமுக்தி பெறும் வழியையும் அழகுபடக் கூறுகிறது அதில் 'திருச்சதகம்' என்பதில் நூறு பாடல்களில் சைவசித் தாந்தக் கொள்கைகளையும், பக்தி தத்துவத்தையும் நெஞ்சை அள்ளுமாறு பகர்கிறார்.

மன, மொழி, மெய்கள் என்ற முக்கரணங்களும் ஒருமுகப் பட்ட நிலையில் சிவனை வழிபடுதலே சிறந்த பக்தி தத்துவம் என்கிறார் மாணிக்கவாசகர்.

*"மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்*
*துன்விரை யார்கழற்கென்*
*கைதான் தலைவைத்துக் கண்ணீர்*
*ததும்பி வெதும்பி யுள்ளம்*
*பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி*
*சயசய போற்றி யென்னுங்*
*கைதான் நெகிழ விடேனுடை*
*யாயென்னைக் கண்டுகொள்ளே"*

—*திருச்சதகம்*-1

பக்தி தத்துவத்தில் மிக இன்றியமையாதது மன மொழி மெய் மூன்றும் ஒன்றாக்கல் அவசியம் அவற்றை ஒருமுகப் படுத்தி சிவனைத் தொழவேண்டும் என்கிறார் மாணிக்க வாசகர்.

சைவ சித்தாந்தத்தில் சிவ அருளே மனித உயிர்களைக் காக்கவல்லது என்பது ஒரு தத்துவக் கொள்கை. இதை மாணிக்கவாசகர் கீழ்வருமாறு உரைப்பார்.

*'நாடகத்தால் உன்னடியார்*
*போல் நடித்து நானடுவே*
*வீடகத்தே புகுந்திடுவான்*
*மிகப்பெரிதும் விரைகின்றேன்*
*ஆடகச்சீர் மணிக்குன்றே*
*இடையறா அன்புக்கென்*
*ஊடகத்தே நின்றுருகத்*
*தந்தருள்ளம் உடையானே'' -11*

சிவ அருள்பெற அவன்பால் பக்தி செலுத்த வேண்டும். அவனருளால் தான் மும்மலங்களாகிய ஆணவம், கன்மம் மாயை என்பதை ஆன்மா விலக்கி முக்திபெற வியலும் அவனருள் பெற அவனை முழுமனதோடு தியானிக்க வேண்டும் அதுபோதே சிவ அருள் சிவன் மீது படும். அந் நிலையில் சிவனாகிய உயிர் பந்தபாசங்களிலிருந்து பிறவி களிலிருந்து விடுப்பட்டு முக்திபெறுதலாம் சிவ அருள் பெறும்

மாணிக்கவாசகர் சிவனின் பரத்துவதத்துவத்தை அவனின் எல்லையற்ற தன்மையை மிகவும் விரிவாகப் பேசுகிறார்.

*''வானாகி மண்ணாகி*
*வளியாகி ஒளியாகி*
*ஊனாகி உயிராகி*
*உண்மையுமாய் இன்மையுமாய்க்*

*கோனாகி யானெனாதன்*
*றவரவரைக் கூத்தாட்டு*
*வானாகி நின்றாயை*
*யென்சொல்லி வாழ்த்துவேன்'' —15*

ஐம்பெரும் பூதங்களும், ஞாயிறு திங்களும், உயிரும் ஆகிய எட்டும் இறைவனாம் சிவனுக்கு உயிர் எனச் சைவம் பகரும் இதனை. "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எரியுங்காற்றுமாகி, "அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி'' எனும் நின்ற திருதாண்டகத்தால் அறியலாம் இவ்வெட்டும் அல்லாது உலகம் என ஒன்று இல்லாததினால், யாவுமாயுள்ள இறைவன் வியாபக நிலையை கூறுகிறது இவ்வெட்டையும் மணிவாசகர் இப்பாடலுள் ஒருசேரக் கூறுகிறார்

பாசஞான பசுஞானங்களால் அறியப்படாது பதி ஞானம் ஒன்றாலேயே அறியப்படுதல் சிவனின் சிறப்பு என்பதனால் உண்மையுமாய் இன்மையுமாய் என்றார் வான் முதலிய பூதங்களும் உயிரும் எனும் அறிவில் பொருள்களும். அறிவுடைப் பொருட்களும், கலந்த உலக உருவமாக விளங்குவோன் சிவபெருமான் எனில், அவ்வுலகை இயக்கும் பேராற்றல் படைத்த தனிமுழு முதல்வன் அவனே என்பதன்றி வேறொன்று இன்மையின் 'கோனாகி' என்றார்

'யான்' என்பது அகங்காரம் என்றும், 'எனது' என்பதை மமகாரம் என்றும் பகர்வர் இதைச் சைவசித்தாந்தம் அகப்பற்று, புறப்பற்று எனவும் இயம்பும். இவ்விருவகைப் பற்றுக்களை விட்ட நிலையில்தான் 'வீடு' எனும் மோட்சம் - சிவ தரிசனம் கைவரப்பெறும்·

யான், எனது எனும் இவ்விருவகைப் பற்றுக்களாலும் உயிர் களிக்கும் இயல்புடைமை நோக்கி அந்நிலையைக் கூத்தாடல் எனவும், இறைவன் படைத்தல் முதலிய ஐம் பெருந் தொழில்களுள் ஒன்றாகிய மறைத்தல் தொழிலால் உயிர்களோடு உடனாகி நின்று, வினைப்பயன்களை நுகர் விக்கிறான் என்பது சைவ சாத்திரத் தத்துவமாகலின் 'கூத்தாட்டு வானாகி' என்று கூறுகிறார். ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே என்றும் இங்கு நினைவு கூரத் தக்கது.

முதல்வனாகிய சிவன் உலகத்தோடு கலந்திருப்பதால் உலகெலாமாகி எனவும், அவ்வுலகத்திற்குரிய விகாரங்கள் தன்னைப் பற்றாவாறு இருத்தலின் வேறாய் எனவும் உயிர்க் குயிராக நின்று வினைப்பயன் நுகர்ச்சியில் தலைப்படுதலால் உடனாகி எனவும் தத்துவக்கருத்துகள் மிளிரக் கூறுகிறார் மாணிக்கவாசகர் இம்மூன்று தத்துவக் கோட்பாடுகளை இப்பாடலில் தெளிவாகக் கூறுகிறார்

நமச்சிவாய தத்துவத்தின் மகிமையை இப்பாட்டில் உணர்த்துகிறார்

*" போற்றியோ நமச்சி வாய*
*புயங்கனே மயங்கு கின்றேன்*
*போற்றியோ நமச்சி வாயா*
*புகலிடம் பிறிதொன் றில்லை*
*போற்றியோ நமச்சி வாயா*
*புறமெனைப் போக்கல் கண்டாய்*
*போற்றியோ நமச்சி வாயா*
*சயசய போற்றி போற்றி"*

திருவைந்து எழுத்தை நகாரம் முதலாக ஓதுதல் சைவ சித்தாந்த வழக்கு. சிகாரம் முதலாக ஓதுதல் ஆகம வழக்கு திருவாசகம் தமிழ்மறை ஆதலின், இதன் தொடக்கத்தில் நமச்சி வாய வாழ்க' என்கிறார். ஏனைய மந்திரங்கள் பிரணவத்தோடு எண்ணப்படும். சிவபெருமானைப் பற்றிய இத்திருவைந்தெழுத்து மந்திரம், பிரணவம் இன்றியும் எண்ணப்படும் காரணம்திருவைந்தெழுத்திற்கும்பிரணவத்து க்கும் வேறுபாடு இல்லை என்பதால்பிரணவம் ஆகிய ஓம் என் பதன் விளக்கமே திருவைந்தெழுத்து என்பர் அவ்விரெண்டும் முறையே தொகையும் விரியுமாகக் கொள்ளப் படுகிறது. ஓம் நமச்சி வாய போற்றி என்பதற்குப் பிரணவத்தின் வேறு பாடில்லாத திருவைந்தெழுத்தின் வாச்சியப் பொருளாக உள்ள சிவபெருமானே காத்தருள்க என்பது பொருள்.

திருவைந்தெழுந்தின் தூல சூக்கும காரணமுதலிய நிலைகளும், நிற்குமுறை, ஓதுமுறை முதலிய இயல்களும், பிறவும் திருமந்திரம் முதலிய நூல்களும், உபதேச முறையும் தெளிவாகக் கூறுகின்றன தத்துவ உண்மைகளைத் தன்னுள் அடக்கி நிற்கும் திருவைந்தெழுத்தைப் பிறனவத்துடன் பல முறை ஓதுவதால் அழிவில் இன்பப் பேறு உண்டாகிறது என சைவசாத்திரங்கள் பதினான்கும் பகர்கின்றன.

சைவதத்துவம் உலகத்தில் பற்றுக்களை உண்டாக்கும். இவ்வுடல் வாழவை ஒதுக்கி சிவப்பற்றை உயிர்கள் பெற உடற்பற்றையும், உலகபற்றையும் விடவேண்டும் என்று கூறுகிறது. அதுவே முக்திக்கு வழி எனவும் கூறுகிறது

*''சங்கரா போற்றி மற்றோர்*
*சரணிலேன் போற்றி கோலப்*
*பொங்கரா அல்குற் செய்வாய்*
*வெண்ணகைக் கரிய வாட்கண்*

*மங்கையோர் பங்க போற்றி*
*மால்விடை யூர்தி போற்றி*
*இங்கிவாழ் வாற்ற கில்லேன்*
*எம்பிரான் இழித்திட் டேனே''*

சிவன் அழிவிலா இன்பம் தருவபன் அதனால் அவனையே சரணடைய வேண்டுமென இத்திருபாடல் சைவ தத்துவம் பகர்வதை உறுதிப்படுத்துகிறது மற்றைத் தேவர் முனிவர் முதலிய அனைவர்க்கும் முடிவான புகலிடமாக உள்ளவன் சிவபெருமானே என்பதை மறையாகமங்கள் மற்றும் சைவ தத்துவங்கள் பகர்கின்றன என்பதை இப்பாடல் அடியொற்றிச் செல்கின்றது.

*''ஒருவனே போற்றி ஒப்பில்*
*அப்பனே போற்றி வானோர்*
*குருவனே போற்றி எங்கள்*
*கோமளக் கொழுந்து போற்றி*
*வருகவென் றன்னை நின்பால்*
*வாங்கிட வேண்டும் போற்றி*
*தருக நின் பாதம் போற்றி*
*தமியனேன் தனிமை தீர்த்தே''*

இறைமை இலக்கணம் எல்லாவற்றினுஞ் சிறந்தது. ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்ற திருமூலர் வாக்கு இறண்டற்ற ஒன்றேயான முழுமுதல்வனாகச் சிவபெருமான் இருக்கிறான். இது அவனின் முழுமுதல் தன்மைத் தத்துவத்தைக் காட்டுகிறது மேலும் சிவனோ-டொக்கும் தெய்வம் தேடினும் இல்லை என்பதால் மறையாகமங்களின் ஆய்வும் அனுபவ ஞானிகளின் உபதேசமும் சிவபெருமான் ஒருவனே கடவுள் இலக்கணம் எனும் தத்துவத்தை யாவும் பெற்றவன் என்பது தெளிவுறும்.

மாயா காரியமாகிய தநுகரணபுவன போகங்களில் அகப்படும் உயிர்களை அவற்றின் படித்தரங்கட்கு ஏற்ப விடுவித்துச் சிவன் தன் பக்கலில் ஏற்பன் எனவும் சிவ அருள் தத்துவத்தை பகர்வர்.

# உபநிடதங்கள் பகரும் தத்துவம்

இந்திய நாட்டின் கருத்திற்கும் பண்பாட்டிற்கும் அடிப்படையான ஊற்றுக்களாக உபநிடதங்கள் அமைகின்றன இவை வேதங்களின் ஈற்றுப்பகுதிகளாகி வேதக்கருத்துக்களை விளக்கி நிற்கின்றன. அதனால் இவை வேதாந்தம் எனப்படுகின்றன.

உபநிடதம் என்ற சொல், சொல்லி லக்கணபடி 'ஈடுபாட்டுடன் நெருங்கி அமர்தல்' எனப் பொருள்படும் அச்சொல்லமைப்பு 'ஷத்' - அமர்; 'உப்' - நெருங்கி, 'நி' - ஈடுபாடு எனப் பொருள்படும் 'அறியாமையை அழிப்பது' 'பிரமத்திடம் கொண்டுசேர்ப்பது' என்ற பொருட்களில் உபநிடதம் என்ற சொல் சங்கரரால் விளக்கப்பெற்றது.

பிராமணங்களின் ஈற்றுப் பகுதிகளாக உபநிடதங்கள் அமைகின்றன. சமயச் சடங்குகள் இயற்றும் முறை குறித்த வழிகளை பிரமாணங்கள் வகுக்கின்றன. பரம்பொருளைக் குறித்த போதனைகளை உபநிடதங்கள் போதிக்கின்றன

உபநிடதம் என்று பெயர் பெறுவன இன்று இருநூற்றிற்கும் மிகுதியாயுள முக்திகா என வழங்கும் உபநிடதம், நூற்றெட்டு உபநிடதங்களின் பெயர்களைக் குறிக்கிறது இவற்றுள் சிலவே தொண்மையும் உயர்ந்த கருத்துகள் கொண்டவையுமாகும் அவற்றுள் சில, ஈசாவாஸ்யம், கேன, கதா, பிரஸ்ன, முண்டக, மாண்டூக்கிய, தைத்ரீய, ஐதரேய, சாந்தோக்ய, பிருகதாரண்யக, கௌஷீதகி, மைத்ராயனீய, ஸ்வேதாஸ்வதர. இவற்றுள் பிருகதாரண்யகமும். சாந்தோக்யமும் மிக முக்கியமானவை இவற்றின் காலம், மற்றும் இயற்றியோர் பற்றித் தெளிவாக அறியக்கூடவில்லை. இச்சிந்தனையாளர்களுள் யாக்ஞவல்கியர் உத்தாலகர் போன்ற சிலர் முதன்மையாக விளங்குகின்றனர்.

# உயரிய, தாழ்ந்த ஞானங்கள் அல்லது பர, அபர ஞானம்

பர, அபர என இருவகையாக ஞானம் உபநிடதங்களால் பிரிக்கப்படும். அனுபவ வழி எழும் அறிவியல் கொள்கைகளும் கலைப் பிரிவுகளும், புனித அறிவினால் குறிக்கப்பெறும் அழியும் இயல்புடைய பொருள்களும், நுகர்வுகளும் ஆகியவை அபர ஞானத்துள் அடங்கும். நான்கு வேதங்களும் அபர ஞானத்துள் அடங்கும் என உபநிடதங்கள் பகர்கின்றன. நாரதர் முற்றுமுணர்ந்தவராயினும் சனத்குமாரரிடம் அறிவுபெற விரும்புகிறார். சனத்குமாரர், நாரதருடைய அறிவு அனைத்தும் பெயரளவில் அமைந்துள்ளதாகக் கூறுகிறார். அழியாதது பற்றிய (அக்ஷர) அறிவே உயரிய ஞானம். இது 'கேளாதன எல்லாம் கேட்பிப்பது; சிந்திக்கப் பெறாதனவெல்லாம் சிந்திக்கச் செய்வது; 'அறியாதன வெல்லாம் அறியச் செய்வது; மேலும் இது 'அடிநிலை அறிவு' எனவும் விளக்கப்படுகிறது.

# பிரமமும் ஆன்மாவும்

பிரமம், ஆன்மா எனும் இருசொற்பொருளையும் அவை உணர்த்தும் கருத்துக்களையும் அறிந்தாலன்றி உபநிடதங்களை நாம் அறிய இயலாது. இந்திய மெய்பொருளியில் எனும் அமைப்பு முழுவதையும பிரமம், ஆன்மா என்ற இருதூண்கள் தாங்குவனவாகச் சொல்லப்பெறுகிறது.

பிரமம் என்ற சொல் முதலில் பிரார்த்தனை பேச்சொலி என்று பொருள்பட்டிருத்தல் வேண்டும் இச்சொல் பிருஹ்' என்ற வேரின் அடியாகப் பிறந்தது. இதன் பொருள் உடைத்துக்கொண்டு வெளிப்படுதல், வளர்ச்சியுறுதல் என்பன.

பிரமம் என்ற சொல் பிரபஞ்சத்தின் அடிநிலை அல்லது ஆதாரம் அல்லது உள்ளன அனைத்திற்கும் ஆதாரம் என்ற பொருளைப் படிப்படியே தருவதாயிற்று. மேலும் பிரமம் பிரபஞ்சமாக வெளிபட்டுத் தோன்றுவது என்றும், பிரபஞ்ச வளர்ச்சியின் பிறப்பிடம் என்றும் பொருள்தருவதாயிற்று. ஆன்மா, முதலில்மூச்சு என்ற பொருள்தந்துப்பின் உயிருள்ள பொருளின் ஆன்மா எனப் பொருள் தந்து இறுதியில் மனித ஆன்மா எனப் பொருள்தந்தது. ஆன்மா, பிரமம் ஆவான். உண்மை ஆன்மாவும் பிரமமும் ஒன்றே இவ்விரண்டும் ஒரே தன்மையன. இவ்வொருமைக் கொள்கை, உலகிற்கு உபநிடதம் வழங்கிய பேருண்மையாகும். மெய்பொருளில் முக்கியமான கேள்விகளாகிய ஆன்மா யாது? பிரமம் யாது என்ற கேள்விகள் சாந்தோக்கிய உபநிடதத்தில் அமைக்கப் பெறுகின்றன சில இடங்களில் பிரபஞ்ச மூலத்தைப் பற்றியும் ஆன்மா என்ற சொல் ஆராயப் பெறுகிறது மனிதனின் ஆன்மாவை ஆராயும் இடங்களில் பிரமம்என்ற சொல் ஆளப் படுகிறது அஸ்வபதி கைகேய என்பவர் ஆறு பிராமணர்கட்குச் செய்த போதனையில் பிரபஞ்சத்தின் உயிர்நிலையினை வைஸ்வானர ஆத்மன் என்பர், பிருகு முனு ஆன்ம இயல்பினை ஆராய்வதற்காக அதனை மூடும் உறைகளைப்பகுத்து காண்கிறார் இப்பகுப்பில் குறிக்கப்படும் சொல் பிரமம் எனப் படும் ஆகவே உபநிடதத்துவ ஞானிக்கு பிரமம், ஆன்மா என்ற சொற்கள் அகத்தும், புறத்தும் உள்ள ஒரே உள் பொருளைக் குறிக்கின்றன. அவர்கள் பிரபஞ்சத்தினது

மூலத்தை ஆய்ந்து உண்மையான ஆன்மாவை அறிந்தனர் அது இரண்டல்லாத ஒன்றேயான உள்பொருள் எனக் கண்டனர். இவ்வான்மாவே பல்லுயிர்களாவும், பல உலகுகளாகவும் தோன்றுகிறது

பிரபஞ்சத்தின் ஆதாரம் எது என்பதுபோல ஆன்மாவின் உண்மை இயல்பும் எது என வினவப்பட்டது. இதற்கு அவர்கள் உள்பொருளின் பருமைத் தோற்றங்களிலிருந்து அவற்றின் நுண்ணிய கூறுகளுக்கு வளர்த்துச் சென்று உண்மையைக் கண்டனர். இதற்கான உபநிடதக் காட்டு:-

ஜனகன் எனும் அரசன் நிகழ்ந்த மெய்ப்பொருளியல் தருக்கமொன்றில் 'கார்கி' எனும் அம்மையார், ஞானியாகிய யாக்ஞவல்கியரை யாவற்றையும் தாங்கும் பொருள் எது என்று கேட்டார். இவ்வுலகு எதைக்கொண்டு ஆக்கப் பெற்றது? இதன் பாவும், இழையும் யாவை? இவற்றிற்குப் பல விடைகளைப் பகர்கிறார் யாக்ஞவல்கியர் கேட்போனைக் கருத்து வகையில் மெல்ல மெல்ல உயரிய உலகுகளுக்கு அழைத்துச் செல்கிறார். இறுதியில் கார்கி இடத்தினைத் தாங்குவது யாது? என்று கேட்டபோது, 'அழிவற்றது' [அக்ஷரா] இடத்திற்கு ஆதாரம் என்றார் மற்றொருவர் உத்தாலகர் யாவற்றையும் உள்ளிருந்து கட்டுப்படுத்துவது எது? என்று கேட்டார். அழகான பகுதிகளடங்கிய ஒரு குறிப்பில், யாக்ஞவல்கியர், "யாவற்றிற்கும் பிரபஞ்சப் பொருளுக்கும், தனிப்பொருளுக்கும் அடிப்படையாவது யாதென விளக்குகிறார். அவ்வடிப்படையை பிரபஞ்சமும் தனிபொருளும் அறியமாட்டா. ஆனால் அவற்றை உள்ளிருந்து கட்டுப்படுத்துவோன்' அக ஆட்சியாளன் ஆவான். அவ்வாட்சியாளனே மனிதனது அழிவற்ற ஆன்மா என்றார். ஆன்மா யாவற்றிலும் தங்கினாலும் அவன் அவற்றிற்கு அயலானவன் எவற்றாலும் அறியபடாதவன்

அவனது உடலாக அனைத்தும் அமைந்தாலும், உள்ளிருந்து அனைத்தையும் அவன் கட்டுப்படுத்துகிறான்: அதுவே ஆன்மா. அக ஆட்சியாளன் அழியாதவன் என விளக்குகிறார்

பிரமத்தின் இயல்புகளைக் குறித்துப் போதிக்குமாறு பிருகு முனிவர் தனது தந்தையாகிய வருணனை வேண்ட அவர் உள்பொருளைக் குறித்த ஒரு வாய்பாடு தருகிறார் பிருகுவையே தவநெறி நின்று உண்மையைக் காணுமாறு கூறுகிறார். எதனினின்று இவையனைத்தும் தோன்றுகின்றனவோ தோன்றின அவை எதனால் வாழ்கின்றனவோ பிரியும்போது எதனுள் இடம் பெறுகின்றனவோ அதனை அறிய ஆவல் வேண்டும். இவ்வாறு அறியப்பெறும் அதுவே 'பிரமம்' ஆகும். பிருகு இதைக்கொண்டு உண்மையினை ஆராய்கிறார்.

முதலில், உணவு வாழ்விற்கு இன்றியமையாதது என்பதைத் தேர்ந்தார். ஆனால் விரைவில் உணவினால் அமையும் உடல் உயிருக்குக் கூடென்றும், உடலைச் செலுத்தும் உயிராற்றல் உள்ளே உள்ளது என்றும் கண்டார் இவ்வுண்மையும் பிருகுவிற்கு மனநிறைவைத் தரவில்லை மேலும் ஆய்ந்ததில் வாழ்வின் ஆதாரமாக 'மனம்' அமைவதை அறிந்தார். அவ்வாய்வினைத் தொடர்ந்ததில் மனமும் ஒன்றினின்று ஒன்று தோன்றுவதே என்றும் கண்டார். இப்பொழுது அறிவு நிலையில் விழிப்புறுதலே-உணர்வுறுதலே முடிவான உள்பொருள் என்று தெரிந்தார் பொருள் முதல் கொள்கை (Materialism) உயிராற்றல் கொள்கை (Vitalism) உள்ளமே முதல் எனும் கொள்கை (Mentalism) ஆகிய இவற்றை ஆய்ந்ததில் இவை குறையுடையன என அறியப்பெற்றன. இறுதியில் பிருகு முனிவர் பிரமம் ஆனந்த நிலை என்ற உண்மையைத் தேர்ந்தார். இந்த ஆனந்தத்தில் நுகர்வோன்- நுகரப்படும்

பொருள் என்ற வேறுபாடில்லை. இந்த 'எல்லையில்லாத பொருள்' பகுப்பு அற்றது. தகுதியும் விடாமுயற்சியும் ஆன்மாவின் உண்மை இயல்பினை அறிதற்கு இன்றியமையாதன என்பதனை இந்திர - விரோசனப் புராணக்கதை வாயிலாகச் 'சாந்தோக்ய உபநிடதம்' விளக்குகிறது

விழிப்பு, கனவு, துயில் ஆகிய அனுபவநிலைகளை ஆய்வது உபநிடதங்களில் பல இடங்களில் காணலாம் உண்மையான ஆன்ம அறிவு பெறுதற்குரிய முறையாகுமிது இம்முறையைப் பற்றிய கருத்துக்களை விளக்குவது மாண்டூக்ய உபநிடதம் 'ஓம்' என்ற மறைமுக மெய் 'ஒலியே' உள்ளது ஆகும் என்று இந்த உபநிடதம் தொடங்குகிறது இவையனைத்துமாய் 'ஓம்' இருக்கிறது இருந்ததும், இருப்பதும், இருக்கப்போவதுமாய் உள்ளது 'ஓம்' காலத்தின் மூன்று பாகுபாடுகட்கும் அப்பாற்பட்டது தோன்றும் உலகத்தின் 'தோன்றாத' அடிநிலை அதுவாகும் ஆகவே உள்ள அனைத்துமாய் பிரமம் விளங்குகிறது ஓம் என்பது அதன்ஒலி அடையாளம். ஆன்மாவே பிரமம் 'ஓம்' என்ற ஒலியின் மும்மாத்திரைகள் 'அ'- 'உ'- 'ம்'- இவை மூன்றும் முறையே விழிப்பு, கனவு, துயில் ஆகிய மூன்று நிலைகட்கும் ஒப்பாகும். இம்மூன்று நிலைகளிலும் ஆன்மா தோன்றுகிறது. இவற்றைக் கடந்த நான்காம் நிலை ஆன்மாவின் இயல்பான நிலை. இதனைத் 'துரியம்' என்பர் ஆன்மாவின் உண்மை நிலை மாறாதது, வரையறை, காரண காரியமற்றது.

விழிப்பு நிலையில், ஆன்மா புறத்திலுள்ள புலன் அறி பொருள்களோடு உறவு கொள்கிறது; அதன் நுகர்வு களெல்லாம் பருமை நிலையில் உள்ளனவாகும் கனவு நிலையில் ஆன்மா, உருவங்களின் சாயல் உலகில் திளைக்கும். அதன் அநுபவம் இந்நிலையில் நுட்பமானது

உறக்க நிலையில் ஆசைகளில்லை; கனவுகளில்லை காண்பான், காணப்படும் பொருள் என்ற வேறுபாடின்றி ஆன்மா ஒன்றாகிறது அந்நிலையில் ஆன்மா, புலன் நுகர்வின் திரட்சியாக உள்ளது; பேரின்பம், பேரின்பத்தினை நுகர்வதுபோல் இருப்பது; மேலே கூறிய முந்நிலைகளி லுள்ள ஆன்மாவின், முறையே 'வைஸ்வ னர' 'தைஜஸ' 'பிரக்ஞா' என்று கூறுகின்றனர். நான்காவதான துரியம் ஆன்மாவின் உண்மை நிலையாகும். மாறுகின்ற முறைகளையெல்லாம் ஆன்மா கடந்துள்ளது விழிப்பு, கனவு, துயில் ஆகிய முந்நிலைக் கட்டத்தில் ஆன்மா சிக்குவதில்லை ஆனால் இம்மூன்று நிலைகட்கும் ஆன்மா நிலைக்களனாக விளங்குவது; ஆன்மா காணவொண்ணாதது அனுபவ மொழியில் அது அடங்காதது; சிந்திக்க வொணாதது; அடையாளமற்றது; பெயரிடமுடியாதது; உணர்வின் பிழிவென அமைகிறது. பிரபஞ்சம் அதனுள் ஒடுக்கம் உறுகிறது. அது 'இரண்டற்ற' அமைதியின் பேரின்பமாகும் இவ்வாறு ஆன்மாவின் உண்மை நிலையினை மாண்டூக்ய உபநிடதம் கூறுகிறது.

'முழுமுதல்' பரம்பொருள்' உபநிடதக் கருத்துப்படி அகப்பொருள், புறப்பொருள் என்றபாகுபாடுகளைக் கடந்தது அக, புறப் பொருட்களின் ஆதாரமாக அது அமைவது. ஆன்மா, தோன்றுகின்ற பிரபஞ்ச நிலை, தனித்த நிலை ஆகிய வேறுபாடுகளைக் களைந்தால், உண்மையினை உணர்தல் இயலும் இந்த மெய்யுணர்விற்கு உறுதுணையாக ஒரு உண்மை உணர்த்தப் பெறுகிறது. அனுபவ நிலை ஒவ்வொன்றிலும் ஆன்மாவினது பிரபஞ்ச வடிவம், தனித்த வடிவங்களில் வேறுபாடில்லை. என்பது போதிக்கப் பெறுகிறது. வேறுபாடின்மையால் ஆன்மா துயில்

நிலையில்அனைத்திற்கும் தலைவனாக, சர்வேஸ்வரனாக, என மாண்டூக்கியம் கருதுகிறது. சூரியனில் காணப்பெறுபவனும் கண்ணிலே விளங்குபவனும், ஒருவனே எனச் 'சாந்தோக்ய உபநிடதம்' கருதுகிறது 'மனமும்' 'இடமும்' பிரமம் எனக் கொள்ளப்பெறுகிறது. பிருகதாரண்யக உபநிடதத்தில் 'பாலாகிக்கும்' அஜாதசத்ரு என்ற இருவருக்குமிடையில் நடைபெற்ற உரையாடல் உட்பொருளைப் பற்றிய சிக்கல் முதன் முதலாகப் புற நிலையில் வைத்து ஆராயப்பெறுகிறது. இச்செய்தி கௌஷீதகியிலும் கூறப்படுகிறது. சூரியன் சந்திரன் எனப்பெயர் பெறும் பொருள்களுள் உள்ளவனே 'பிரமம்' எனக்குறிக்கிறது. நிகழ்ச்சி ஒவ்வொன்றிற்கும் பின்னால் பிரமம் ஆழமான தத்துவமாக விளங்குவதை அஜாதசத்ரு காட்டுகிறார். தோன்றுபவை, உள்பொருளின் 'ஆதிதெய்வ' வடிவங்களாகும். 'அத்யாத்ம' வடிவங்களாகிய ஒருவனது நிழல், எதிரொலி, உடல், கண் ஆகியவை குறித்து வழக்குரை நிகழ்கிறது. முடிவாக, அஜாதசத்ரு பிரபஞ்ச ஆன்மாவைக் குறித்து விவரிக்கிறார். இவ்வான்மா விலிருந்து அனைத்து உலகங்களும், தெய்வங்களும், உயிரி னங்களும் தோன்றுகின்றது.

ஆன்மாவும் பிரமமும் ஒன்றேயெனும் முற்றொருமைக் கொள்கை, உபநிடதங்களில் முக்கியமாக உள்ள கருத்தாகும் உத்தாலகர் தனது மகன் ஸ்வேதகேதுவிற்கு முற்றொருமை கொள்கையை போதிக்கிறார். 'சத்' என்பது உளவாகும் அனைத்திற்கும் ஆதாரமும், உயிரினங்களின் பிறப்பிடமும் ஆகும். ஸ்வேதகேதுவின் ஆன்மாவோடு 'சத்' என்பது முற்றொருமை உடையது என்கிறார். 'நுண்ணிய சாரம் எதுவோ அதனை ஆன்மாவென உலகுகொள்கிறது அதுவே உள்பொருள்; அதுவே ஆன்மா; "ஓ ஸ்வேதகேது; நீயே அது என இருக்கிறாய்" பிரம ஆன்மா வேறுபாடு இன்மை

ஒன்பது இடங்களில் மீண்டும் மீண்டும் வலியுறுத்தப் பெறுகிறது உத்தாலகரது போதனையின் மூலக்கருத்தை விளக்கும் பொருட்டு, பலமுறை முற்றொருமைக் கொள்கை பேசப்பெறுகிறது ஒவ்வொரு தனி ஆன்மாவும் யாவற்றையும் கொண்ட 'உள்ளது' அன்று என்பது குறிக்கத் தக்கது

தனியொரு ஆன்மா, பிரபஞ்ச ஆன்மாவோடு வேறு பட்டது அன்று என்பது உண்மை ஆனால் இப்பிரபஞ்ச ஆன்மா, உலகத்தையும் தனி ஆன்மாக்களையும் ஆளுமா என விளக்குகிறது இரண்டற்ற பிரமம், ஆன்மா இரு வகைகளில் உபநிடதங்களில் கருதப்பெறுகிறது 1 பிரபஞ்சம் யாவற்றையும் உள்ளடக்கும் அடிப்படை என்பது ஒருவகை 2 உள்பொருளின் தோற்றமே இப்பிரபஞ்சம் என்பது மற்றொரு வகை முன்னையது சப்பிரபஞ்சக்கொள்கை; பின்னையது நிஷ்பிரபஞ்சக் கொள்கை பிரபஞ்சத்தைப் பற்றிய இரு கொள்கைகளது வேறுபாடு, பின்னே வேதாந்தக் கொள்கைகளிடையே கடவுட்கொள்கை (Theistic) பரம்பொருட் கொள்கை (Absolutistic) என்ற கொள்கைகட்கு இடம் தந்தது இவற்றை விளக்குவது இவ்வாறு:

"பிரபஞ்சநோக்கு"- உள்பொருளைப் பற்றிய சப்பிரபஞ்ச கொள்கையினைக் கீழேகாணும் பகுதிகளைக் கொண்டு தெளிவாக அறியலாம் "எவனுக்கு மனம் உண்டோ எவனுடைய உடல் உயிராகுமோ, எவனுடைய வடிவம் ஒளியாகுமோ, எவனுடைய கருத்து உண்மையாகுமோ எவனுடைய ஆன்மா இடமாக இருந்து எல்லாச் செயல் களையும் ஆசைகளையும் மணங்களையும் சுவைகளையும் உடையதாகி முழு உலகினையும் உட்கொண்டதாகுமோ பேச்சற்றதாகுமோ, அமைதியானதாகுமோ, அதுவே

என்னுடைய ஆன்மாவாகும். அதுவே இதயத்தில் இருப்பது அது ஓர் அரிசியைவிட, வால்கோதுமை, அரிசியைவிட கடுகைவிட, தினையின் குறு நொய்யைவிட, தினையின் நுண்ணுயிர்ப் பகுதியைவிடச் சிறியது என் இதயத்தில் இருக்கும் ஆன்மா, நிலத்தைவிடப் பெரியது, துறக்கத்தை விடப் பெரியது, இவற்றின் நடுவிடத்தைவிடப் பெரியது உலகங்கள் எல்லாவற்றையும்விடப் பெரியது "இவ்வான்மா உண்மையிலேயே கீழேயும் உள்ளது, மேலேயும் உள்ளது மேற்கேயுள்ளது, கிழக்கேயுள்ளது, தெற்கேயுள்ளது, வடக்கேயுள்ளது இவ்வான்மா உண்மையிலேயே இவ்வுலக மாயுள்ளது. "இது பிரமம் ஆகும். இது இந்திரன் ஆகும் இது பிரஜாபதிஆகுஇதுப்தெய்வங்கள் அனைத்துமாகும் இது ஐம்முதல் பொருள்களாகிய நிலம், நீர், தீ, காற்று வனி ஆகும், இவையும் நுண்ணியவற்றோடு கலந்தவையும்ஆகும் ஒருவகை விதைகள், அல்லது வேறுவகை விதைகள் ஆகும். தாய்வைற்றினின்றி பிறப்பன வியர்வையினின்றி பிறப்பன முட்டையினின்று பிறப்பன, முளைப்பன குதிரைகள் கன்றுகாலிகள், மக்கள், யானைகள் இங்குள்ள உயிரின மனைத்தும் ஆகும். அசைவன, பறப்பன, நிலைத்தன யாவும் ஆன்மாவே

நிஷ்பிரபஞ்சக் கொள்கையைப் போதிக்கும் சிறந்த பகுதிகளாவன ;-

'இது அழிவற்றது, ஓ கார்க்கி' இது ஞானிகளால் போற்றப்பெறுகிறது இது படுத்தது அன்று, நுண்ணியதன்று குறுகியது அன்று, நெடியது அன்று, சிவப்பன்று, ஒட்டுவ தன்று, நிழலுடையதன்று, சுவை அற்றது, இருள் அற்றது காற்றற்றது, மணமற்றது இடம் அற்றது, கண் அற்றது. பற்றுஅற்றது, பண்புஅற்றது காதுஅற்றது பேச்சு அற்றது மனம் அற்றது ஒளி அற்றது மூச்சு அற்றது, வாய்அற்றது அளவு அற்றது, உண்ணப்படுவது அன்று உண்ணுவது அன்று. இது ஒலி, ஊறு, வடிவம், அற்றது அழிவு அற்றது

சுவை அற்றது, என்றென்றும் உள்ளது, மனம் அற்றது தோற்றம் அற்றது, ஈறு அற்றது. பெரிதினும் பெரியது உறுதியானது, இதனை உணர்ந்தவன் மரணத்தின் வாயினின்று தப்புகிறான், விடுதலைப் பெறுகிறான்.

பரம்பொருளை எதிர்மறைச் சொற்களினால் விவரிப்பதன் உட்குறிப்பு, 'பிரமம்' 'வெறுமை' என்பது அன்று; இல்பொருள் அன்று. மனித சிந்தனைகளுள் பிரமம் இத்தன்மையது என்று வரையறைக்கும் உட்படுவது அன்று மனித சிந்தனை அறிந்துள்ள வகைகளால் பிரமத்தை வரையறுக்க முடியாது என்பது இவற்றின் பொருள். ''இது அன்று, இது அன்று'' (நெதி, நெதி) என்று குறிக்கப் பெறுவது எனினும் இவற்றை மற்றைய பாடப் பகுதி களோடு சேர்த்தே அறிதல் வேண்டும் பிற பகுதிகள் பிரமத்தை 'உள்பொருள்' (சத்) என்று, அறிவு (சித்) என்று பேரின்பம் (ஆனந்தம்) என்று பேசுகிறான். இத்தொடர்களை நாம் வழங்கும் பொருளில் கொள்ளக் கூடாது என்பது உண்மை. இவை, தலைசிறந்த ஆன்மாவினது (பரம் பொருளின்) இயல்பினைக் குறிக்க மனித மனத்தில் வளர்ச்சி முறையில் அமைத்த கருத்துக்களை விளக்குவனவாம். பிரமத்தைப் பிருகதாரண்யகம் 'உண்மயுள் உண்மை' (சத்யஸ்ய சத்யம்) என்று கூறுகிறது. சத்யம் என்ற சொல் ச; தி; யம் என்று மூன்று அசைகளாகப் பிரிகிறது முதல் அசையும் மூன்றாவது அசையும் 'உண்மை' என்ற பொருளைத்தரும் இரண்டாவது அசை உண்மைக்கு மாறானதைக் குறிக்கும் என்றும், அம்முழுச் சொல்லைக் கருதும்போது உண்மைக்கு மாறானதின் இருமருங்கும் உண்மையால் சூழ்ந்துள்ளது என்ற நிலை தெரியவரும் இவற்றை உபநிடதம் விளக்குகிறது. பல மூலப்பகுதிகளில் ஆன்மா (சைதன்யம்) ' அறிவு'' என விளக்கப்பெற்றுள்ளது இவ்வாறு பன்முறை ஆன்மா வரையறை செய்யப்பெற்

றுள்ளது. இவ்வுண்மை போதிக்கப்படும் முறைகளுள் ஒன்று ஆன்மா, "ஒளிகளுக்கு எல்லாம் ஒளி" என்பது ஆன்மா தன்னொளியோடுகூடியது "சூரியன் ஒளிர்வது அங்கு அன்று சந்திரனும், விண்மீன்களும், மின்னல்களும் ஒளிர்வது அங்கு அன்று, பிரமம் ஒளிர அவை ஒளிர்கின்றன மற்ற அனைத்தும் ஒளிர்கின்றன. பிரமத்தின் ஒளியால் உலகு அனைத்தும் ஒளி பெறுகிறது." பிரமம், கட்டுபாடற்ற, வரையறையற்ற உண்மை, தன்னொளியான அறிவு, ஈடுஎடுப்பற்ற ஆனந்த மாகும், பிருகதாரண்யகத்திலும், தைத்ரீயத்திலும் ஆனந்த வகைகளைப் பற்றி நுண்கணக்கு ஒன்று தரப்பெறுகிறது. மனிதன் உயர்ந்ததாகக் கொள்ளும் இன்பத்தினை அளவாகக் கொண்டு இக்கணக்கு கணிக்கப்பெறுகிறது பிருகதாரண்ய கத்தின்படி பிரமம் எனும் இன்பம் உயர்வாக மனிதனால் கருதப்படும் இன்பத்தைவிட ஓர் இலக்கக்கோடி முறை மிகுந்தது, தைத்ரீயத்தின்படி பதினாயிரம் கோடி கோடி மிகுந்தது, எல்லையற்றது, அளவிறந்தது 'பூமான்' என்று பிரமத்தைச் சாந்தோக்கியம் விவரித்தது பிரமமே அகம் என்றும், ஆனந்தம் என்றும் கூறுகின்றது. பின்னர் எழுந்த வேதாந்த நூல்கள் பிரமத்தைச் 'சச்சிதாநந்தம்' என்று குறிக்கின்றன. பிரமத்தைப் பிருகதாரண்யகம் 'அறிவு, ஆனந்தம்' என்று வரையறை செய்கிறது. தைத்ரீயம் 'பிரம மானது உள்பொருள், உணர்வு, அளவு அற்றது,' என்று பேசுகிறது.

*உலகம் :-*

பிரமத்தைக் குறித்து வழங்கும் சப்பிரபஞ்சம், நிஷ்பிர பஞ்சம் என்று இருநோக்குகட்கு ஏற்ப உலகைக் குறித்து இருகொள்கைகள் தோன்றியுள்ளதை உபநிடதங்களில் காணலாம், உலகு பிரமத்திலிருந்து உண்மையிலேயே

வெளிப்பட்டது என்றும். முழுமுதலின் தோற்றமே உலகு என்றும் கருதப்படுகின்றன. உபநிடதங்கள் படைப்புக் கொள்கையைக் குறைவாகவே கூறுகின்றன ஒருமைப்பா பாடான கருத்து யாதெனின் இவ்வுலகு முழுமையும் ஆன்மா விளின்றே தோன்றுகிறது என்பதே பொருளாகிய முதலி னின்று உலகு தோன்றுவதாகக் கொள்ளவில்லை ஸ்வே தாஸ்வதர உபநிடதம் இத்தகைய உலகத் தோற்றம் குறித்த கேள்விகளோடு துவங்குகிறது. காரணம் யாது? எங்கிருந்து தோன்றியுள்ளோம்? எவ்வாறு வாழ்கிறோம்? எதில் நிலை பெற்றுள்ளோம், யாருடைய மேற்பார்வையில் நமது இன்ப, துன்ப நுகர்வுகள் அமைகின்றன? இக்கேள்விகட்கு உரிய விடைகளை எல்லைக்கு உட்படும் துணையைக் கொண்டு காண இயலாது பொருளை முதற்காரணம் எனக்கொண்டும் காண இயலாது காலம், இயற்கை, நியதி, எதேச்சை முதல்கள், கரு அல்லது புருஷன் ஆகியவை முதற்காரண மாகத் தொழிற்பட முடியாது. இயற்றைத் துணைக்காரணங் களாகக் கருதலாம் என்று உபநிடதங்கள் குறிக்கின்றன இதன்மேலாக இறைவன் ஆற்றல் ஆள்கிறது இவ்வாற்றல் இறைவனின் குணங்களில் பொதிந்துள்ளது.

படைப்பைக் குறித்து உபநிடதங்கள் கொள்ளும் கருத்து ஒருமை ஒன்று காண்போம் மற்றொன்று பிரமம் தனக்கு அயலாக உள்ள பொருளினின்று பிரபஞ்சத்தைப் படைப்ப தில்லை என்பதாகும் இவ்வுலகு பிரமத்தின் ஒரு நிலையின் வெளிப்பாடு ஆகும். அதாவது பிரமம் உலகில் கலந்தும், உலகை கடந்தும் விளங்குகிறான் பின் எழுந்த வேதந்தச் சொற்களின் துணைக்கொண்டு இக்கருத்தைக்கூறின் பிரமம் முதற்காரணமாகவும் நிமித்த காரணமாகவும் விளங்குகிறான் எனக் கூறலாம் (அபின்ன நிமித்தோபாதான காரணம்) இவையனைத்தும் உண்மையிலேயே பிரமமே, அமைதி

காண அவனைத் தைஜலானாக வழிபடட்டும், எனச்சாந்தோக்கியம் கூறுகிறது தைஜலான் என்ற தொடரை சங்கரர் பின் வருமாறு விளக்குவர்,

தத்—ஜ—லி—அன் = தைஜலான் தத்—எதனினின்றும் இவ்வுலகு, ஜ—தோன்றியுள்ளதோ அதனுள் உலகு, லி—ஒடுங்குகிறது, அதனுள், அன்—உயிர்க்கவும் வாழவும் செய்கிறது'' பிரபஞ்சத்தின் தோற்றம், நிலைபேறு, ஒடுக்கம் முதலியவற்றிற்குப் பிரமமே காரணம் என்று தைத்ரீயம் கூறுகிறது உலகின் தோற்றம் குறித்துப் பிரமமே காரணம் என்பதை 'ஈச,' 'கேன,' உபநிடதங்கள் நிலைநிறுத்துகின்றன இப்பிரபஞ்சம் அனைத்தையும் இறைவன் சூழ்ந்துளன் என்று 'ஈச' உபநிடதம் கூறுகிறது. அதாவது இப்பிரபஞ்சம் இறைவனிடமிருந்து தனது பொருளைப் பெறுகின்றது. பிரமம் இயக்குனர் என்றும், பொருள் அனைத்தின் இயக்கத்திற்குக் காரணமாவார் என்றும் 'கேன' உபநிடதம் கூறுகிறது. முதற் சொல்லாகிய 'கேன' என்ற சொல்லே 'யாரால்' என்று பொருள். இவற்றிலிருந்து பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணன் யார் என்பதை அறிவதிலே இவ்வுபநிடதம் தலைப்படுகிறது

பிரபஞ்சத்தின் நிமித்த காரணம் முதற்காரணத்தின் வேறன்று இதைப் படைப்புப் பாடல்கள் வழி அறியலாம். ''நான் என்னைப் பிறப்பிக்கட்டுமா? என்று அவர் விரும்னார் அவர் தவத்தினை மேற்கொண்டார். தவம் செய்தபின் அவர் இவையனைத்தையும் படைத்தார். இங்குள்ள அனைத்தையும் படைத்தபின் உண்மையிலேயே படைத்த அவற்றுள் புகுந்தார்'' எனத் தைத்ரீய உபநிடதம் புகல்கிறது.

நான் பலவாதல் வேண்டும் எனில் என்னைப் பிறப்பித்து கொள்வேன் ஆக என அது நினைத்தது'' எனச் சாந்தோக்

யம் கூறுகிறது மேலும், நெருப்பு, நீர் உணவு முதலியன முறையே தோன்றுவதை அது விளக்குகிறது. உலகுமுதலில் எவ்வாறு தோன்றாத நிலையில் இருந்தது என்றும் பின்னர் அது நாமரூப உலகமாக எவ்வாறுதோன்றலாயிற்று என்றும் பிருகதாரண்யகம் விவரிக்கிறது. இப்பிரபஞ்சத்தைத் தோற்று வித்த பிறகு ஆன்மா அதனுள் நுழைந்தது பிரமத்தினின்று இப்பிரபஞ்சம் தோன்றும் முறையினைச் சிலந்தியினின்று வெளிப்படும் இழையினுக்கும் வாழ்கின்ற ஒருவனது உடலிலும் தலையிலும் முளைக்கும் உரோமத்திற்கும், நெருப்பிலிருந்து தோன்றும் பொறிக்கும், நிலத்தினின்று தோன்றும் சிறுசெடிக்கும் ஒப்பிடுகின்றது ஓர் அக ஆன்மா வினின்று பன்மை உலகு தோன்றியுளது எனினும் அக ஆன்மா உலகினது குறைகளால் தாக்குறுதல் இல்லை. ஒரே நெருப்பு பலவடிவங்களை ஏற்கிறது, காற்றும் அவ்வாறே உலகின் கண் எனக் கதிரவன் திகழ்கிறது காணும் கண்களது புறநிலைக் கோடுகளால் கதிரவன் கேடுறுவது இல்லை. அதுபோல் எல்லாப் பொருள்களிலும் உள்ள அக ஆன்மா உலகத் துன்ப நிகழ்ச்சிகளால் தாக்குறு வது இல்லை.

பிரபஞ்சத்தின் உயர்பொருள் கூறுகளும், உயிர்பொருள் அல்லாத கூறுகளும், ஒருங்கே ஆன்மாவை ஆதாரமாகக் கொண்டுள்ளன. நெருப்பு, நீர், நிலம் ஆகிய மூன்று மூலப் பொருள்களும் பிரமத்திடமிருந்து முறையே தோன்றுவன என்பது சாந்தோக்கியத்தில் காணப்படுவது, தைத்ரீயத்தில் ஐந்து மூலப்பொருள்கள் பேசப்பெறுகின்றன வெளி காற்று நெருப்பு, நீர், நிலம் ஆகிய இவை ஆன்மாவினின்று ஒன்றன் பின் ஒன்றாக, 'உள்ளது சிறத்தல்' முறையில் தோன்றி யுள்ளவையாகக் கூறப்பெறுகின்றன, பொறிகள் ஐந்தாகும்

இவ்வைந்து பொறிகட்கும் தனித்தனி இயல்புகள் உண்டு. இவ்வியல்புகளுக்கு ஏற்பப் புறஉலகில் பொருட்கள் உண்டு; ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்பன முறையே வெளி, காற்று, நெருப்பு நீர், நிலம் ஆகியவற்றின் சிறப்புக் கூறுக ளாகும். இவ்வைந்து மூலப்பொருள்களை நாம் நமது அனு பவத்தில் அறிவனவற்றோடு ஒத்தவையாக வைத்து எண்ணு தல் தவறு நமது அனுபவத்தில் அமைபவை தூய மூலப் பொருள்களல்ல, கலப்புற்றவை. ஆதலால் அவற்றைப் பருமை (ஸ்தூல) நிலையிலுள்ளதாகக் கருதுகிறோம் மூலப் பொருள்கள் நுண்ணிய நிலையில் உள்ளவை (சூக்குமம்). இவ்வடிப்படை நுண் மூலப்பொருள் ஒன்றோடொன்று கலக்கின்ற முறையால் (பஞ்சீகரணத்தால் Quintuplication) பருமை மூலப் பொருட்கள் தோற்றுவிக்கப் பெறுகின்றன நுண்ணிய மூலப்பொருட்கள், ஆகாயமாத்திரா வாயுமாத்திரா தேஜோமாத்திரா ஆபோமாத்திரா, பிரிதிவீமாத்திரா, என்று 'பிரஸ்ன' உபநிடதத்தில் பெயர்பெறும் பஞ்சீகரணம் என்ற சொல்லைப் பின்னர் வழங்கினரேனும் மூலப்பொருட்கள் ஒன்றோடொன்று கலத்தலானது முந்தைய உபநிடதங்க ளிலேயே கூறப்பெற்றது. ஏனெனில் சாந்தோக்கியத்தில் மூன்று மூலப்பொருட்கள் கூறப்பெறுகின்றன ஒவ்வொன்றும் மூன்றாகப் பெருகின்றது ஐந்து முலப் பொருள்களினின்று இவ்வுலகப் பொருள்கள் ஒன்றன்பின் ஒன்றாய்த் தோற்ற முறுகின்றன, ஆன்ம நுகர்வுக்குரிய பொருள்கள், நுகர்வுக் கருவிகள், நுகர்வுக்குரிய இடங்கள் ஆகிய அனைத்தும் உலக பொருட்களினின்று அமைகின்றன, உயிர்பொருட்களை முவகையில் பகுத்துள்ளனர். அவை முட்டையினின்று தோன்றுபவை, சிறு உயிர்களினின்று (கிருமிகள்) தோன்று பவை, சிறுமுளைகளினின்று தோன்றுபவை என்பன வியர்வையினின்று தோன்றுபவை நான்காவது பகுப்பாகக்

கூறப்படுகிறது முன்னைய உபநிடதங்களுள் படைப்பும் ஒடுக்கமும் மாறி மாறி நிகழ்வன என்ற குறிப்பு காணப்பட வில்லை எனினும் படைப்பும், துடைப்பும் அடுத்தடுத்து நிகழ்வன என்று பல இடங்களில் ஸ்வேதாஸ்வதர உபநிடதம் கூறுகிறது. அனைத்துயிர்களையும் படைத்த பின்னர் காலத்தின் இறுதியில் உருத்திரர் அவ்வுயிர்த்திரள் அனைத்தையும் ஒன்றாகச் சேர்ப்பார், பன்முறை இம்மாய வலையினை விரிப்பார் எனவும் கூறுகிறது.

நிஷ்பிரபஞ்சக் கொள்கையின்படி உண்மையில் படைப்பு இல்லை பல விளக்கங்கள் இதற்குண்டு மண், உலோகம், நெருப்பு முதலிய எடுத்துக்காட்டுகளோடு அமையும் இவை ஒன்றன் உண்மையினை வலியுறுத்தற் பொருட்டென்று கௌடபாதர் கூறுகிறார். இப்பிரபஞ்சத்திற்குத் தோற்றம் மட்டுமே உள்ளது. இப்பிரபஞ்சம் உண்மையன்று இயல்பில் உள்ளடக்கும் கட்டு அல்லது தளை அற்ற பரம்பொருள் எவ்வாறு கட்டுறுகிறது என்பனை 'மாயை' எனும் கொள்கை விளக்குகிறது இந்த மாயைக் கொள்கை உபநிடதங்களில் முழு வடிவத்தில் வளர்ச்சிபெற்ற நிலையில் காணப்பெற வில்லை ஆனால் உபநிடத ஞானிகள் சிலர்க்கு இக்கருத்து (மாயை) தெரியாதொன்றன்று. யாக்ஞவல்கியரது போதனைகள் இக்கருத்தைக் குறிக்கின்றன. 'இருமை' உள்ளதுபோல் தோன்றுகிறது என்று யாக்ஞவல்கியர் கூறுகிறார். இதன் பொருள் தோன்றுகின்ற உலகம் உண்மையானதன்று, இவ்வுலகம் வழங்குகின்ற தோற்றம் பொய் தோற்றமாகும் மாற்றங்களெல்லாம் பெயரளவில் அமையும் வேறுபாடுகள் என சொல்லளவில் அமையும் சொற்றொடர்கள் எனச் சாந்தோக்யம் சொல்லுகிறது மைத்ராயனீயம் பரம்பொருளை நெருப்பின் சக்கரத்திற்கு ஒப்பிட்டு கூறுகிறது இவ்வுவமை

யினைப் பின்னர், கௌடபாதர் இவ்வுலகின் பொய்த்தோற் றத்தினை விளக்குதற்குப் பயன்படுத்துகிறார் இருக்கு வேதத்தில் மாயை எனும் சொல் காணப்படுகிறது. இந்திரன் தனது மாயையினால் பல கோலங்கள் கொள்கிறான் என் கிறது இச்செய்தி, பிருகதாரண்யக உபநிடதத்தில், வேறு பாடு உண்மையானது அன்று என்று விவரிக்கின்ற இடத்தில் கூறப்பெறுவதால் சிறப்புப் பெறுகிறது. 'ஸ்வேதாஸ்வதரத் தில் மாயை எனும் சொல் 'பொய்த்தோற்றம்' எனும் பொரு ளில் ஆளப்பெறுகிறது அனைத்துயிர்க்கும் தலைவன் 'மாயாவி' என்று பேசப்பெறுகிறான், 'அவித்தை' எனும் சொல்லும் ஒத்த பொருளில் சில உபநிடதங்களில் வழங்கப் பெறுகிறது. இவ்வுலகின் தோற்றம் வியத்தகு செயலாகும். இதை மாயை, அவித்தை என்பன உணர்த்துகின்றன பிரமத் தின் தனித்தன்மையும், முழுமையும், கட்டற்ற நிலையும், எவ்விதத்திலும் தாக்குறா வகையில் பன்மை உலகு தோன் றுகிறது ''அது நிறைவுள்ளது, இது நிறைவுள்ளது நிறை வுள்ளது, நிறைவினின்று தோன்றுகிறது. நிறைவினின்று நிறைவினை எடுத்தாலும், நிறைவே இருக்கிறது,''

# தனியொருவனின் கட்டுண்ட நிலையும் விடுதலையும்

ஆன்மா, தனித்த நிலையில் 'ஜீவன்' என்பதாகும் இதனின் வேர், 'ஜீவ்' என்பது, இது 'வாழ்தல்' என்று பொருள்படும். சப்பிரபஞ்ச, நிஷ்பிரபஞ்சக் கருத்துகளின்படி கட்டுண்ட தனி ஆன்மா, கட்டற்ற ஆன்மாவின் வேறன்று என்பதாகும். யாக்ஞவல்கியரை நோக்கி உஷாஸ்தா சாக்ராயனர் கேட்பது, "அனைத்துயிரின் ஆன்மாவாக நேரில் உடனடியாக, உணரப்படும் பிரமம் எது?"என்பது யாக்ஞவல் கியர், "உனது ஆன்மாவே அனைத்துயிரின் ஆன்மா" என்றார். இரு பறவைகளைப் பற்றிய உவமை இங்குத்தரப் பெறுகிறது பறவைகள் இரண்டென்று கூறப்படுவதால் ஜீவனும் பிரமமும் வேறுவேறு என்று பொருள் செய்தல் கூடாது. வேறுபடுவனபோல் தோன்றுகின்றனவே யன்றி இவற்றிடையே உண்மையில் வேறுபாடில்லை. இரண்டு இணைபிரியாத பறவைகள் ஒரே மரத்தில் உலகத் துன்பங் களில் அழுந்தியுள்ள ஒருவன் மயங்கித் தனது ஆற்றலின் மையை நினைத்து வருந்துகிறான் ஆனால் அவன் துன்பங் களினின்று நீங்குகிறான். நீங்குதல் அல்லது விடுதலை எப்பொழுது என்றால் மற்றொருவனைக் காணும்பொழுது ஏற்படுகிறது. மற்றொருவன் பலரால் வழிபடப்பெறுகிறான் அவனது தலைமையையும் பெருமையையும் உணர்கிறான். தலைசிறத்த ஆன்மாவையும், தனி ஆன்மாவையும், ஒளிக்கும் நிழலுக்கும் உவமித்து 'கதா' உபநிடதம் கூறுகிறது (ஆதப—ஒளி, சாயா—நிழல்).

ஆன்மாவினின்று இவ்வாழ்வு பிறக்கிறது என்று பிரஸ்ன உபநிடதம்' கூறுகிறது. ஒருவனிடத்து நிழலுள்ளதுபோல, இது தொடர்புற்று விளங்குகிறது ஜீவநிலை' என் அமைகிறது ஆன்மா, உடலும் உள்ளமும் ஒன்றிய அமைப்பினால் கட்டுறுவதுபோல் தோன்றுவதே ஜீவநிலை இவ்வாறு கட்டுறுவது ஆன்மாவின் மறுபிறப்பிற்குக் காரணமாகும். துன்பத்திற்கு இதுவே காரணமாகும்.

தைத்ரீயத்தில் ஐந்து வகைக் கவசங்கள் அல்லது உறைகளைப் பற்றிய விளக்கம் கூறப்பெற்றுள்ளது. ஆன்மாவிற்கு ஐந்து உறைகள், ஊனுடல், பருவுடல், உணவாலாயது, புறத்தே புலப்படுவது (அன்னரச மயம்); உயிர்ப்பூட்டும் காற்றுக்களாலானது (பிராணமயம்): மனத்தால் ஆனது (மனோமயம்); அறிவினாலானது (விஞ்ஞானமயம்); பேரின்பத்தாலானது (ஆனந்தமயம்) பின்னைய வேதாந்தத்தில் முதலிலே குறிக்கப் பெற்றுள்ள பருவுடலை. ஸ்தூல சரீரம் என்றும், அடுத்துள்ள மூன்றையும் நுண் சரீரம் என்றும், இறுதியானதைக் காரண சரீரம் என்றும் கூறப்பெறுகிறது இவை அனைத்தும ஆன்மாவின் 'அனுபவ வீடாக' அமைகின்றன. இவற்றால் ஆன்மா கட்டுண்டு அனுபவத்திற்குரியதாகவும் நுகர்வுக்குரியதாகவும் ஆகிறது. ஆன்மாவை தேர்த்தலைவனாகவும், உடலைத் தேராகவும், அறிவினைத் தேர்ப்பாகனாகவும், மனத்தினைக் கடிவாளமாகவும், புலப்பொருட்களைச் செல்லும் சாலைகளாகவும் உவமித்து 'கதா' உபநிடதம் பேசுகிறது. மேலும் கட்டுண்ட ஆன்மா, உடல், பொறி, புலன்கள் மனம் ஆகியவற்றோடு கூடிய நிலையில் நுகர்வோனாக ஆகிறான்.

எல்லாவகை அனுபவங்களிலும், நுகர்வுகளிலும் மனம், மையமாக உளது பிருகதாரண்யகம் மனத்தினது தொழில் களை முறையே கூறுகிறது விருப்புதல், உறுதிபூணுதல், ஐயுறுதல். நம்புதல், நம்புதலின்மை, நிலைத்தலின்மை, வெட்கப்படுதல், சிந்தித்தல், அஞ்சுதல் ஆகிய யாவும் மனத் தினுடைய தொழிற்பாடுகள் ஆகும். மனம், பத்துப் பொறி களின் வாயிலாகத் தொழிற்படுகிறது அவை அறிபொறிகள் ஐந்து; அவை காட்சி, கேள்வி, ஊறு, சுவை, முகர்வு, முதலிய நுகர்வுகளைத்தரும் உறுப்புகளாகும் 'செய்கருவிகள் ஐந்து பேச்சு உறுப்பு வாய்; பற்றுப் உறுப்பு கை, இயக்க உறுப்பு கால்; கழிவு உறுப்பு எருவாய், இனப்பெருக்க உறுப்பு கருவாய் எனவே அறிவு நிலைகட்கு முக்கியமாக உளது. அறிபொருள்களின் வாயிலாக அறிவினைப் பெறுகிறது பெற்றசிறு பகுதிகளைத் தொகுத்துச் செய்கருவிகளுள் ஒன்றனின் துணையைக் கொண்டோ மற்றவற்றின் துணை யைக்கொண்டோ செயற்படுகிறது

உடலும் உயிர்ப்பும் மனத்திற்குக் கீழ் அமைக்கப் பெற் றுள்ளன. உடலும் உயிர்ப்பும் முறையே ஆன்மாவினது செயல்கட்கும், உடலைச் சார்ந்த அடிப்படைகளாகும் பிராணன், உடல் உயிர்ப்புடன் இயங்குவதற்கு காரணமாகும மனத்திற்குமேல் விஞ்ஞான மயமும், ஆனந்தமயமும் அமை கின்றன இவ்விரண்டும் அனுபவத்தினது ஒழுக்க நிலை களையும், மேம்படு ஒழுக்க நிலைகளையும் குறிக்கின்றன. 'விஞ்ஞானம் மயத்தின் பல கூறுகளை விளக்கும்போது உபநிடதம் கூறுவது; " நம்பிக்கை (சிரத்தை) அதனுடைய தலை அறநேர்மை (ரித) வலப்பக்கம்; உண்மை (சத்யம்) இடப்பக்கம்; ஒருமுக சிந்தனை (யோகம்) உடல்; வன்மை (மகஸ்) கீழ்பகுதி." கட்டுண்ட நிலையில் உள்ள ஜீவன்

அடையத்தக்க உயரிய அனுபநிலை ஆனந்த மயமாகும் இந் நிலையில் தற்காலிகமாக ஆன்மா அமைதியையும் இன்பத் தையும் நுகர்கிறது ஆழ்ந்த உறக்க நிலையிலும் அழகுணர் விலும் ஆன்மா இந்நிலையிலுள்ளது இவ்வனுபவத்தை மோட்சம், விடுதலை என எண்ணி மயங்குதல் கூடாது. மோஷம் என்பது ஆன்மீக விடுதலை, கட்டற்ற நிலைத்த நிலை, அனுபவ நிலைகளாகிய மற்றய மூன்று விழிப்பு கனவு, துயில் ஆகியவற்றினின்று பிரித்து உணர மோட்ச நிலையை நான்காவது நிலை என்று குறிப்பர்

தூய ஆன்மா உபநிடதங்களின் கருத்துப்படி இவ்வுட லோடு தோன்றுவதுமில்லை; அழிவதுமில்லை, ' ஞான முள்ளது (அதாவது ஆன்மா) பிறப்பதில்லை, இறப்பதும் இல்லை, எங்கிருந்தும் ஆன்மா இங்கு வரவில்லை. ஆன்மா எதுவாகவும் ஆகவில்லை பிறவாறு இடையறாது என் றென்றும் உள்ளதாக முதன்மையானதாக ஆன்மா உள்ளது உடல் அழிவுறும்போது ஆன்மா அழியுறுவதில்லை, மரணத் தின்போது உடலியக்கத்தின் ஓய்வு நிகழ்கிறது ஒருபிறப்பி னின்று மறுபிறப்பிற்கு ஆன்மா செல்கிறது அறியாமையே இவ்வாறு செல்வதற்குக் காரணம். கருவியாகிய நுண்ணு டலும் இதற்கு காரணமாகும், மறுபிறப்புக் கொள்கைப் பற்றிய விளக்கமான குறிப்பினை பிருகதாரண்யகத்தில் முதலில் காணலாம் இறந்த ஒருவனின் வெவ்வேறு உடற் பகுதிகள் அவ்வவற்றிற்குறியவை.

மூலப் பொருள்களாகிய தீ முதலியவற்றுள் ஒடுங்கிய பின்னர் இறந்த அவனுக்கு என்ன நிகழ்கிறது என்று யாக்ஞவல்கியர் வினவப் பெறுகிறார் வினவியவரைத் தனியே அழைத்துச் சென்று மறுபிறப்பைப் பற்றி விவாதித்துள்ளார். அது

''அவர்கள் சொன்னதும் 'கருமம்' ஆகும் அவர்கள் பாராட்டி யதும் கருமம் ஆகும் உண்மையிலே ஒருவன் நற்செயல் களால் நல்லவனவாகவும், தீய செயல்களால் தீயவனாகவும் ஆகிறான்." பிரிதோரித்தில் மறுபிறப்புப் பற்றி விவரமாகக் கூறுவர் மரணத்தின்போது ஆன்மா தனது உடலை உதறி விட்டு புதிய உடலுள் புகுகிறது. கம்பிளிபுழு ஒரு புல்லின் நுனிக்கு வந்தவுடன் மற்றொரு புல்லைப் பற்றுவதுபோல ஆன்மா, புதிய ஒன்றைத் தாவுகிறது பொற்கொல்லன் பலப்பல வடிவங்களைப் பொன்னில் உருவாக்குதல்போலவும் பிதிர்கள், கந்தர்வர்கள் தெய்வங்கள் பிரஜாபதி. பிரம்மா முதலியோர் வடிவங்களையும் மற்றைய உயிர் வடிவங்களை யும் உருவாக்குதல் போலவும் ஆன்மா, பிறப்புத் தோறும் புதுபுது உருவங்களில் அமைகிறது ஆன்மா புதியதாகக் கொள்ளும் உடல், அதனின் கருமத்தைப் பொறுத்தது

ஒரு மனிதனின் விருப்பமே அவனது மன உறுதி அவனது மன உறுதியே, அவனது செயல்கள்; அவனது செயல்கட்கு ஏற்பப் பயனைப் பெறுகிறான் மறுபிறப்பு விலங்கு உலகிலும் அமையலாம் கதா உபநிடதம் கூறுகிறது ''உடலைக் கொள்ளும் பொருட்டுச் சில கருப்பைக்குள் புகுகின்றன மற்றவை இயக்கமற்ற உயிர்வகைகளுள் புகு கின்றன, இப்பிறப்பு வகைகள், தத்தம் செய்வினைக்கும் அறிவிக்கும் ஏற்ப அமையும்,'' ''புகழத்தக்க ஒழுகலாறு உள்ளோர், பிராமணனாகவோ, ஷத்திரியனாகவோ, வைசிய னாகவோ பிறப்பர் வெறுக்கத்தக்க ஒழுகலாறு உடையவர்கள் இழிவான நாயாகவோ, பன்றியாகவே தீண்டாதவனாகவோ பிறப்பார்கள '' என்று சாந்தோக்கியம் கூறுகிறது ஒருவன் இறந்தால் நிரயம் (நரகம்), துறக்கம் (சுவர்க்கம், போன்ற மறு உலகட்குச் செல்வான் தனது வினைக்கேற்ப நன்மை

தீமைகளை அனுபவித்த பின்னர் இவ்வுலகில் மீண்டும் பிறப்பான் என்ற கருத்தும் உண்டு கேள்வி வகைகளில் பற்று மிகுந்து துறக்கவுலகில் நல்வினைக்குரிய பலன்களை நுகர்ந்து இவ்வுலகிலோ கீழுலக பகுதிகளிலோ பிறப்பார்கள் என முண்டக உபநிடதம் கூறுகிறது கருமக் கொள்கையை முன்னதாகவே வேதங்களில் 'ரித' என்ற கருத்தமைவின் மூலம் எதிர்நோக்குகின்றனர். வேதகாலத்தில் 'ரித' என்னும் கொள்கை, பின்னர் எழுந்த கருமக் கொள்கைக் கருத்தைக் கொண்டதாக உள்ளது. 'ரித' என்னும் சொல், பொருள்களின் நெறியினை ஒழுங்குக் குட்படுத்துவதாகப் பொருள் தருகிறது, பின்னர் ஒழுக்க நெறியினையும் குறிக்கலாயிற்று. மேலும், இஷ்டபூர்த்த' கொள்கை, வேல்விகளின் மூலமும் அறச்செயல்களின் மூலமும்ஒருவன் பெறுகின்ற தகுதிகளால் மறுமயில் இன்பம் நுகர்வான் என்பதற்கு ஆதாரமாகும். எல்லா நிகழ்ச்சிகளும் காரண காரிய ஒழுங்கிற்கு உட்படுவன காரணமின்றி எச்செயலும். நிகழாது 'அற உலகில் கருமக் கொள்கை, காரணகாரியக் கொள்கையை ஒத்தது அவரவர்க் குறிய நன்மை தீமைகளை மக்கள் அனுபவிப்பர்

ஆன்மா கருமச் சுழற்சியினின்று விடுதலைபெற இயலும் என்பதை உபநிடத மெய்பொருள் இயல் உண்மை என்கிறது இதனை நிலைநாட்டுமுன் கருதுகோளாக உபநிடதம் கொண்டது. மோஷம் அல்லது விடுதலை ஒல்வொரு மனிதனுக்கும் இலஷியமாக அமைகிறது ஆன்மா, மறுபிறப்புக்குரிய தேவையினின்று நீங்குவது விடுதலையாகும் விடுதலையாகிய இலஷியம் குறித்து இருகருத்துகள் உள்ளன மரணத்திற்குபின்னரே விடுதலைபெற இயலும் என்பது ஒன்று இங்கேயே விடுதலை பெற இயலும் என்பது மற்றொன்று. மந்திர பிராமாணப் பகுதிகளில் மறுமைக்

கொள்கைகளைக் காண்கிறோம். அவற்றின் கருத்துப்படி துறக்க உலகம் தொலைவில் உள்ளது ஆன்மா, தனது பருவுடலை நீக்கிய பின்னரே துறக்க உலகம் புகுதல் கூடும்

இக்கருத்தினைத் தழுவியே விடுதலை, மரணத்திற்குட் பின்னரே அடையக்கூடும் என்று ஒருசாரார் கொண்டனர் இக்கருத்து உபநிடதங்களில் மாற்றங்கொள்கிறது அடையாத ஒரு நிலையினைப் புதியதாக அடைதல் என்பது இங்கு நோக்கமன்று பிரமமும் ஆன்மாவும் இயல்பில் ஒத்தன உபநிடத ஞானி ஒருவர் கூறுவது: இங்கிருந்து பிரியும்போது நான் என்னுடைய ஆன்மாவாகிய பிரமத்தினுள் நுழைவேன் என்பது ஆன்மா, பிரமத்தோடு தான் ஒன்றாக உள்ள நிலையினை உணருமானால் தெய்வங்களின் நெறியிலே செல்லும் இந்நெறி (தேவயான) முன்னோர் நெறி ஆகிய பிதிர் நெறியினின்று (பிதிர்யானம்) வேறுப்பட்டது கட்டுண்ட ஆன்மா, மீண்டும் ;பிறப்பதற்கு உட்படும் நிலையில் உள்ளதால் பிதிர் நெறியில் செல்லும் பிதிர்நெறி, புகை, இரவு மாதத்தின் இருட்படும் பகுதி, தெற்கே கதிரவன் செல்கின்ற ஆறுமாத காலம், முன்னோர் உலகு, இடம் ஆகியவற்றின் வழியே நிலவிற்குச் சென்று இவ்வுலகிற்கு மீள்வதாகும்.

தெய்வ நெறி என்பது ஒளி, பகல், மாதத்தில், ஒளிபடும் பகுதி, வடக்கே கதிரவன் செல்கின்ற ஆறுமாத காலம் கதிரவன், நிலவு ஆகியவற்றின் வழியே செல்லுதலாகும் இந்நெறிகளில் வழிகாட்டிப் பிரமத்திடம் கொண்டு செல்லுபவன் மனித உருவில் இல்லாதவன். விடுதலையை முறையே பல பிறப்புகட்கு உட்பட்டு அடைதல், கிரம முக்தி அல்லது

படிமுறை முத்தி எனப்படும். இம்முத்தியை மெல்ல அடையப் படும் முத்தி என்றும் கூறலாம்,

நிஷ்பிரபஞ்சக் கொள்கைப்படி விடுதலை என்பது புதிய தாக அடையப் பெறுவது அன்று, ஆன்மாவின் இயற்கை நிலையை என்றென்றும் உள்ள நிலைத்த நிலையை உணர் தல் ஆகும் அறியாமையின் காரணமாக ஆன்மா கட்டுறு கிறது ஞானத்தின் துணையினாலே அறியாமை அகல்கிறது ஆன்மா தான் பிரமத்தின் வேறில்லை என்பதை உணர்கிறது இதுவே விடுதலை. ஆதலால் உடல் நீங்கும் வரைகாத் திருக்க வேண்டியதில்லை. ஒருவனது உள்ளத்துள் இருக்கும் பற்றுகள் அனைத்தும நீங்கியவுடன் மரணத்திற்குட்பட்டுள்ள மனிதன் இறவாமை உறுகிறான் இங்கேயே பிரமத்தை அடைகிறான். அவனது பிராணன் அகல்வதில்லை பிரமமாக உள்ளவன் பிரமம் ஆகிறான்; பின்னர் எழுந்த வேதாந்தக் கொள்கையில் இதனைச் சத்யோமுத்தி என்பர் அதாவது பற்றுக்கள் நீங்கிய நிலையில் அத்தருணமே ஆன்மா விடு தலை பெறுமிறது என்பதாகும் 'ஜீவன் முத்தி' என்பது ஜீவன் உள்ளபோதே இவ்வுலகில் வாழும்போதே முத்தி அல்லது விடுதலை அடைவது விடுதலை உண்டு என்பதில் இவ்விரு கருத்துக்களிடையே வேறுபாடில்லை. கட்டுண்ட நிலையிலிருந்து சம்சாரத்தினின்று விடுதலை பெறுதல் வீடு மோஷம் என்பதாகும் அதனைத் துன்பத்தின் நீக்கம் என்றோ. துன்பம் இன்மை என்றோ எதிர்மறையாகக் கொள் வதிலும் அதனை உடன்பாட்டில் தனியான பேரின்பம் தடை படா அமைதி என்றும் கொள்ளுதல் வேண்டும். பல உபநிடத மூலங்களில் மனிதன் விடுதலை அடைவதற்கு மேற்கொள்ள வேண்டிய நெறி, குறிக்கப்பெற்றுள்ளது. விடுதலை காணும் வேட்கையுடையவனிடத்தில் உயரிய ஒழுக்கப் பண்பாடு இருக்க வேண்டும் என்று சொல்லப் பெறுகிறது.

தீய ஒழுக்கத்தினின்று விலகாதவன் அமைதியில்லாதவன் உள்ளத்தில் குழுறல் உள்ளவன். இவன் பிரமத்தை அறிதற்கு இயலாது பிரமம் ஆன்மா பற்றிய ஆய்விற்கு இன்றியமையாத நிலையில் முன்னரே அமைய வேண்டுவது ஒழுக்கம். அதனால் உபநிடதங்கள் அறத்தொகுதிகளை விரிக்கவில்லை ஆயினும் பல மூலப் பகுதிகளில் ஒழுக்கம், நன்நெறி முதலியன வற்புறுத்தப் பெற்றுள்ளன 'கீத்' என்பார் பிராமணர்களது அறிவு நிலையில் எழுந்த முயற்சிகளை நோக்குங்கால், உபநிடதங்களில் காணும் அறக்கருத்துகள், அறத்தை வலியுறுத்தும் பகுதிகள் சில என்கிறார் பிரம-ஆன்ம ஆய்விற்கு உரிய ஒழுக்கம் வலியுறுத்தப் பெறுவதை நோக்கின் சிலர் கருத்து தவறாகிறது ஒருவன் மற்றவர்களோடு கொள்ளும் உறவால் பின்பற்ற வேண்டிய பிரபஞ்ச விதிகளையும் கூடத் தைத்ரீயம் போதிக்கிறது

பிருகதாரண்யகம், அற இயல்குறித்த மெய்ப்பொருள் உண்மைகளை மூன்று விதிகளில் அடக்குகிறது:

தன்னடக்கம் பயில்க; பெருந்தன்மையோடு வாழ்க; இரக்கம் கொள்க; இவ்விதிகள் பேய்கள், மனிதர்கள், தெய்வங்கள். ஆகிய மூவகை உயிர்கட்கும் தரப்பெறுகின்றன. பிரமத்தை உணர்ந்தவன், ஐயமின்றி விதிகளால் கட்டுறாதவனே; அவன் விரும்பிய வண்ணம் வாழலாம் என்று கூறப் பெறுகிறது அவனளவில் புறக்கட்டுபாடில்லை என்பதே பொருள். அவன் இயல்பிலேயே நல்லொழுக்கம் உடையவன் புலங்கடந்த பொருளியலறிவுடைய ஒருவது கழிந்தகால பாவங்கள் அனைத்தும் நீங்குகின்றன என்றும், அறிவினை உடையோன் நாணமற்று மிகுதீமையுள்ளதுபோல் தோன்றுகின்ற நெறியிலே தொடர்ந்து இருத்தற்கு அனுமதி

தருகிறது என்று கருதுதல், உபநிடத உண்மைகளை எள்ளி நகையாடுவதற்குரிய நிலையில் போதிப்பதாகும்.

உண்மை நிலையை மறப்பது கட்டுறவதற்குக் காரணமாகும் என்று உபநிடதங்கள் கூறுகின்றன மறதியினால் ஆன்மா, தனக்கு அயலான அகம், மனம், உடல் ஆகியவற்றோடு ஒன்றிய உணர்வினாலே பிறப்பு இறப்பு என்னும் சுழற்சிக்கு உட்படுகிறது. ஆதலால் விடுதலை என்பது இதற்குநேர்மாறான ஒருநிகழ்ச்சியாகும். அனுபவ வாழ்வின் குறுகிய எல்லைகளினின்றும், குறைகளினின்றும் முதலில் நீங்கி, எல்லைக்குட்படுத்தும் தவறுகளை உடைத்து எறிய வேண்டும் துறவு வைராக்கியம் அல்லது தியாகம் நன்கு பயிலப்படுகின்ற நிலையில், எல்லைக்குட்பட்ட நிலையினின்று நீங்குதல் எளிதாகும். உண்மை அறிவு தோன்றினாலன்றி 'துறவு' முழுமையுறாது. பிரமத்தைப் பற்றிய அறிவின் மூலமே அறியாமையை வெல்லமுடியும் இங்குக் குறிக்கப்படுகின்ற அறிவு, பகுத்தறிவு அன்று.

# சாருவாக தத்துவம்

இந்தியா ஆன்ம உணர்ச்சிமிக்க நாடு எனக் கருதுவோர் அதை முழுதும் அறிந்தவரல்லர். இக்காலத்திய 'பொருளே முதல்' எனும் கொள்கை(Materialism) எத்தகு ஆற்றலுடன் உள்ளதோ, அத்தகு ஆற்றல் கொண்டதாய் முற்காலத்தில் சாருவாக தத்துவம் நிகழ்ந்தது. ஆன்ம உணர்ச்சியுடன் அதை எதிர்ப்போரும் வாழநதனர். இவர் தம் கருத்துகளே சாருவாக தத்துவமாக மலர்ந்தன

இதற்கு மூல நூல்கள் முன் இருந்தன ஜைன, பௌத்த இந்து நூல்களில் சிதறிக கிடைக்கும் அவர்களுடைய கருத்து கள், உறைகள் ஆகியவற்றின் சில துண்டுகளே சாருவாகர் களின் கொள்கை முறையை அறிவதற்கு அடிப்படையாக அமைகின்றன

பருப் பெருளே, முடிவிறகாணும் உள்பொருள்' என்று இருக்கு வேதத்தில் 'பிரகஸ்பதி லௌகய' அல்லது 'பிராம ணஸ்பதி' என்பவரால் முன்பே கருதப் பெற்றது. பொருளே முதல்எனும் இந்தியக்கொள்கை அதன தொடகக நிலையில் கடவுள் இன்மைக கொள்கையுடனும், ஐயத்தின் நீங்காதக் கொள்கைகளுடனும் கலந்திருந்து பிரகஸ்பதி என்பவர் அதற்கு ஒரு தனி வடிவத்தைக் கொடுத்தார் இருக்கு வேதத்தில் பிரகஸ்பதி என்பவர், 'கானபதி' (Gana-pathi) (இசை வல்லோர் குழுவின் தலைவன்) என வழங்கப் படுகிறார் சாருவாகர்கள், பிரகஸ்பதியை பின்பற்றியவர்கள் அவர்கள், பிரகஸ்பதியர், லோகாயதர் என்னும் பெயர்களையும் பெற்றனர்.

இந்திய வரலாற்றில், ஒவ்வொரு காலத்திலும். சாரு வாகர் கருத்தை ஆதரிப்பவர் இருக்கின்றனர். இராமாய ணத்தில் ஜாபாலி என்பவர், 'பொருளே முதல்' எனும் கொள்கையைப் போதித்த ஆசிரியர் அவர் இராமனுக்கு கூறிய அறிவுரைகள், சாருவாகக் கருத்துகளுடன் ஒப்பிடத் தக்கவை உலகாளும் மன்னனைவிட மேலானவன் இல்லை என்பது சாருவாகர் கருத்து. அரிவம்சத்தில் காணும் 'வேனா என்ற அரசர் இக்கொள்கையை ஆதரித்தார்.

இவர் வேதத்தை எதிர்த்தவர். சமயத் தொடர்பில்லாத வர் என்று வியாசர் இவரைக் குறிப்பிடுகிறார், பழைய பௌத்த நூல்களின்படி, புத்தரோடு ஒத்த காலத்தவரான 'அறிதகேச கம்பலின்' என்பவரின் போதனைகள், சாருவாக முறையின் போதனைகளுடன் ஒத்திருந்தன இவரின்பின் தோன்றியவரான 'பாயாசி' அஜிதாவின் கொள்கைகளை ஆதரித்தார். 'பாகுரி' சாருவாகக்கொள்கைகளை ஆதரித்தவர் என்று 'மகா பாஷ்யம்' எழுதிய பதஞ்சலியால் தெரிகிறது புரந்தரர் என்பவர், சாருவாகத்தில் பண்பட்ட குழுவைச் சார்ந்தவர் என்று சாந்திரக்ஷிதா என்பவர் அவரின் 'தத்துவ சங்கிரகத்தில் கூறுகிறார். நாம் அன்றாட வாழ்க்கையில் உண்மை அறிவைப் பெறுவதற்குக் கருதல் அளவை (அனுமானம்) பயன்படுவது என ஒருவாறு ஒப்புக்கொண் டார். 'அரிபத்திர சூரி' என்பவர் எழுதிய 'சட்தர்சன சமுச் சயம்' என்ற நூலுக்கு உரைகண்ட 'குணரத்னம்' என்ற உரையாசிரியர், சில சாருவாகர்கள் வானவெளி முதலை (ETHER) ஒரு மூலப்பொருளாக ஒப்புக் கொள்கின்றனர் என்றும், ஆன்மா என்பது புலன்கள், முக்கிய ஆற்றல்கள், மனம் முதலியவற்றின் வேறானது அன்று என அடையாளம் கூறினார் என்றும் குறிப்பிடுகின்றார் இதை பிற்காலத்திய

சாருவாகக் கொள்கைகளைக் கூறுபவருமான சதானந்தர் தம்முடைய 'அத்வைத பிரம சித்தியில் கூறுகிறார், 'புத்தருக் குப் பிற்பட்ட காலத்தில், பழைய சமயப் பகைவர்களை எதிர்க்க எழுந்தவை பிராமணக் கொள்கை முறைகள், இம் முறைகளால் ஏற்பட்ட எதிர்ப்பால் சாருவாக மெய்பொருள் இயல் முறையுள் இக்கொள்கைகளை நுழைக்க நேர்ந்தது. வாத்சாயனர் காம சூத்திரத்தின் ஆசிரியர், பொருள் முதல் எனும் கொள்கை நிலவிய காலத்தில் வாழ்ந்தவர் அல்லரா யினும், அவர் புலன் இன்பத்தை விஞ்ஞான முறைப்படியும், பகுத்தறிவு முறைப்படியும் எழுதியது 'சாருவாக' முறையில் பின்பற்றுவோர்களுக்கு மிகவும் ஊக்கம் அளித்தது.

## அறிவியல் கொள்கை :-

சாருவாகர் மெய்பொருளியல் முறை அவர்களின் அறி வியல் கொள்கையை அடிப்படையாகக் கொண்டுள்ளது உண் மையறிதற்கு ஒரே வழி 'காட்சி' என்றனர். புலனால் அறியக் கூடியவைகளே உண்மையானவை. அப்புலன் அறிவுக்கு அப்பாற்பட்டவை எல்லாம் ஐயப்படத்தக்கவை கருதலளவை (அனுமானம்) என்பதை உண்மையான அறிவுக்கு ஒரே வழியாகக் கொள்ளுதல் கூடாது. ஏனெனில் அக்கருதலளவை எங்கும் பரவியதாய் (வியாப்தி) ஒருபொழுதும் கண்டறியாத் யாவற்றையும் தழுவும் தொடர்பை உண்மை அறிவிற்கு வழியாகக் கொள்ளுதல் கூடாது என்றனர். காட்சியைக் கொண்டு நாம் தெரிந்து கொள்வது, குறிப்பிட்ட 'அ' என்பது குறித்த 'ஆ' என்பதற்குத் தொடர்புடையது என்பது மாத் திரம் ஆகும். இக்குறிப்பிட்ட இவ்வறிவைக் கொண்டு எவ் வாறு அ' என்பவை எல்லாம் 'ஆ' என்பவை யாவற்றிற்கும் தொடர்புடையவை என யாவற்றையும் தழுவிய ஒரு உறுதியான கருத்தைத் நாம் கூறமுடியும்?

இத்தகைய அறிவு, சான்றுகள் அற்றது உரை அளவையும் கூடக்கருதல் அளவையால் பெறவேண்டியவை கள் ஆதலால் அகச்சான்றுகளும், நம்பத்தக்கவை அல்ல இவ்வாறு கொள்வது பகுத்தறிவுக்குப் பொருந்தாது வேதச் சான்றுகள் கூட நம்பத்தக்கவை அல்ல. இருபொருள் மயக்க மும் அறிவின்மையை ஏற்றவைகளும் மாறுபாடு கொண்ட வைகளும் வேதத்தில் உள்ளன. ஒரு மூல பாடல் விதிக்கின்ற செயல் ஒழுங்கை, மற்றொன்று மறுக்கின்றது, ஒருபோதும் அடைய முடியாத முடிவுகளை அவை கூறுகின்றன.

கருதல் அளவை முழுவதையும் தள்ளிவிட்டால அன்றாட வாழ்வு வளர்ச்சியின்றித் தேக்கமடைந்துவிடும், அதனால் பண்பட்ட சாருவாகர், கறுதல் அளவையைப் புறநி கழ்ச்சிகளைக் குறிப்பிடுகிற அளவுக்கு, அறிவைத்தரும் வழியாக ஒத்துக் கொண்டனர் கருதலளவையை இறந்த காலத்தைப் பற்றியது என்றும் வருங்காலம் பற்றியதுஎன்றும் இரு வகுப்புகளாகப் பிரித்தனர் முதல் வகுப்பைச் சார்ந்ததை ஒத்துக் கொண்டனர். ஒருபோதும் காணாதவற்றைப் பற்றிய கருதலளவையையும் அவர்கள் விலக்கி விட்டனர் நிகழக்கூ டியதென்னும் அறிவு செயல்முறைகளுக்குப் போதியது என்று சிலர் கருதினர். புகையிலிருந்து நெருப்பு ஏற்படக் கூடியது என நாம் அறிகிறோம். ஆனால் நெருப்பு உறுதியாக ஏற்படும் என்பதை அறிய முடியாது. ஆனால் ஏற்படக் கூடியது என்பதே நம்முடைய அன்றாட வாழ்வுக்குப் போதியது.

## காரண காரியத் தொடர்பு :-

எப்பொழுதும் நிகழக் கூடிய காரணம் ஒன்று உண்டு அல்லது எப்பொழுதும் ஏற்படக் கூடிய காரியம் ஒன்று உண்டு எனச் 'சாருவாகர்கள்'நம்புவதில்லை இரண்டுபொருள்களின்

காட்சிகள் மட்டும் அவற்றிற்குள் ஒரு காரணத் தொடர்பை நிலைநிறுத்த முடியாதன நாம் நெருப்பு, புகை என்ற இரண்டு செயல்களைக் காண்கிறோம். எப்படி, நெருப்பு புகைக்குக் காரணம் எனக் கூறமுடியும்? அல்லது புகை இருக்கக் கூடுமானால் நெருப்பு இன்றியமையாதது, வேறு சார்பற்றது என்றும் நாம் பிறவாத முன் சென்ற காலத்திலும் நாம் இறந்த பிறகும் அவ்வாறே இருப்பவை என்றும் எவ்வாறு நம்பக்கூடும், இக்கருதலளவை உறுதியற்றது என விலக்க வேண்டும் ஒரு நிகழ்ச்சி ஏன் நிகழ்ந்தது என்று கேள்விக்குச் சாருவாகர்கள் ஒவ்வொரு நிகழ்ச்சியும் தானே நிகழ்வது, தற்செயலாய் நிகழ்வது என விடை கூறுகின்றனர் முட்களின் கூர்மையும், பறவைகளும் விலங்குகளும் பெறும் வேறுபட்ட பலவகையாக இயற்கை அழகும், கரும்பின் இனிப்பும் வேம்பின் கசப்பும் இயற்கையாய் ஏற்பட்டவை இவை தற்செயலாய் நேருபவை இவைகள் எல்லாம் புலனுக்கு அப்பாற்பட்ட கடவுள் என்று சொல்கிற ஒருவரால் நேர்ந்த படைப்புக்கள் அல்ல. இப்பரந்த உலகம், தற்செயலாய் நேர்ந்த ஒரு நிகழ்ச்சியே. பொருள்களின் மூலமானதுகளின் தற்செயலான சேர்க்கையால் உலகம் தோன்றியது. இக்கொள்கை 'எதேச்சை வாதம்' அல்லது தற்செயல் கொள்கை எனப்பெயர் பெறும் நடுத்தரமான சாருவாகர்கள், எல்லா நிகழ்ச்சிகளிலும் இயற்கைத் தன்மையையே (சுபாவர் என்பதையே) இயக்கும் ஆற்றலாகக் கருதுகின்றனர். ஆதலினால் இயற்கைக்கு அப்பாற்பட்ட அறிவுள்ள ஒன்றைக் காரணமாகக் கொள்வது மிகையானது என்பர் இக்கொள்கை 'சுபாவவாதம்' அல்லது 'இயற்கைக் கொள்கை' எனக் கூறப்படும்.

## பொருள் :

சாருவாகர்கள் நிலம், நீர், காற்று, நெருப்பு என்று நான்கை மட்டும் மூலப் பொருட்கள் என்பர். இந்நான்கும் என்றும் உள்ளவை. பிரஸ்ன உபநிடதத்தில் கபந்திகாத் யாயனர் என்ற ஞானி இதே கருத்தைப் பகர்கிறார். ஆகாசத் தைப் பழைய சாருவாகர் மூலப்பொருளாகக் கொள்ளார், ஏனெனில் அது காட்சிக்கு உட்படாதது ஆதலின் உயிருள்ள உயிரில்லா எல்லாப் பொருள்களும் மூலப் பொருள்களின் தன்மையால் ஏற்பட்டவை, பொருளேமுடிவான உள்பொருள் பிரகஸ்பதி என்பவர் கூறிய, 'பொருளிலிருந்து உயிர் தோன் றுகின்றது' எனும் உறுதியில் இக்கருத்து உள்ளடங்கி இருக் கிறது. பிரகஸ்பதி கூறியது இருக்கு வேதத்தில் பரமேஷ்டி என்பவர் கொண்ட சமயப்பற்று அற்ற ஐயக் கொள்கையின் அடிப்படையில் எழுந்ததாகலாம்.

## உணர்வு நிலை :

உணர்வு என்பது உடலின் தன்மை பொருளின் நுண் துகள்கள் அறியொணா முறையில் சேர்ந்து மனித உயிர் அமைப்பாக மாறுதல் அடைகின்றபோது இவ்வுணர்வு தோன்றுகிறது. போதையைத் தாமேதனி நிலையில் தாராத பொருள்கள், ஒன்று சேரும்போது போதை உண்டா வதுபோல, இம்மன நிகழ்ச்சி நிகழ்வதாகச் சாருவாகர் விளக்குகின்றனர். மண நுகர்வுகளை எல்லாம் ஏற்கும் ஆன்மா என்ற உடற்சார்பற்ற, ஒரு பொருள் இல்லை. உடலே ஆன்மாவாகும் நான் மெலிந்தவன், நான் பருத் தவன் என்ற சொற்களில் 'நான்' என்பதற்கு உடலைத் தவிர வேறொன்றும் உறுதியான பொருளாகாது உடல்

கலையும்போது இவ்வுணர்வு நிலை மறைக்கின்றது உடலின் மூலப் பொருட்களோடு கலந்துவிடுகிறது அதனால் மறு பிறப்பு, வினைக்கேற்ற தண்டனை என்பனவெல்லாம் பொருளற்றவை. பருப் பொருளிலிருந்து உணர்வு நிலை தோன்றியதாகப் பிருகதாரண்யக உபநிடத்திலும் குறிப்பு காணப்படுகிறது. உடலையும், ஆன்மாவையும் ஒன்றெனக் காண்பதற்கு சாந்தோக்யம் கூறும் இந்திர விரோசனா என்னும் சிறுகதை, நேர் ஒப்புமை ஆகும்.

*சமயம் :*

சாருவாகர் கொள்கைப்படி சமயம் இயற்கைக்கு அப பாலாயது பலவகை உலக நிகழ்ச்சிகள் எல்லாம், பொருள் களின் இயற்கைத் தன்மையிலிருந்து தாமே உண்டாவன படைக்கும் கடவுள் இல்லை கடவுள் இருந்தால் தம் இருப்பை பற்றிய ஐயங்களை அவர் ஏன் போக்கவில்லை? இவ்வுலகை ஆளும் அரசனே கடவுள்.

*விடுதலை :*

சாருவாகர் நேர்க்காட்சி வாதத்தோர் ஆதலின் உடலி னின்று ஆன்மா வேறானது அல்ல என்பதால் இன்பதுன்ப மற்ற நிலையை அடைதல் என்பதை ஏற்றமாட்டார் மோட்சம் என்பது சார்பற்ற தனித்தன்மை நிலை அல்லது தடையில்லா ஆற்றல் அல்லது உடல் அழிந்து போவதாகும் என்பர் சுவர்க்கம் நரகம் ஏமாற்றிப் பிழைப்போரின் உரு வாககம், இவ்வுலகின் வேறான சுவர்க்க நரகம் இல்லை இன்பமே சுவர்க்கம், துன்பமே நரகம், இன்பத்தைத் தேடு வது ஒன்றே மனிதன் தொழில்

## வாழ்க்கையின் குறிக்கோள் :

பொருள் முதல் வாதிகளான சாருவாகர் இவ்வுலகம் துன்பம் நிறைந்தது என்பதை ஏற்கமாட்டார். இவ்வுலகின் இன்பம் ஒன்றே 'உண்மையானது' இன்பம் புலன்வழி இன்ப நுகர்வே வாழ்வின் குறிக்கோள். இன்பம் ஒருபோதும் தூய்மை பெற்றதன்று துன்பத்தினின்றும் நீங்கியதன்று இவ்வுலகில் துன்பத்தினும் இன்பமே மிகுந்துளது. துன்பம் எங்குமிருப்பினும் இன்பமே மிகுதியாயுளது, அவ்வாறில்லை யெனின் மனிதர் ஏன் வாழ விரும்புகின்றனர்? இறப்பு என்ற உடன் ஏன் பயப்படுகின்றனர்? நாம் இன்பம் நுகர்வதும், தவிர்க்கமுடியாதபடி தொடரும் துன்பத்தை விலக்கிக்கொள்வதுமே அறிவுடைமை. மீனில் முட்கள் இருப்பினும் அதை விலக்கி மீன் உணவைக் கொள்ளவில்லையா? உலகத்தை அது உள்ளவாறே துணிவுடன் நோக்க வேண்டும்.

—o—

# பக்தர் தத்துவம்

இவ்வுலகில் எந்த இன்பத்தை நாம் வருமபப பெறு றாலும் அவை உருவத்தாலும் காலத்தாலும் அளவிடப் பட்டதாகவே இருக்கும். நம் உடலில் உள்ள ஐம்புலன்களின் உணர்ச்சிக்கே அவை இலக்கானவை, ஆகையால்தான் அவை சிற்றின்பம் என்படுகின்றன வேதாந்த நூல்களில் க்ஷுத்திர பலன் (தாழ்ந்த பலன்) என்று கூறப்படுகிறது, அவ் வின்பத்தைப் பெறுவதும் முன்பு எவ்வளவோ துன்பத்தை அநுபவித்து நல்வினை செய்த பிறகுதான் அற நூல்களில் இவற்றுக்கு ஐஹிக புருஷார்த்தம் எனப்பெயர்; இம்மைப் பயன் என்பர் தமிழில் ஆமுஷ்மிகம், அதாவது மறுமைப் பயனும் அதுபோன்றதே மறுமைப் பயனாவது, இவ்வான் மாக்களுக்கு இவ்வுடலிலிருந்து பிரிந்துபோய் மறுபிறவியில் இவ்வுலகிலோ விண்ணுலகிலோ பெறப்படுவது, அதுவும் இம்மையிலேயே இப்பிறவியிலேயே வேள்வி-அறம் தவம் முதலிய வேத நூற்களில் விதிக்கப்பட்ட நன்னெறிகளைச் செய்து மெய்வருத்திப் பாடுபட்டுப் புண்ணியம் ஈட்டுதலால் தான் கிடைக்கத் தக்கது அப்புண்ணிய கருமங்களை எவ் வளவோ தடங்கல்களை எதிர்த்து நடத்த வேண்டியுள்ளது மேலுலகத்திலும் பயனை அநுபவிக்கும்போதும் அதன் நிலைத்து நில்லாமையை உணர்ந்தோர் மனவருத்தத்துடனும் "இது முடிந்து விடுமோ" என்னும் அச்சத்துடனும்தான் அனுபவிக்கின்றனர்

எண்ணெயும் திரியும் குறைந்துவிட்டால் தானாகவே விளக்கு அணைந்துவிடும், தேடிய செல்வமும் சமைத்த

உணவும் செலவழிந்தும் அன்றைய பசியைத் தீர்த்தும் அழிந்துவிடும் ஓரிரு பிறவிகளில் நற்பயன் பயக்கும் அறம், அதுவும் ஆன்மாவிற்கு மறுபிறவியில்லாமல் நிலைநின்ற பேரின்பமாகாது.

ஆகவே, வடமொழி, தமிழ் வேதாந்த நூல்களைக் குருக்களிடம் துயக்கு மயக்கறக் கற்றறிந்த சான்றோர் இம்மை மறுமைப் பயன்களை விடுத்து நிலையான பேரின்பம் பெற வேண்டுவர். அதைப் பெறுமாறு எது என்று உணர்ந்து அதிலே முயலுவர் உபநிடதங்கள் எனப்படும் வேதாந்தங்களும் பிரும்மாநந்தம் அதாவது இறை இன்பம், என்று அதையே பலவாற உணர்த்துகின்றன. அதை விரும்புவோர்கள் முமுட்சுக்கள் எனப்படுவர். அதற்கு வீடுபெற விரும்புவோர் எனப் பொருள் கூறலாம். அவ்வின்பமே மனத்தால் நினைத்து இவ்வளவுதான் என்று அறுதியிட்டு வாயால் கூற இயலாததும் ஐம்புலன்களுக்குமப்பாற்பட்டதுமானது அநாதி காலமாகத் தொடரும் கருமங்கள் என்னும் திரை நீங்கப்பெற்று முழுவதும் மலர்ச்சியடைந்த பேரறிவால் காலமுள்ள வரையிலும் தெவிட்டாது அநுபவிக்கப்படுவதென்று தத்துவ நூல்கள் விளக்குகின்றன. அதுவே இறைவனடியார் வேண்டும் பயனாவது

இக் கருத்தை வைணவப் பெரியார்களுள் ஒருவரான வேதாந்த தேசிகரின் பாசுரத்தில் காண்போம்,

*"நின்ற புராணன் அடியிணை யேந்தும் நெடும்பயனும்*
*பொன்றுத லேநிலை என்றிடப் பொங்கும் பவக்கடலும்*
*நன்றிது தீயதி தென்று நவின்றவர் நல்லருளால்*
*வென்று புலன்களை வீடிணை வேண்டும் பெரும்பயனே'*

1 தேசிக பிரபந்தம் 53

என்பது தேசிகப்பிரபந்தத்தில் அதிகார சங்கிரகப்பாசுரம். வைணவ சமயப் பெரியோர்கள் வைணவ சமய ப்ரவர்த்தர் களான சான்றோர்களை ஆழ்வார்கள் என்றும், ஆசாரியர்கள் என்றும் இருவகையாகப் பணிப்பர், அவ்வாசாரியர்களில் எம்பெருமானார் எனப்படும் இராமாநுசருக்குப் பிற்பட்டவர் வேதாந்த தேசிகர் ஆவார். இவ்வாசாரியர்களும் ஆழ்வார் களும் நம் போல்வர்கள் உய்ந்து மேன்மை பெறுவதே தம் பிறவிப் பயன் என்ற கருத்துடையவர்களாக இருந்தனர், ஆதலால் பாசுரங்கள் மூலம் தம் கருத்துகளை வெளியிடுகின்ற னர். பாசுரம் என்ற சொல்லுக்குப் பாக்கள், செய்யுட்கள் என்பது பொருள். இப்பாசுரத்தின் கருத்து நம்மாழ்வார் முதல் இராமாநுசர் வரை உள்ள சமய குரவர்கள் நல்லரு ளால் அவர்கள் 'இது நன்று' என்று நவின்றது நமக்குநன்று என்றும், அவர்கள் வெறுத்து 'இது தீயது' என்று ஒதுக்கியது நமக்கு தீது என்றும் அவற்றை உணர்ந்தவர் தீயவற்றி லிருந்து புலன்களை வென்றும் பெரும் பயனாகக் குறவர்கள் நவின்ற வீட்டினையே பெறவேண்டும் என விரும்புவர்.

பிரளய காலத்தில் அழிந்த இவ்வுலகத்தைப் படைத்துப் பிறகு காத்து நிகரற்றவனாய் நின்ற புராண புருடனாகிய திருமாலின் இணைந்த திருவடிகளைத் தங்கள் தலைகளில் ஏந்துவதே நெடும்பயனாகிய நன்று என்பதும், பொன்று தலையே—அழிந்து போவதையே—நிலையான தன்மையாக உடைய பிறவிக் கடலே தீது என்பதும் அவர்தம் துணிவாகும்

இறைவனை வேண்டி நாம் பெற்ற தகுந்த பயன்களைக் கண்ணபிரான் கீதையில் யோகம், க்ஷேமம், கைவல்யம் மோட்சம் என நான்கு வகைகளாகப் பிரித்து அவைகளைத் தன்னைத் அண்டித்தன் அன்பர்கள் பெறுவார்கள் என்று

உரைத்துள்ளான். பூருவர்கள் யோக க்ஷேமங்களை ஐச்வர் யம் என்பதாக ஒன்றாக்கிப் பெறப்படும் பயனை மூன்று வகை யாகப் பிரித்துப் பேசுவார்கள்.

ஆழ்வார்கள் அம்மூன்றிலும் ஆராய்ந்து ஐசுவர்யம் கைவல்யம் எனப்படும் சிற்றின்பங்களை ஒதிக்கிவிட்டு மோக மெனும் பேரின்பத்தையே தாம் விரும்புவதாகவும் பிறர்க்கும் பெறத்தகுந்ததும் அல்லது பெறவேண்டியதும் அதுவே எனவும் பாசுரங்களால் தெளிவுபடுத்திருக்கின்றனர் திருமா ளருளால் மயர்வற மதிநலம் பெற்ற நம்மாழ்வார் அருளிச் செய்த பாசுரங்களை ஆராய்வோம்

*கண்டுகேட் டுற்றுமோந்*
*துண்டுழலும் ஐங்கருவி*
*கண்டவின்பம், தெரிவரிய*
*அளவில்லாச் சிற்றின்பம்*
*ஒண்டொடியாள் திருமகளும்*
*நீயுமே நிலாநிற்பக்,*
*கண்டசதிர் கண்டொழிந்தேன்*
*அடைந்தேனுன் திருவடியே.*

திருவாய் 4, 9' 10

என்பது திருவாய்மொழிப் பாசுரம், நம்மாழ்வார் யோக தசை யில் அகக்கண்ணால் தான் கண்டு கொண்ட பெருமானை நேரே விளித்துச் செய்யும் விண்ணப்பமாக அமைந்துள்ள பாசுரம் ''கூட்டுதி'' என்று தொடங்கும் கீழ்ப் பாசுரத்தில் ஆழ்வாரின் பக்திக்கு வயப்பட்ட பரமன் அவர்மீது பேரருள் சுரந்து இவ்வுலக இயல்புகளை ஞானக் கண்ணால் அவருக்கு

காண்பித்து இவ்வுலக இன்பத்தின்கண் ஏற்பட்ட வேட்கையை விடுவித்தான். அஃதுடன் தன் திருவடிகளின் அழகு, மேன்மை இனிமை முதலான போக்யதாதிசயங்களையும் காண்பித்து அதிலே அவருக்கு அளவற்ற அவாவைப் பிறப்பித்தான் அதனால் பெரு மகிழ்ச்சியுற்ற ஆழ்வார் தான் அப்படியே விட்டது எது என்பதையும் அப்படியே பற்றியது எது என்ப தனையும் இப்பாசுரத்தால் விண்ணப்பிக்கின்றார். இவ்வி டத்து "கண்ட இன்பம்" என்பது ஐசுவரியம்; 'அளவில்லாச் சிற்றின்பம்" என்பது கைவல்யம் 'திருமகளும் நீயுமே நிலா நிற்பக்கண்ட சதிர்' என்பது மோட்சநிலை வைணவ சமயத் தில் இப்பூத உடலை நீத்து அர்ச்சிராதி' என்கிற வழியாகச் சென்று பிரும்மாண்ட சுவர் ஊடே நுழைந்து நித்திய விபூதி எனப்படும் 'வைகுந்தம்'சென்று முழுமுதற்கடவுளான அநந்த கல்யாண குணக்கடலான இலக்குமிநாராயணனை அடைந்து பரிபூரனத்துவம் பெற்ற ஆன்மா திருவடி தொழுது கொண்டு பிறவிக்கடலில் மறுபடியும் வராமல் இன்பம் பெறுவதே மோக்கம் என்று ஆழ்வார்கள் அறுதியிட்டுள்ளனர்

*தேரார் நிறைகதிரோன்*
*மண்டலத்தைக் கீண்டுபுக்கு*
*ஆரா அமுதம் அங்(கு)*
*எய்தி—அதினின்றும்*
*வாரா தொழிவதோன் றுண்டு*

சிறிய திருமடல்—கண்ணி

என்பது சிறிய திருமடல்

*ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி*
*வழுவிலா அடிமை செய்ய வேண்டும்நாம்,*
*தெழிகு ரல்அரு வித்திரு வேங்கடத்து,*
*எழில்கொள் சோதி எந்தை தந்தைகே.*

*திருவாய் 4. 3:1*

என்றும்,

*கண்ணன் கழலிணை*
*நண்ணும் மணம்6*

ஷை 10 5; 1

என்றும் இப்படித் திருவாய் மொழியில் பலவிடங்களில் காணலாம். 'சூழ் விசும் பணிமுகில்' என்று தொடங்கும் முதல் பத்துப் பாசுரங்களால் வைகுந்தத்தின் சிறப்பை நன்கு எடுத்துக் கூறியுள்ளார் ஆழ்வார்.

இப்பாசுரத்தில் (4, 9:10) "அழகிய இடையை உடைய திருமகளுடன் நீ நின்ற நிலையாகிய மோட்சத்தைக் கண்டு" மற்றொரு பயனை விட்டொழித்தமையைக் கூறுவதால் ஆழ்வார் வேண் டும் பய்ன் ஈதே எனத் தட்டில்லை.

ஐஹிகம், ஆமுஷ்மிகம் எனப்பட்ட இவ்வுலகிலும் மறு உலகிலும் முறையே பெறும் பயன்கள் சிறிய ஐம்பொறிகளுக் குட்பட்ட இன்பமே. எனவே "கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவி கண்ட இன்பம்" (4,9:10) மெனச் சேர்த்துச் சொல்லப்பட்டது. கண்ணால் கண்டு, மூக்கினால் மோந்தும், நாவினால் சுவைத்தும், செவியால் கேட்டும்

மெய்யால் தொட்டும் உணரப்படும் நிறம். நாற்றம், சுவை ஒலி. ஊறு எனப்படும் ஐந்து இயல்புகள் கொண்ட பொருள் களே ஐசுவரிய மெனப்படுவன உலகோர்கள் இவற்றில் உழல்கின்றனர். ஆழ்வாரின் வைராக்கிய நிலையோ 'இவை ஒழித்தேன்' என்னும்படியுள்ளது, பொன் விலங்கானாலும் பிணைப்பு துன்பம் தருவதே.

இவ்வான்மாவுக்குக் கதிரவன் ஒளிபோல் எங்கும் பரவிக் கிடக்கத் தகுந்த ஞானம் (அறிவு) என்னும் குணம் புண்ணிய பாவகருமங்களென்னும் திரைக்குள் பெட்டியிலிட்ட மாணிக் கத்தின் ஒளிபோல் ஸம்ஸார நிலையில் சுருங்கிக் கிடக்கும் ஆகையால் மனம் புலன்கள் என்னும் சாளரங்கள் வழியாக ஞானமெனும் ஒளி வெளிக்கிளம்பிப் புறப்பொருள்களுடன் சேரும்போது பானைப்பாலிலிருந்து உழக்காலே அளந்து சிறிதளவு பால் குடிப்பார்போல் சிறிய புலன்களால் அளந்து இன்ப உணர்ச்சியைப் பெருகிறோம் இவ்வுணர்ச்சி வயப்பட்டு நாம் புலன்களால் தீய செயல்களும் புரியத் துணிவுகொள் கிறோம்.

நடுவழி போகும் வழிப்போக்கர்களைக் கள்வர்கள் துன் புறுத்துவதுபோல் நல்வழி நடந்து செல்லும் ஆன்மாவை ஐம்புலன்களும் வழிமறித்துத் திகைக்க செய்கின்றன என்று ஆழ்வார் முறை இடும் பாசுரம் இது.

*ஆவி திகைக்க ஐவர் குமைக்கும் சிற்றின்பம்*
*பாவி யேனைப் பலநீ காட்டிப் படுப்பாயோ!*
*தாவி வையம் கொண்ட தடந்தா மரைகட்கே*
*கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ*

*திருவாய்,* 6 9:9

என்று திருவாய்மொழி கூறும். இப்பாசுரத்தில் புலன்களை "ஐவர்" என்று உயர்திணையால் ஐந்து மனிதர்களாக உருவகப்படுத்தி அவற்றுக்கு உட்பட்ட பொருளாக ஆன்மாவை "ஆவி" என அஃறிணையால் சடப்பொருளாக உருவகப் படுத்தி காண்பித்தப்படி கவனிக்க தக்கது தன்னை தன்வய படுத்திக் கொள்ள அறிவுத்திறன் படைத்த ஆன்மா புலன்கள் இட்ட வழிச் செல்லுவது முன்பிறவிகளில் செய்த பாவத்தின் விளைவு என்பதை 'பாவியேனை" என்பதாலும் "நீ காட்டிப் படுப்பாயோ" என்பதால் அப்பாவங்களையும் பலன் கொடுக்கும்படி நடத்துவது இறைவனே என்பதையும் குறிப்பிடுகின்றார் ஆழ்வார்.

இவ்வுலகில் பெருஞ்செல்வம் திரட்டுவதே குறிக்கோளாக வாழ்வோர் பலராக இருக்கும்போது ஆழ்வார் செல்வத்தைக் கண்டு பெருந்தீயைக் காண்பாரைபோல வெகு தூரம் ஒதுங்கிச் செல்லும் இயல்பு உடையவர். அக்கருத்தைக் கொண்ட பாசுரம் ஒன்றை இங்குக் காண்போம்.

"கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம் நெருப்பாக
கொள்ளென்று தமம்மூடும் இவைஎன்ன உலகியற்கை?
வள்ளலே! மணிமண்ணா! உனகழற்கே வரும்பரிசு,
வள்ள செய் தடியேனை உனதருளால் வாங்காயே,"

திருவாய் 4. 9:4

என்பது திருவாய்மொழி ஏற்பானை கிணற்றிலிருந்து நீரை மொண்டு மேலே எழும்போது நாம் வேண்டாமென எண்ணினாலும் அது நீரை இறைக்குமாப்போலே. "நின்னையேதான் வேண்டும் செல்வம் போல்" (பெருமாள் திருமொழி 5:9) என்றபடி 'என்னைக்கொள், என்னைக்கொள்' என்று கிளர்ந்து எழுந்து வருமாம் செல்வம் ஆகில் அதைப்

பெறுவதில் என்ன தவறு? என்று நினைப்பதே உலகோர் இயல்பு ஆனால் அது நெருப்பாகிப் பெறுவோரை எரித்து அழியச்செய்யும் என்பது இவர் நினைவு. செல்வம் பெற்ற வனின் இனிய வாழ்க்கைக் கண்டு ஏழையர்கள் மனத்தில் எரியும் பொறாமைத்தீயே அவனை அழியச்செய்யும் என்பது கருத்து, இன்னும் இவற்றால் வரும் கேடு "கொலஞ்சென்று தமம் மூடும்" என்பது தனத்தால் பெருங்கேடு வரும் என்பதை உணர்ந்தவர் தனைக்கூட அது தமோகுணத்தால் பேராசையைக் கிளப்பித் தன்னை இன்னும் 'கொள்! கொள்!' எனத்தூண்டும். இங்கு வீடுமர், துரோணர், கன்னன் முதலான அதிரத மகாரதர்களான வீரர்கள் பட்டுப்போகா நிற்கக்கண்டும் துரியோதனன் சல்லியனைக்கொண்டு பாண்டவர்களை வெல்லப் பார்ப்பது என்று சான்று காட்டி யுள்ளார் உரையாசிரியர். இவை வியக்கத்தக்க உவமையாகும் "வேண்டியவற்றையெல்லாம் வரையாது கொடுக்கும வள்ளலே, எத்தனைப் பிறர்க்கு ஈந்தும் சாணைப்பிடிக்கும மணியைப்போல் ஒளி கிளர்ந்துவரும் மணிவண்ணா! உன் வீரக்கழல் பூண்ட அழகிய திருவடிகளாகிற பெருஞ்செல் வத்தைக் கண்ட எனக்கு இவ்வுலகோர்களின் இயல்பு எப்படி பொருந்தும்? இவர்களிடமிருந்து என்னைப் பிரித்து உன் வள்ளல் தன்மையாலும் அருளாலும் உன் திருவடியருகிலே என்னைச் சேர்த்துக்கொள்" என இறைஞ்சுகின்றார் ஆழ்வார்.

'மனிதர்கள் கதிரவன் உதயமானால் நம் புணி செய்து செல்வம் சேர்போம் என்று மகிழ்வர்; கதிரவன் மறைந்துவிட் டால், இரவு இன்பத்தை நினைத்து மகிழ்ந்திருப்பவர் ஓட்டைப் பானையிலிருந்து ஒழுகியோடும் நீர்போல் நம்

ஆயுள் வீணாகப் போவதை உணர்ந்து வருந்துவார் யாருமில்லை'' என்ற கருத்துள்ள வால்மீகி ராமாயணச் செய்யுள் ஒன்று உண்டு, நம்மாழ்வார் அதற்கு முற்றும் விலக்கான இயல்புடையவர். ஆகவே, அவர் ''இப்பிறவிக் கடலிலே இனி ஒருக்ஷணமும் என்னால் இருக்க இயலாது,'' இருள் தருமா ஞாலத்துள் இனிப் பிறவியான் வேண்டேன்'' ''கூவிக்கொள்ளும் காலம் இன்னும் குறுகாதே'' என்று இறைவனை பலவாறு வேண்டுகிறார். திருமாலடியார்கள் எவரும் எவ்வுலகின்பத்தையும் எச்செல்வத்தையும் பதர்போல் நினைப்பவர்கள் தான் அரசனாக அரியணையிலமர்ந்து ஆட்சிபுரியச் செய்தேயும் குலசேகராழ்வார்,

*''அனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ*
*வானாளும் செல்வமும் மண்ணரசும்யான்வேண்டேன்*

பெருமாள் திருமொழி 4;2

என்று பாசுரமிடுகின்றார், இப்படி ஐசுவரியம் நிலையற்ற தன்மையைத் தான் கண்டு அது தனக்கு வேண்டியதல்லவென்னும் ஆழ்வார் பிறர்க்கும் அதன் நிலைமையைக் கூறி அவர்கள் அனர்த்தப்படாமல் இருக்க நினைக்கின்றார்

*''ஒருநா யகமாய் ஒட உலகுட னாண்டவர்*
*கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்*
*பெருநாடு காண இம்மை யிலேபிச்சை தாம்கொள்வர்*
*திருநா ரணன்தாள் காலம் பெறச்சிந்தித் துய்மினோ*

திருவாய் 4, 1:1

என்பது திருவாய் மொழி. முன் செய்த நல்வினையனாக ஒருவன் பேரரசனுக்குப் பிள்ளையாய்ப் பிறக்கின்றான். வாலிப வயது வந்த உடன் முடிசூடி அரியணையிலமர்ந்து இவ்வுலகம் முழுவதற்கும் நிகரற்ற தனியரசனாக ஆட்சி செலுத்துகின்றான், உலகமெல்லாம் அருளால் ஆளும் இறைவன் இருக்கப் பாண்டரங்க வாக தேவன் போல அவன் தன்னையே ஈசனெனக் கருதுகின்றான் கோசல நாட்டுச் சக்கரவர்த்தியான தயரதன் போல் அறுபதினாயிரமாண்டு ஆள ஆசைப்படுகின்றான். காலத்தின் போக்கு தெய்வ சங்கல்பத்தால் மாறுகின்றது. பலமுள்ள பகைவர்களின் படை எடுப்பால் அரசு பறிபோய் உயிர்தப்பி அவன் மாறு வேடத்துடன் வேறொரு நாட்டிற்கு விரைந்து செல்கின்றான் பசியைப்போக்க வேறு வழியின்றிப் பிச்சை எடுக்கிறான், பிறர் தன்னைப் புரிந்து கொள்ளாமலிருக்க இருட்டு வேளையிலே வெளிவருகின்றான். அப்போது குட்டிபோட்ட நாய் நிறத்தில் கரியது; குட்டிக்கு மனிதர் என்ன தீங்கு செய்வரோ? என்று வெறியுடன் இருக்கின்றது. இவன் இருட்டில் வழியறியாது அக்கரு நாயின்மேல் காலை இடுகின்றான் உடனே அது காலைக் கவருகின்றது. முன்பு அரசனாக இருந்தபோது வீரக்கழல் அணிந்த காலுக்கு இப்போது இதுதான் பரிசு முன்பு பொற்கலத்தில் பாலும் சோறும் உண்டவன் இப்போது உடைந்து வீதியிலே போடப்பட்ட மூண்பானையில் பிச்சை எடுத்த சோற்றைத் தின்ன வேண்டியுள்ளது காலைக் கருநாய் கவரவே, அதுவும் சோற்றுடன் கீழே விழுந்து சிதைந்து போகின்றது. இதைக்கண்ட நாட்டார் எல்லாரும் அக்கம்பக்கத்திலிருந்து வருகின்றனர். அவர்கள் இவனை அடையாளம் கண்டுகொள்வர். 'இப்படித் துன்பத்திலே முடிவுறும் அரச போகம் நிலையற்றது எனக்

காணும் உலகோர்களே, காலம் பெறத் திருநாரணன் தாள் சிந்தித்து உய்மினோ" என இப்பாசுரத்தால் உபதேசம் செய்கின்றார் ஆழ்வார். இப்படி நிலையற்ற ஐசுவரியமும் ஐம்பொறிகளால் உணரப்படும் சிற்றின்பமும் வேண்டாம் என்று "ஒழிந்தேன்" என்கிறார். இவ்விதம் "தெரிவரிய அளவில்லாச்சிற்றின்பமும் ஒழிந்தேன்" என்பதால் கைவல்ய புருஷார்த்தத்திலும் தனக்கு ஆசையற்றமையைக் காட்டுகின்றார்.

"தேறவியம்பினர் சித்து மதித்துமிறையுமென, வேறுபடும் வியன் தத்துவம் மூன்றும்" என்றபடி சித்து அசித்து இறைஎன்பதாகப் பொருள்கள் மூன்று வகைப்படும். அசித்து என்பது அறிவற்ற உடல், புலன், பொருள், வீடு, மனை நிலம் முதலிய பூதங்கள் இவை "நான்" என்று நம்மால் உணரப்படும் ஆன்மா சித்து எனப்படும் இவற்றினெங்கும் கரந்திருக்கும் இவைகளை நடத்தும்,

*திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசை*
*படர்பொருள் முழுவது மாயவை யவைதொறும்*
*உடல்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்*

திருவாய் 1 1:7

என்கிறபடியே இவையனைத்துக்கும் உயிராணவன் இறைவன் இவற்றுள் அசிதின் அநுபவம் ஐசுவரியம்; சித்தின் அநுபவம் கைவல்யம்; இறைவனைக் கிட்டியநுபவிப்பதை மொக்கமெனக் கொள்ளலாம்.

புலன்களால் உள்ளபடிக் காண இயலாமையால் கைவல்யம் எனப்படும் ஆன்மாநுபவம் தெரிவரியது ஆன்மா

அழிவற்றபடியால் அவ்வநுபவும் அளவில்லாதது ஆகிலும் பகவதநுபவமாகிய பேரின்பத்தைக் காணும்போது இது மிக்ச் சிறியது. ஆகவே "தெரிவரிய அளவில்லாச்சிற்றின்பம்" எனப்பட்டது இவ்வான்மாநுபவத்தில் ஆசையேற்பட்டால் ஆற்றுப்பெருக்கிலே சுழலில் சிக்கியவரைப்போலே இதனிடத்திலிருந்து மீளமுடியாமையால் ஆழ்வார் இதையும் தான் ஒழித்தமையை வேறொருபாட்டிலும் வெளியிட்டார் அப்பாசுரமாவது,

"குறுகா நீளா இறுதி கூடா எனையூழி
சிறுகா பெருகா அளவி லின்பம் சேர்ந்தாலும்
மறுகா லின்றி மாயோன் உனக்கே யாளாகும்
சிறுகா லத்தை யுறுமோ அந்தோ தெரியிலே"

திருவாய் 6.9;10

என்பது எம்பெருமான் நம்மாழ்வாரைப் பார்த்து வினவுகின்றார்: "ஆழ்வீர்! ஐம்புலன்களால் அறியத் தகுந்த நுகரும் பொருள்கள் உருவில் சிறியவாய்க் காலத்தால் அழிவனவாய்த் துன்பங்கலந்தனவாய் காணப்படுவதால் வேண்டிற்றிலீர்; ஆனாலும் உருவத்திலும் காலத்திலும் பெரியதாயும் நிலையானதாயும் உள்ள இன்பமான ஆன்மாநுபவமாகிற கைவல்யம் என்னும் புருஷார்த்தத்தை ஏன் பெற்றுக்கொள்ளலாகாது?" என்று அதற்கு ஆழ்வார் இறைவனை விளித்து விடையளிப்பதாய்ப் பாசுரம் அமைந்துள்ளது "எம்பெருமானே! நான் உனக்கே அடிமை செய்தின்புறும் சிறிய காலத்திற்கும் அவ்வான்மாநுபவம் நிகராகுமோ? "குறுகா நீளா"—ஐசுவரியாநுபவம் இளமை

யிலும் முதுமையிலும் குறுகியும், வாலிபத்தில் சிறிதளவு நீண்டும் இவ்வித ஏற்றச் சுருக்கமுள்ளதாயிருப்பினும் கைவல்யம் குறுகாமலும் நீளாமலும் ஒரே நிலையில் இருக்கும் "ஏனையூழி இறுதிகூடா"—கேள்வி தவம்—முதலிய அறப் பயனான சுவர்க்க இன்பமும் புண்ணியம் முடித்ததும் நின்று விடும். பிறகு இவ்வுலகிற்கேவர நேரிடும் ஆனால் கைவல்யம் நீண்டகாலம் அனுபவிக்க முடிகின்றது இப்படிப்பட்ட அளவியின்பம் சேர்ந்தாலும் அது எனகு வேண்டாம். உன் கல்யாண குணங்களுக்கும் வடிவழகிற்கும் தோற்று உன் அடியிணைகளுக்கு ஆட்செய்யப் பணிக்கும் எனக்கு அது ஒரே ஒரு தடவை, மறுகால் இன்றி, சிறுகாலத்திற்கே கிடைக்கத் தகுந்ததாய் இருப்பினும் எனக்கு அவ்வடிமைத் தொழிலின்பமே வேண்டுவது கைவல்யம் அதற்கு நிகரா குமோ?" என்று தன் உறுதியை தெரிவிக்கின்றார், இப்படி "ஐங்கருவிகண்ட வின்பம், தெரிவரிய அலவில்லாச் சிற்றின் பம்". ஆகிய அவ்வின்பங்களை ஒதுக்கித் தள்ளி ஒரே பேரின் பத்தை நோக்கும் உணர்வுடையவராகையால் இவ்வாழ்வார் களை 'ஒரு மதியன்பர்கள்' என்றும், 'பரமை காந்திகள்' என்றும் சொல்வார்கள் பூருவர்கள். "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்டசதிர் கண்டார்"— பெரிய பிராட்டியாகிய திருவும், அவளுடன் எம்பிரானும் கலங்காப்பெரு நகரமாம் வைகுந்த விண்ணகரில் நித்திய சூரிகள் எனப்படும் விண்ணோர்களின் திருஓலக்கத்திலே வானிளவரசாய் "வீற்றருந்தேழுலகும் தனிக்கோல் செல்ல" நின்ற நிலையை, இவ்வற்புதத்தை, உன்னருளால் மயிர்வற மதிநலமருளப் பெற்று அகக்கண்ணால் காணப்பெற்றேன், 'என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்னும் நிலை எய்தினேன "அவ்வடியார்

குழாங்களுடன் கூடுவது என்று கொலோ" என்னுமவா வளர்ந்து இப்போது உன் திருவடிகளைப் பற்றினேன்" என்கின்றார்.

இறைவன் அடியிணைகளே அடியார் பெறும் பயனாக வேண்டுவது. 'கலௌ வெங்கடநாயகஹ' என்பது புராண மொழி. கலியுகத்திலே திருவேங்கடவனே அடியார் துயர் தீர்க்கும் கண்கண்ட தெய்வம் என்பது இதன் பொருள் ஆகையாலேயே 'எனக்கு வயிற்று வலியைப்போக்கும், எனக்கு பிள்ளைப்பேறு தாரும், எனக்குச் செல்வம் கொடும்' என்றெல்லாம் மக்கள் அவனை வேண்டுகின்றனர் ஆழ்வார்களும் செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே! நெடியானே வேங்கடவா' என்றும் திருவேங்கடமாமலை தொழ நம் வினை ஓயுமே என்றும் பலவாறாகப் போற்றக் காண்கின்றோம். அப்படியிருகக நம்மாழ்வார் இவை எனக்கு வேண்டும். என்று கேட்கமாட்டார் எப்போதும் உன் திருவக் கீழ்க் குற்றவேல் செய்வதே எனக்கு வேண்டும் என வேண்டுவார்



( முற்றும் )